ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# ரமண ஞான போதம்

முதற் பாகம்

## மெய்த்தவ விளக்கம்

இயற்றியவர் :

ஸ்ரீ முருகனார்

பதிப்பாளர் :

ஸ்ரீ ரமண கேந்திரம் - புது தில்லி

முதற் பதிப்பு 1978
மறு பதிப்பு 1997

கிடைக்குமிடம் :—
ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை,
திருவண்ணாமலை-606 603, தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Arunachalaramana Nilayam,
11, Sri Ramana Nagar,
Tiruvannamalai-606 603, Tamil Nadu.

Ramana Kendra,
20, Alamelumangapuram,
Mylapore, Chennai-600 004

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the
Government of India, Ministry of Education &
Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied
by the Government of India at concessional rates.

அச்சிட்டோர் :
விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பதிப்புரை

(மறுபதிப்பு)

ஸ்ரீ முருகனாரின் "**ஸ்ரீ ரமண ஞான போதம், முதற் பாகம், மெய்த்தவ விளக்கம்**" என்ற இந்நூல் மக்களிடையே நன் மதிப்பு பெற்று இப்பொழுது அதன் மறு பதிப்பு வெளியிடப் படுகிறது. ஸ்ரீ முருகனார் அவர்களின் விலைமதிப்பற்ற ஞானப் பொக்கிஷங்களான இந்த நூல்கள் மக்களால் மிகவும் பாராட்டப்படுவதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

முதலில் **ஸ்ரீ ரமண ஞான போதம்** என்ற நூல் வரிசை ஏழு பாகங்களாக வெளியிடப் படலாமென்று எண்ணியிருப் பினும். அது இப்பொழுது ஒன்பது பாகங்களாக பெருகி, இறுதி பாகமாகிய "**ஸ்ரீ ரமண ஞான போதம் — உபதேச விளக்கம், மூன்றும் பிரிவு**" 1996 நவம்பர் மாதம் 3-ம்தேதி தில்லியில் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ முருகனார் அவர்களின் அனைத்து பதிப்புகளையும் அடையப்பெற்று ஸ்ரீ முருகனாரின் உள்ளத்திலிருந்து ஊற் றெடுத்து வெளிப்படும் உணர்வுகளை பருகி மக்கள் பயனடை வார்களாக.

மே, 1997

ரமண கேந்திரம்
புது தில்லி

# பதிப்புரை

பகவான் ஸ்ரீ ரமண மகர்ஷிகளைத் தமது ஞான சற்குருவாகக் கண்டுகொண்டு, பகவானையே அனன்னிய பக்தி செய்து, பிறவிப் பயனுற்றவர் ஸ்ரீ முருகனர். அவரது ஆன்மஞானப் பேறு, தமிழ்ப் புலமை, பேரடக்கம். குருபக்தி, அமைதி யாகிய தெய்வீகப் பண்புகள் யாவும் இந் நூலின்கண் மிளிர்வதை தமிழறியும் மெய்யன்பர்கள் எளிதில் உணரலாகும். அவற்றை முன்னுரையில் ஸ்ரீ சாது ஓம் விரிவாக எடுத்துக் கூறியிருப்பதால் இங்கு மேலும் விளக்க வேண்டியதில்லை.

சுமார் முப்பதினுயிரத்துக்கும் அதிகமான இனிய செந்தமிழ்ப் பாடல்களைத் திருத்தமான சங்க காலத் தமிழ் நடையில் யாத்துத் தமிழுலகத்திற்கு என்றுங் குன்ருததோர் பெருநிதியைத் தேடிவைத்தவர் ஸ்ரீ முருகனர். இவற்றுள் இதுவரை அச்சு நூலாக அன்பர்களாலும், ஸ்ரீ ரமணுசிரமத்தாலும் வெளியிடப் பட்டவை நீங்கலாக, இன்னும் அச்சிடப்படாமல் சுமார் பதினுன்காயிரம் (14,000) பாடல்கள் உள்ளன. இவற்றை அச்சிட்டு வெளியிடுவது தில்லி ரமண கேந்திரம் ஏற்றுக்கொண்டுள்ள திருப்பணிகளுள் ஒன்ருகும்.

ஸ்ரீ முருகனருடன் 1946 முதல் தொடர்பு கொண்டு அவரது பாடல்களின் அருட்சுவையிலூறி, அவை யாவற்றையும் பிரதி செய்து பத்திரப்படுத்திவைத்தவர் ரமண பக்தர் ஸ்ரீ சாது ஓம் அவர்கள். ஸ்ரீ பகவானுடனும் ஸ்ரீ முருகனருடனும் கொண்ட அணுக்கத் தமிழுறவின் மிகுதியால் தமது கவித்துவத்தை மாற்றேற்றிக்கொண்ட ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள், 'பாம்பின் கால் பாம்பறியும்' என்றவாறு, அருட்கவியான ஸ்ரீ முருகனரது தமிழ்க் கவிகளின் அருமையையும், இனிமையையும், பெருமையையும், தெய்வத் தன்மையையும் நன்கறிந்தவர். இக் காரணத்தை முன்னிட்டே ஸ்ரீ முருகனர், "எனது பாடல்களுள் எவை, எப்போது, யாரால் அச்சிடப்படுவதாயிருந்தாலும் அவற்றைத் தொகுப்பதிலும், அச்சுப் பிழையின்றிக் கவனிப்பதிலும் சாது ஓம் ஈடுபடுவதானுல் மட்டுமே அவை வெளியிடப்

படட்டும் " என்று உறுதியாகக் கூறி விட்டனர். அவ்வாறே ஸ்ரீ ரமணாசிரமத்தால் வெளியிடப்பட்ட ஸ்ரீ ரமண சந்நிதி முறை—மூன்றாம் பதிப்பு, குருவாசகக் கோவை—இரண்டாம் பதிப்பு ஆகிய இரு நூல்களும் ஸ்ரீ சாது ஓம் அவர்களாலேயே தொகுத்துதவப்பெற்று அச்சிடப்பட்டுள்ளன. எனவே, ஸ்ரீ முருகனார் அவர்கள் தமது பாடற் பகுதிகளையெல்லாம் ஸ்ரீ சாது ஓம் அவர்களிடமே ஒப்படைத்துப் பூரண திருப்தியோடு 1973-ஆம் ஆண்டு ஆகஸ்டு 28-ஆம் தேதி (ஆவணி அமாவாசை) யன்று உடல் நீத்தார். அவ் வமயம் ஸ்ரீ சாது ஓம் அவர்களின் உள்ளத்தில் உதித்த,

பண்புற்ற ஞானப் பழந்தமிழின் றீங்குரலா
லெண்பத்து மூவாண் டிசைத்த குயில் - மண்பெற்ற
மாதவச் செல்வம் மகாரமண வான்பறந்து
போதலுற்ற தென்செய்வீர் போம் !

என்ற இரங்கற் பாவும், ஏனைய ரமண பக்தர்களைத் தேற்று முகத்தால்,

முருகனா ரென்றான் முழுநான் குடலோ
முருகனார் பாலன்பு மூண்டீர் — முருகனார்?
அண்ணா மலைரமண ஞதிசிவன் றனளித்த
* கண்ணே முருகனெனக் காண்.

என்னும் தேற்றப் பாவும் அவருக்கு ஸ்ரீ முருகனாரிடம் ஆழ்ந்து ஒன்றிக்கிடந்த உள்ளன்பைத் தெள்ளத் தெளிவிக்கின்றன.

இவ்வாறு உள்ளன்போடு ஸ்ரீ முருகனாரது பாடல்களை அச்சிடும் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு, அதே நோக்கமுடைய தில்லி ரமண கேந்திரத்திற்கோர் இலக்கிய உதவிக்கரமாக இருந்துவரும் ஸ்ரீ சாது ஓம் அவர்களிடமே, ஸ்ரீ முருகனாரது அச்சிடவேண்டிய எல்லாப் பாடல்களையும் ஓர் பெட்டகத்திலிட்டுப் பெருஞ்சுமை ஏற்றி வைத்துள்ளது நமது கேந்திரம்.

இப் பாடல்கள் யாவற்றையும் 'ஸ்ரீ ரமண ஞான போதம்' என்ற பொதுப் பெயர் கொண்டதோர் பெரு நூலாகத் தொகுத்து

---

* கண் - ஞானம்

வரிசைப் படுத்தி, ஏறக்குறைய ஈராயிரம் பாடல்களடங்கும் ஏழு சிறு நூல்களாக ஸ்ரீ சாது ஓம் அவற்றை உருவாக்கி வருகின்றார். அவ் வேழினுள் முதலாவதே 'மெய்த்தவ விளக்கம்' என்னும் சிறப்புப் பெயர்கொண்ட இவ் வெளியீடாகும். பெரும் பகுதி குறளும் மற்றவை கொச்சகக் கலிப்பாவுமாக 2145 பாடல்கள் இந் நூலில் இடம் பெறுகின்றன.

கிடைத்தற்கரிய ஞான பொக்கிஷமான ஸ்ரீ முருகனாரது "ஸ்ரீ ரமண ஞான போதம்" ஒரிரு கையெழுத்துப் பிரதிகளாக மட்டுமே இதுவரை இருந்து வந்ததால் இவ்வாறே இது நின்று விட்டால் பிற்காலத்தில் தமிழ் மக்களுக்குக்கிட்டாமல், பண்டைத் தமிழ் நூல்கள் பலவற்றைப் போலவே இதுவும் சிதைந்து மறைந்துவிடக் கூடுமோ என்ற அச்சத்தால், சில அச்சுப் புத்தக வடிவில் இது தமிழ் மக்கள் பலரிடமும் பாதுகாக்கப்பட் டுள்ள அச்சேட்டுப் பிரதிகளாகவாவது நிலைத்திருக்கட்டும் என்ற நன்னோக்கத்தோடு இந் நூல் வெளியிடப் படுகின்றது.

அன்பர்பணி செய்யவென்னை யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தாமேவந் தெய்தும் பராபரமே!

என்ற ஆன்றோர் மொழிக்கிணங்க, உத்தம, ரமண சற்சீடரான ஸ்ரீ முருகனாரது நூல்களை வெளியிடும் திருப்பணியில் இக் கேந்திரத்தை ஆளாக்கி, ஸ்ரீ சாது ஓம் அவர்களின் பேருதவியைக் கொண்டு இப் பணியை நிறைவேற்றிவரும் ஸ்ரீ பகவானருளை வியந்து பணிகின்றோம்.

ரமண கேந்திரம்
புது தில்லி

15-8-1978

ஓம்
நமோ ரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## முதற் பகுதி

# மெய்த்தவ விளக்கம்

திருவருணை ஸ்ரீ நடனாநந்த சுவாமிகள் வழங்கிய

## சிறப்புப் பாயிரம்

---

(வெண்பா)

1. தென்முகனே யென்னத் திகழ்ந்தரம ணாரியன்றன்
பொன்னடிசேர்ந் தின்பம் புணர்முருகன்—றன்னிலையைத்
தேற்றியதன் சற்குருவின் செம்மொழியைப் பல்லுலகும்
போற்றிடுமா றெண்ணியான் போன்ம்.

2. அந்நோக்கத் தைய னனுபூதி வாக்கையெலாந்
தன்னேட்டிற் றீட்டித் தவமுயலும்—பின்னோர்க்குத்
துல்லியமெய்ந் நூலாய்த் தொகுத்துதவி செய்தனன்றான்
றெல்லறிஞ ராற்றைத் தொடர்ந்து.

3. குகவேளின் கூறாய்க் குவலயம் போற்றும்
பகவா னருள்வழியைப் பற்றிச்—சுகமார்தற்
கெல்லா விதவுத் தியுமெடுத் தோதினான்
பல்லா யிரம்பாக்க ளால்.

4. தீதறுமிச் சீரியநூல் சீரமண ஞானசற்
போதமெனு நற்பேர் புனைந்துசங்—கேதமற
நானாரென் றாய்வார்க்கு நற்றுணையா நின்றவரைத்
தானாகச் செய்யுந் தகைத்து.

5. தகுதிக் கியைந்த தலைபுக்க ளேற்கும்
பகுதிகளிற் பாக்க ளனைத்தும்—தொகுதி
யுருப்பெற் றிடவொப் புரவிலிந் நூலைச்
சரிபடுத்தி னன்சாது ஓம்.

6. ஒளிபெறுமா றேுதி யுணர்வா யிருப்பித்
தளிதருமிச் சாதனநூ லச்சாய்—வெளிவரநற்
சாதுஓம் செய்த சகாயத்தின் மேன்மையை
யோதுநல் லார்போற் றுவார்.

7. சான்றோர் மருங்கில்வாழ் சாமிநா தச்செம்ம
லான்றோன் றிடங்காணற் சாதனமாத்—தான்றேர்ந்
தரியவிம் மெய்ந்நூலை யச்சிட்டா னன்மை
புரியுமா றுவிப் புவிக்கு.

8. ஆண்டரம ணேச ரருள்செய்த சாந்திநெறி
யாண்டு முலகி னிலைத்திலக—வேண்டுமென
வன்று முருகனக மார்ந்தநற் சங்கற்ப
மின்றுநிறை வாயதிவ ணால்.

9. பொங்கு சுகரமண ஞானபோ தத்துமுத
லங்கமா மிந்நூ லறிவுறுத்தும்—துங்கமுறு
மெய்த்தவத் தேய்வார் வினைமூன்று மற்றபர
முத்தரா வார்மூனைப் பற்று.

10. முகவா புரிமுருக னுரைமுன் னிட்டுப்
புகழார் சுழிரமண போதன்—புகலகத்தின்
* குதுதவி ராற்றின் சுலபமா யிவ்வகந்தைப்
பேதுதவி ராறில் பிற.

(வாழி வெண்பா)

வாழியழ கம்மையொடு வண்சுந் தரநாமம்
வாழி சுழியல் வளர்நாமம்—ஊழிபல
வாழி குருரமண மாநாம மெய்ஞ்ஞான்றும்
வாழியரு ணாசலநா மம்.

ஸ்ரீ ரமணார்ப்பணம்

* குதுதவிர் ஆற்றின் சுலபமாய்ப் பேது தவிர் ஆறு பிற இல் எனப் பிரித்துப் பொருள் கொள்க.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

# முன்னுரை

ஸ்ரீ முருகனார்:—

தமிழுக்கு இதுகாறும் உண்மைப் பெருமையைத் தேடி வைத்துச் சென்றோர் அருட் புலமை பெற்ற தெய்வப் புலவர்கள் மட்டுமே யாகும். இறை மண மற்ற தமிழ்க் கவிகள் நறுமண மற்ற காகிதப் பூக்களே யாதலின், தமிழன்னையின் எழில் இவற்றால் சோபித்த தில்லை. அனபாய சோழனுக்குச் சேக்கிழார் அறிவுறுத்திய உண்மையும் இதுவே. அவ்வண்ணமே, இந் நூற்றாண்டில், பக்திப் பசும் பொன்னில் ஞான மணிகளைப் பொதித்த தீந்தமிழ்ப்-புத்தணிகலன்கள் பலவற்றை இழைத்துப் பூணுவித்துத் தமிழன்னையை அருளெழில் ஓங்கச் செய்த செந்தமிழ்ப் புலவர் ஸ்ரீ முருகனார். முறையாகத் தமிழைக் கற்ற றிந்த மூதறிஞராய இவர் தம் வாணாளின் காலையிளம் வேளை யிலேயே கவியூற்றுக் கண் திறக்கப்பெற்றவ ராயு மிருந்தார்.

சத்துவ குணம் மேலிட்ட உத்தம உள்ளங்களாயின் அவை காந்திஜியின் தியாக வாழ்க்கையிற் கவர்ச்சி யுறுதல் இயல்பே யன்றோ? அதற்கியைய, பிறவியிலேயே பண்பட்ட உத்தமப் பக்குவ மனநிலையைப் பெற்றிருந்த ஸ்ரீ முருகனாரும் தமது இளமையில் காந்தீயக் கவர்ச்சிக்கு உட்பட்டு நின்றதில் வியப் பொன்று மில்லை. பிற்காலத்திற் சத்தியப் பொருளையே சாட் சாத்கரித்த ஸ்ரீ முருகனார் அக்காலத்திற் சத்திய சோதனை செய்து கொண்டிருந்த மகாத்மாஜியின் தேச சேவையைப் போற்றிச் 'சுதந்திர கீதம்' என்ற அரியதோர் தேச பக்திப் பாடல் நூலை இயற்றினார். ஆனால் அப்போது சத்திய சொரூபமாகவே பிர காசித்துக் கொண்டிருந்த பகவான் ஸ்ரீரமணரை அவர் அறியாத காலம். திருவருள் வசத்தால் தன் சற்குருவான ஸ்ரீரமண பகவானைச் சந்தித்த பிறகு ஸ்ரீமுருகனாரது அகவாழ்வு புறவாழ்வு

இரண்டுமே மாறி யமைந்ததோடு, முதிர்ந்திருந்த அவரது தமிழ்ப் புலமைப் புலனுள்ளும் ஓர் புத்துயிர் புகுந்தது! சற்குருவைச் சந்தித்ததால் தம்முள் விளைந்த இம் மறுமலர்ச்சியை அவர்,

" வித்தாரம் பேசிவரும் விற்பனரெல் லாருமுழுப்
பித்தாகப் பேதுறுக்கும் பெம்மானை வேங்கடனைச்*
சத்தாய தத்துவனைச் சந்தித்தேன் சாவாது
செத்தவா நாம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ."

என்கிறார். அதுவரை, தேகாபி மானத்தையே மூலமாகக் கொண்டெழும் பாஷாபிமானம், தேசாபிமானம், லோகாபிமானம் முதலிய அபிமானக் கலப்பாற் குழம்பி ஆரவாரித்திருந்த அவரது உள்ளவெள்ளம் இப்போது அருளான்மக் கலப்பால் தெளிவும் அமைதியும் பெற ஆரம்பித்தது. 'ஓர் மொழியே, ஓரினமே, ஓர் நாடே தன்னுடையது' என்ற குறுகிய மனப்பான்மை யொழிந்து, அனைத்துலகிற்கும் அனைத்துயிருக்கும் ஆதாரமும் சமமு மான ஆன்மநேய அருளுணர்வு எழுந்தது. புலவர் திலகங்கள் பலரும் போற்றிப் பணியத் தக்க ஆற்றலும் அறிவும் செறிந்த அருட்பாடல்கள் அவரது நாவி லுதித்தன.

" அன்னியமல் லாதசுத் தான்மசொரு பானுபவத்
தென்னை யழுத்தியபே ரின்பப் பிரானடியிற்
சென்னி யுறவணங்கிச் சிந்தை கசிந்துருகித்
துன்னியமெய் யன்புணர்வாற் சொல்லுமென்வாய்
நல்லிசையே."

என்று அவர் நா ஞான நல்லிசை மீட்டிற்று! பண்டைச் சங்க காலப் பெருந்தமிழ்ப் புலவோரின் கம்பீரமான தமிழ்நடை முயற்சி யின்றியே முருகனாரது சகஜநடையாகத் தவழ்ந்தது. மணிவாசகத்தின் மாணிக்க வொளியும், வள்ளுவரின் தெள்ளிய தீர்ப்பும், அப்பர் பெருமானின் அன்புக் கனிவும், இறைவனிடம் சுந்தரர் கொண்டாடிய சொந்தமும், ஆளுடைப் பிள்ளையின்

---

* 'வேங்கடன்' என்றது ஸ்ரீ ரமண பிரானது பிள்ளைத் திருநாமத்தைக் குறித்து ஸ்ரீ முருகனார் தம் பாடலில் இயல்பாகக் கையாண்டதோர் திருநாம மாகும்.

ஞானத் திட்பமும் சேர்ந்து மிளிருந் தீந்தமிழ்ப் பொழிலாய் விளங்குகின்றது முருகனு ரியற்றிய 'ஸ்ரீ ரமண சந்நிதி முறை' என்னும் துதிநூல்!

ஸ்ரீ முருகனரின் குருபக்திக்கு இணை அவரே. எம்மதமும், எத் தெய்வ நாமருபமும் ஒரே பரம் பொருளையே குறிக்கோளாகக் காட்டுவன வாயினும், எல்லா மதங்களிலும் எல்லாத் தெய்வ நாமருபங்களிலும் அலையவிட்டு மனத்தை விரித்துக் கொண்டே போதல் உத்தம ஞான சாதனை யாகாது என்ற உண்மையைக் கண்டவர் ஸ்ரீ முருகனர்! ஆதலால், 'ஒருவனைப் பற்றி ஒரகத் திரு; குரு மூர்த்தி ஒன்றே திரிமூர்த்தியுமாம்' என்ற பேருண்மைப்படி, தமது சற்குரு ரமணரின் திருநாமத்தில், திருவுருவத்தில் ஊன்றுவது தவிர, மனம் நானாவாய் விரிந்து மெலிந்து சிதருமல், ஏகபக்தி பூண்டவரானர்.

"சொல்லாச்செஞ் சொல்லாலோர் சூக்குமந்தே றத்தெரித்த
நல்லானை யன்றியென் னுவாற் பரவேனே."

"...என்னைநீ யாகச் செய்த விறைவனே ரமண தேவே
உன்னையே யல்லால் வேறோ ருறுதெய்வ முணர்ந்தி லேனே."

"...வாவாவென் றென்னை வருவித்துப் பேரின்ப வாழ்வளித்த
கோவா கியரம ணுங்குறு கேன்பிறர் கோயில்களே".

என்பன போன்ற அவரது எத்தனையோ பாடல்கள் இதனை விளக்குவனவா யமைந்துள்ளன. "புண்ணியத் தீர்த்தங்கட்கும் புனிதச் சேத்திரங்கட்கும் யாத்திரை செல்கிறோம்; தாங்கள் எங்களுடன் வருவீர்களா?" என்று ஒரு முறை அன்போடழைத்த அன்பர்களுக்கு ஸ்ரீ முருகனர், "நான் அங்கெல்லாம் வந்து என்ன பார்க்க முடியும்? ஞான மகா சூரியனான ரமணனைக் கண்ட அப்போதே, அப்பரமான்ம வொளியால் என் கண்கள் குருடாகி விட்டன! பிறகு இக் குருட்டுக் கண்களால், எங்கு போய் என்ன பார்க்க என்னு லியலும்?" என்று தான் பெற்ற ஆன்மஞானப் பேரொளிக் கண்ணைக் 'குருட்டுக் கண்' எனத் தன்னடக்கத்துடன் வினயமாகத் தெரிவித்தார்!

"இதுகாறும் வேத வேதாந்தங்களிலுங் காணக் கிடைக்காத பல் இரகசிய ஞானப் பேருண்மைகளை யெல்லாம் தமது சுவானு

ப்வத்தி னின்றும் உணர்ந்து ஸ்ரீ ரமண பிரான் பெரிதும் தம் தாய் மொழியாகிய தமிழிலேயே இணையற்ற உபநிடதமாக இவ்வுலகுய்ய இசைத்து வந்தனர். ஆங்கிலத்தில் வினவியவர்க்குங் கூட பகவான் தமிழிலேயே பதிலுரைப்பது வழக்கம். தமக்கு நல்ல ஆங்கிலம் தெரிந்திருந்துங் கூட பகவான் தமிழிலேயே விடையளித்து வந்ததற்கு 'அது நம்மவரது பெரும்பேறே' என்று கூறுவதைத் தவிர வேறு தக்க காரணங் காணமுடியவில்லை! மேலும் அவ்வாறு பகவானிடமிருந்து ஆழ்ந்த அறிவுரைகள் வெளிவருங்கால் அவை சிலசமயம் சீரிய செந்தமிழ்ப் பாக்களாகவும், சில சமயம் வசனங்களாகவும் அமைவ துண்டு. சந்நிதியி லமர்ந்திருக்கும் தமிழறியாத அன்பர்கள், 'பகவான் என்ன சொல்கின்றார்? என்ன கருத்துக் கொண்டுள்ளார்? மொழி பெயர்த்துச் சொல்லுங்கள்' என்று மற்றவர்களைக் கேட்டே ஆங்கிலம் முதலிய பிற மொழிகளில் ஸ்ரீ ரமணோபதேசங்களை உணர முயன்று வந்தனர். ஆனால் அவ் வுபதேசங்களின் சரியான பொருளையும், பகவானது கூற்றுக்களில் மறைந்துள்ள உட்கிடக்கையையும் நேர்முகமாக உணரும் பேறு அங்கிருந்த தமிழ் மக்களுக்கே—அதிலும் பக்குவர் சிலர்க்கே — வாய்த்த பாக்கியமா யிருந்தது! அவர்களுள் ஸ்ரீ முருகனார் ரமண போதனைகளின் சரியான பொருளை உள்ளவாறு கண்டறிந்து பிறர்க்கும் பகிர்ந்தளிக்க வல்லவராய் விளங்கி வந்தார். இக் காரணத்தால்தான் எந் நாட்டினராயினும் எம் மொழியினராயினும் ஸ்ரீ ரமணோபதேசக் கருத்துக்களைப் பற்றிய யாதேனுமோர் ஐயப்பாடு தோன்றும் போதெல்லாம், ஸ்ரீ முருகனார் தொகுத்தளித்த ரமணோபதேசக் கோவையான 'குருவாசகக் கோவை' யைச் சார்ந்தே அவ் வையங்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டி யிருக்கின்றது. சுருங்கக் கூறின் 'ஸ்ரீ ரமணப் பிரஸ்தானத் திரயம்' எனப்படும், உள்ளது நாற்பதும், உபதேச வுந்தியாரும், குருவாசகக் கோவையும் ஸ்ரீ முருகனாரை முன்னிட்டே உலகுக்குக் கிடைத்த ஸ்ரீ ரமண பகவத் பிரசாதங்களாகும்.

திருக்குறளை அதற் கேற்ற உண்மையான நற்பொருள் கண்டு, ஓதி, யுணர்ந்து, கசடறத் தான் கற்ற அதற்குத் தக நிற்கத் தெரிந்தவர் ஸ்ரீ முருகனார். ஆதலின் திருக்குறள் முழுவதும் ஸ்ரீ முருகனார் வாயிலாக உரை கேட்கப்படி னல்லால் அது

தவருகத் தான் பொருள் கொள்ளப்படும் என்பதை இங்குக் கூற வேண்டியே யுள்ளது. வள்ளுவர் நடையிலேயே தன் தமிழ் வாக்கைச் செலுத்துவதில் இணையற்றவர் ஸ்ரீ முருகனுர். அது மட்டு மன்றி, குறட்பாக்களைத் தமது வெண்பாக்களின் ஈற்றிரண் டடிகளாகப் பொருத்தி, அதன் மூலமாகவே அக் குறளுக்குரிய சிறப்புப் பொருளை விளக்க வல்லவரா யிருந்தார். இதற்குச் சான்று ஏராளமா யிருக்கின்ற தேனும் ஒரு சில மட்டுங் கீழே தரப்படுகின்றன.

"யாவ னெதனை யிடைவிடா தெண்ணுவா
னுவனது வாகவத னுற்றலா—லார்வமொடு
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்."

—குருவாசகக் கோவை 750

"ஒரா விடத்தளதா யோர்க்குமிடத் தில்லாத
பாராதி யாய பகிரண்டம்—ஓராதே
ஒர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டாப் பிறப்பு."

—குருவாசகக் கோவை 749

"சுட்டறிவு நோக்கத் துலங்கா வருள்விளக்குஞ்
சுட்டறிவு கெட்டாற் றுலங்குவதாம்—பெட்டுமிக
யானெனக்குங் காலை நிலனெக்கு நோக்காக்காற்
றுனெக்கி மெல்ல நகும்."

—குருவாசகக் கோவை 646

செப்படி வித்தையாகிய சித்திகளைப் பெறுவதோ, அவ்வாறு பெற்றுக் குருடனை நடத்துமோர் குருடனுகிக் குருபீடம் வகிப்பதோ, அல்லது செகம் புகழ்ந்து மாலை சூட்டச் செதுக்கி வார்த்துத் தெரு நடுதன் சிலைநாட்டிச் சிறப்புச் செய்வதோ, பக்தரெலாம் புடைசூழ்ந்து பணிந்து வீழப் பாத பூசைக்கிருகால் பரிந்து நீட்டுதலோ, பத்திரிகை யாவுந் தன் படத்தைத் தாங்கிப் பதிப்பிக்க நகரெங்கும் பவனி வருதலோ, மற்றும் இன்னோரன்ன பலவித மேன்மைகளைப் பெறுவதோ, பகவான் ரமணரைப் பரம குருவா யடைவதன் உண்மைப் பயன் அல்ல என்று நன்

குணர்ந்திருந்தவ ராதலால், ஸ்ரீ முருகனாரை உலக மக்கள்— ஏன் தமிழ் நாட்டினர் யாவருங்கூட, அதிலும் கற்றாருட் பலருங் கூட— சரியாக அறிந்திருந்தனர் என்று கூறமுடியாது. "உலகியல் துறந்து, அருணாசல ரமண சற்குருவை அடைந்த பிறகு நீர் என்ன ஆனீர்? எங்குள்ளீர்? எவ்வா றுள்ளீர்?" என்று அவரது பழைய நண்பர்கள் வினவியதற்கு,

"பரமார்த்த மோனவருட் பார்வையாற் றன்மெய்
யுருமாத் திரமா யுளேன்"

"கற்பனையி னீங்கிக் கழன்றெழுந்தேன் கைவல்யச்
சிற்பரமா வுள்ளேன் சிவத்து"

"உற்றவனு பூதி யுரைக்கெனநீர் கேட்கின்றீர்
மற்றயலே தேரும் மயக்கமனக் கற்பனைதீர்
முற்றறிவா வுள்ளத்து மூண்டொளிர்மோ னடையப்
பெற்றிரோர் கைவல்யம் பேச வியல்வதன்றே!"

"என்றுந்தை யானை யிறைவன்செம் பொன்னடியே
பொன்றாத வுண்மைப் பொருளாக வுள்ளத்து
நன்று வொளிர்சொரூப ஞானானு பூதியால்,
ஒன்றான சுத்த வொளிவெளியா வுள்ளேனே."

என்று விடையிறுக்கும் அவரது பாடல்கள், பரமார்த்தமான ஆன்ம ஞானப் பேற்றையே புருஷார்த்தமாகப் பெற்றுய்ந்தவர் என்பதையும், அதன் மூலம் பகவான் ஸ்ரீ ரமணரது அருட் பிரசாதக் கொடைவண்மையையும் நாம் நன்குணர விளங்கு கின்றன.

இங்ஙனம் எண்பத்து மூவாண்டுகள் வாழ்ந்து மெய்த் துறவின் இலக்கியப் புருடராய் விளங்கிய ஸ்ரீ முருகனாரது செந் நா ஆக்கையின் தளர்மூப்புக் காலத்திலும் தளராக் கவியோட்ட முள்ளதாகவே இருந்து வந்தது. கைகள் தளர்ந்து, விரல்கள் எழுதுகோலை நோக்க விடாத நிலையிலுங்கூட, தினந் தோறும் அவரது நாவில் ஊறிவந்த நற்றமிழ்ப் பாக்களை அவர் சொல்லச் சொல்ல நான் எழுதி வந்ததுண்டு. ஆனால் அப் போதும் தெளிந்து திரப்பட்டிருந்த மதியினராய், உடலின் வாணு ளிறுதிவரை வரையாது வழங்கிய செந்தமிழ்க் கொண்ட லாகிய மகா கவி.

ஆண்டுபிர மாதீசத் தாவணியீ ராறுசெவ்வாய்
மீண்டுமமா வாசிமக விண்மீனி—லீண்டடைந்தார்
நாழிகைநான் கின்முருக ஞர்விதேக கைவல்ய
மாழிரம ணப்பதத்தி லாழ்ந்து.

ஞானத் தமிழ் நாயகமாய்ப் பெருந்தகுதி பெற்றிருந்தும்,

எல்லா வுலகுந் துரும்பா யினுமறைக
ளெல்லாமே கைக்குள் ளிருந்தாலும்—பொல்லாப்
புகழ்ச்சியாம் வேசிவசம் புக்கா ரடிமை
யகலவிட லம்மா வரிது."

—உள்ளது நாற்பது—அநுபந்தம்—37

என்ற தனது சற்குரு ரமணரின் போதனைக் கியைய ஒழுகு வோராய், புகழென்னும் வஞ்சப் பெரும் படுகுழியின் வ்ழி, மறந்துஞ் சஞ்சரியாத மாண்பு மிக்காராய் வாழ்ந்திருந்த காரணத்தால், உலக மக்களுட் பெரும்பாலோர் ஸ்ரீ முருகனரை அறிந்து கொள்ள முடியாம லிருப்பதை எண்ணியே, இம் முன்னுரை சற்று விரிவுறுவதையும் பொருட்படுத்தாது இது கூற வேண்டிய தாயிற்று. மெய்யடியார்களின் சிறப்பை உள்ள படி விளக்கப் புகின், "பாட்டுக் கடங்காநின் பத்த ரடிப்புகழ் போல் ஏட்டுக் கடங்காது..." என்ற வள்ளலாரின் வாக்கைத் தான் இம் முன்னுரை மெய்ப்பிக்கின்றதென்று கண்டு, சற்று மனந்தேறி யமைகின்றேன்.

**ஸ்ரீரமண ஞான போதம்:**

கடல் வெள்ளமாகப் பெருக்கெடுத்து வந்த ஸ்ரீ முருகனரது தமிழ்ச் செய்யுட்கள் முப்பதினுயிரத்துக்கும் அதிகமாகும். தமிழகத்தில் இது வரை தோன்றிய புலவர் பெருமக்களுள் எண்ணிக்கையில் மிகுந்த பாடல்களை யாத்த மகா கவிகளுள் ஒருவராய் எண்ணப்பட வேண்டியவர் ஸ்ரீ முருகனர். அவரது பாடல்கள் யாவும் பொதுவாக, தோத்திரம், சாத்திரம், சுவாநு பவம் என்னும் முப்பெருந் தொகுதிகளாகப் பிரிக்கத் தக்கன. இவற்றுள் ஸ்ரீ ரமண சந்நிதி முறை, ஸ்ரீ ரமண தேவ மாலை, ஸ்ரீ ரமணநுபூதி—முதல் இரண்டாம் பாகங்கள் முதலிய பல தலையங்கங்களைக் கொண்டு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

பலவும் தோத்திரம் எனலாம். பரமார்த்த தீபம் என்னும் குருவாசகக் கோவையானது ஸ்ரீ ரமணோபதேசங்களாக மிளிரும் சாத்திர மாகும். அச்சுநூல்களாகி வெளிவந்த இவை தவிர, அச்சிடப்படாதுள்ள சுமார் பதினொன்காயிரத்துக்கும் அதிகமான பாடல்கள் யாவும் சுவானுபவ மாகக் கூறலாம்.

இவைகளுள் கொச்சகக் கலிப்பாக்களான சுமார் நான்கா யிரத்து ஐந்நூறு பாடல்களும் ஸ்ரீ முருகனார் அடைந்த ரமணா னந்த பரவசத்தைச் சித்தரிக்கின்றன. திருவருட் குறள் எனத் தக்க வண்ணம் திரண்டுள்ள சுமார் ஐயாயிரம் குறட்பாக்களும் ஸ்ரீ முருகனாரது திருவருட் பேற்றைக் கூறுகின்றன. வெண்பாக் களாக வமைந்த சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு பாடல்களும் அனுபூதி வெண்பாக்களே எனலாம். கண்ணிகளாக அமைந் துள்ள இரண்டாயிரம் பாடல்களும் ஸ்ரீ ரமண திருவடிச் சிறப்பைத் தமதனுபவத்தினின்றுங் கூறுவதா யமைந்துள்ளன.

இவை யாவற்றையும் பாக்களின் கருத்துக்களுக் கேற்பப் பகுக்கும் போது, சுமார் முந்நூறு தலைப்புக்களின் கீழ் அமை கின்றன. திருவடிச் சிறப்பைக் கூறும் பாத மாலைக் கண்ணி களைத் தவிர மற்றவற்றைப் பா இனங்களின் படித் தொகுக் காமல், கருத் தொற்றுமையின் படித் தொகுத்து நூல் வடிவு கொடுப்பதே சிறக்கும் எனத் தோன்றுவதால், இப்பதினொன் காயிரம் பாடல்களையுங் கொண்ட பெருந் தொகுதியை, '**ஸ்ரீ ரமண ஞான போதம்**' என்ற பொதுப் பெயர் கொண்ட தோர் பெரு நூலாகக் கொண்டு, அதனுள்ளிட்ட முந்நூறு தலைப்புக்களையும் ஏழு சிறு உள் நூல்களாக்கி, அவ் வொவ்வொரு நூலிலும் அடங் கும் பாக்களின் கருத்துக்களுக் கேற்ப, அவ்வேழு நூல்களுக்குந் தனித் தனிச் சிறப்புப் பெயரொன்றிட்டு, சிறுகச் சிறுக, ஒன் றன்பின் னொன்றாகப் பதிப்பிப்பதாகத் தீர்மானிக்கப்பட் டுள்ளது. இவ்வாறு, ஸ்ரீ ரமண ஞான போதத்தின் முதற் பகுதி யாக வெளி வருவதே 'மெய்த்தவ விளக்கம்' என்னும் இந்நூல்.

**மெய்த்தவ விளக்கம்:**

அறம் எது? பொருள் எது? இன்பம் எது? என்று விளக்கிக் கூறிய பிறகு, '... பரனை நினைந் திம்மூன்றும் விட் டதே பேரின்ப வீடு' என்று ஔவைப் பிராட்டியார் தீர்ப்பளிக்

கின்றார்! இத் தீர்ப்பை அனுவும் மறுப்பில்லாது ஏற்று அமையும் பரிபாக உள்ளங்கட்கே 'மெய்த்தவ விளக்கம்' என்னும் இந் நூல் அறிவுக் கண்ணைத் திறக்குமோர் அருட் கருவியாகப் பயன்படும். அறம் பொரு ளின்பங்களை யடைவதற் காற்றும் நன் முயற்சிகள் பலவுங்கூடத் 'தவம்' என்னும் பெயரால் அழைக்கப்படுகின்றன வன்றோ? அவையாவும் மக்கள் வடிவங் கொண்டுள்ள மாக்களைச் சிறிது சிறிதாக உண்மை மக்களாக்கும் தூய முயற்சிகளே. அதனால்தான் அவைகளும் 'தவம்' எனப் பட்டன. ஆயினும் மெய்த்தவம் வேறு!

எண்ணற்ற பிறவிகளூடே முயன்று இம் முப் பேற்றை நோக்கியே முன்னேறி வரும் மனிதன் அம் மூன்றையும் பெற்று முறையாக வாழ்ந்து வருவதால், அதன் பயனாக முதிர்ந்து பழுத்த விவேகத்தால்தான் முடிவில் ஏதேனுமொரு பிறப்பில், 'பரனை நினைந் திம்மூன்றும் விடலே உண்மைப் புருஷார்த்தம்' என்ற அறிவு உதிக்கப் பெறுகின்றான். அதுவரையிலும் ஔவை கூறிய அறுதி யுரையில் அலட்சியமும், ஏளனமும், மறுப்புமே அவனுக்குத் தோன்றிக் கொண்டிருக்கும். அது மனித இயல்பே தவிர, தவறல்ல!

இவ் வுத்தம அறிவுப் பக்குவம் வந்த பிறகே இதுகாறும் 'தவம்' என்றியற்றிய காமிய முயற்சிகள் (உபாசனையாதி) யாவற்றையும் எண்ணி யலுத்துத் தலை குனிந்து 'இதுவா தவம்?' என்றவாறு ஓர் சந்தேகமும், 'எனின், எது தான் மெய்த்தவம்?' என்றறிய ஓர் பேராவலும் உதிக்கும். இவ் வாவலே முமுக்ஷுத்துவம்; இதைப் பெற்றவர்க்கே இந் நூல் ஓர் வரப் பிரசாத மாகும்.

இவ்வாறு தவத்தின் தாற்பரியம் அறிய விருப்பம் உண்டாகப் பெற்றோருள் பலர் இன்னதுதான் தவம் என்று ஞான சாத்திரங்களாலோ, அல்லது சற்குருவினாலோ உணர்த்தப் பட்டாலுங் கூட, முற்பிறவிகளில் மேற்கூறிய முப் பேறுகளில் முயன்றுழன்ற வாசனை வலிவாற் கவர்ந் திழுக்கப்பட்டு, மீண்டும் உலகியலார் மெச்சும் சித்தி, புகழ், பொருள், போகாதிகளைப் பெற வுதவும் அவங்களையே தவங்களாகக் கருதி, இழிந் தகன்று விடுவது முண்டு. அவ்வாறின்றித் தீவிர முமுக்ஷுக்களா யுள்ள பக்குவர்க்கே மெய்த்தவத்தின் மேன்மை விளங்கும்.

வீட்டைத் தருந் தவமே மெய்த்தவம் என்று விவேகித் தறிந்த பின்னும் பக்குவிகள் பலர், 'அம் மெய்த்தவத்தின் இயல் பென்ன? அதை யியற்றும் நெறியென்ன?' என்றறிய நாடித் தேடிக் காத்து நிற்கவும் வேண்டி வருகின்றது. அத்தகை யோர்க்கே சற்குரு ரமணர்,

"யானற் றியல்வது தேரி னெதுவது
தான்நற் றவம்......"

என்று மெய்த் தவத்தின் இயல்பையும், 'யான்' அறுவ தெப்படி என்று தவிக்கும் உத்தம சாதகர்க்கு,

"நானென் றெழுமிட மேதென நாடவுள்
நான்றலை சாய்ந்திடும்......"

என்று உளவையுங் கூறி, 'இதுவே ஞானவிசாரம்' என்று முடிவுங் கூறுகின்றார். ஆன்ம விசாரமே மெய்த்தவம் என்று போதிக்கும் சற்குருவின் இவ் வருள் வசனத்தில் நம்பிக்கை ஏற்படாமலோ, அல்லது ஏற்பட்டும் பூர்வ வாசனைகளின் வலிமைக் காற்றாமலோ விசார வழியை யகன்று போவார் போக, குருவாக்கிற் கொண்ட அசைக்க முடியாத திடநம்பிக் கையாற் பெறும் குருவருட்சக்தியால் வாசனைகளை வென்று, விசார நெறிமுயன்று நின்று, முடிவும் பயனும் கண்டும் கொண்டும் வெற்றிபெற்றவர் ஸ்ரீ முருகனார். இது,

"மெய்த்தவமா வென்னுள் விளங்குவது சுத்தவருள்
வித்தகமா முண்மை விறல்சான்ற மோனமே;
பொய்த்தொழிவா னமனப் பொல்லாங்கா மோகமறத்
தத்துவமா முண்மைநிலை தான்றுணைத் தங்கியதே".

என்று அவர் குறிப்பிடுவதினின்றும் நாம் அறியக்கிடக்கின்றது. தவம் முற்றிச் சுவானுபவத்தால் தவத்தின் மெய்யியல் கண்ட தால்தான் அவர் அவ் வனுபவமாம் ஆதரிசத்தோடு,

"தவத்தியல்யா தென்னின்மெய்த் தத்துவஞா னத்தால்
விவர்த்தமோ கத்தின் விடல்"

"தத்துவமெய்ஞ் ஞானந் தலைப்படச்செய் சாதனையே
மெய்த்தவமாம்; அல்ல பிற!"

என்று தவத்தின் இலக்கணங் கூறிப் பிறர்க்குணர்த்தவும் தக்கா ராயிருந்தார். இவ்வாறு மெய்த்தவத்தால் மெய்கண்டாராய் நின்று நோக்குங்கால், ஸ்ரீ முருகனரது பேரறிவுக் காட்சியிற் பிறங்குவனவே — இந்நூலின் அத்தியாயத் தலைப்புக்களா யமைந்த 'அரண், சரண், குரு, தவம், பெரியோர்' முதலான ஒவ்வொன்றின் உண்மை இலக்கணங்களைக் கூறும் ஆப்த வாக்கியப் பாக்களாவதால், தவமும் தவ விளைவுமாகிய அவை யாவும் — மெய்த்தவம் என்ற இந் நூல் வடிவாயின. பகவா னருளாற் பக்குவ ரோதிப் பயனுறுவா ராக.

சாது ஓம்

# உள்ளுறை

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## முதற் பாகம்

# மெய்த்தவ விளக்கம்

பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

(கொச்சகக் கலிப்பா)

1. அடர்சிற் கனவருட்சிற் றம்பலமாத் தேறப்
படர்வுற்ற சுத்தப் பரமான வுண்மைக்
கடவுள்வாழ்த் தாகக் கடவதென் *சிந்தைத்
தொடர்பா லுளங்கூர் துடிப்பாம் புரிப்பே. க

### 2. குரு வணக்கம்

(கொச்சகக் கலிப்பா)

2. ஆடிப்பா டிக்கூத் தடித்தவகப் பேய்முனைப்பைச்
சாடித் தொலைத்த சதாசிவசற் போதகுரு
கூடித் திளைக்கக் கொடுத்தவருட் பாதமலர்
சூடித் தலைமேற் றொழுது வணங்குவாம். க

* சிந்தைத் தொடர்பு—தியானத் தொடர்ச்சி.

## 3. பெரியோர் வணக்கம்

(கொச்சகக் கலிப்பா)

3. அடக்க வொடுக்கமா வாழ்ந்தகத்து ஞானச்
சுடர்க்கொழுந்தா மான்ம சொருபத்தே மோக
ஜடக்களிசேர் நானெனும்பொய்த் தன்மைகெடப் பாழைக்
கடக்குற்றேர் நம்மைக் கலிகடிந்தாள் வாரே. க

## 4. தியானம்

(குறள்)

4. இருப்பாக வுள்ள திதயத்தே யாண்டா
னருட்பாதம், அல்ல பிற. க

(கொச்சகக் கலிப்பா)

5. பருவரல்செய் பாசவிருட் பாரகத்து ஞானப்
பருவதமா யான்றவருட் பார்வை பரப்பிக்
குருபதத்தைப் பொற்புறுத்த கோமானும் பெம்மான்
இருபதமா மோன வொருபதஞ்சிந் திப்பாம். உ

6. இருள்விலக வுள்ளத் திருந்தொளிர்மெய்ஞ் ஞான
வருள்விளக்க மானசுத் தான்மசொரு பத்தைத்
தெருள்வடிவ மான தியானுனு பூதிப்
பொருள்வளர்வாழ் வோங்கநான் புந்திசெய்கின் றேனே. ௩

## 5. அவையடக்கம்

(குறள்)

7. சொன்னதே சொன்னதே சொல்லுங் கிளிப்பிள்ளை
யென்னவே யானிசைக்கின் றேன். க

( கொச்சகக் கலிப்பா )

8. சிந்தையற்ற மோனவருட் சீர்மையளித் தாண்டவன்றுட்
சிந்தையே முற்றநிச் சிந்தையாத் தீர்தலாற்
சிந்தியமல் லாத சிவானுபவங் கூறலருள்
விந்தையோர் கேட்கில் வெறும்பரி யாசமே. உ

9. பித்தராற் சொன்னவையும் பேதையராற் சொன்னவையும்
பத்தராற் சொன்னவையும் பன்னப் படுவனவோ?
அத்தனை நான் சொன்னவையு மவ்வாருக் கொள்வதன்றி
வித்தகரா மிக்கோர் பிழையாய்ந்து பேசாரே. ௩

## 6. ஆக்கியோன் கூற்று

( கொச்சகக் கலிப்பா )

10. விளங்குபரி சுத்த வெளியே யுருவா
வளங்கிளர்சற் போதவருள் வாழ்வெனக்கு மல்க
உளங்குடிகொண் டென்னை யுடையானைப் பிள்ளை
யிளங்குதலை பேசி மகிழ்விக்கின் றேனே. க

11. நீடிய வாழ்வா நிமலனென் னுள்ளத்திற்
கூடினுன் கூடிக் குதூகல மாகவியல்
பாடினுன் பாடிப் பரமகவி யென்னும்பேர்
*சூடினுன் பாடியது நான்போலத் தோன்றவே! உ

12. கரும கதிகளே கண்டதல்லாற் கண்ணுந்
தரும சொருபசிவ தத்துவஞ்சற் றேரேன்
குருமணியா வுண்மைக் குலாவருளிச் செஞ்சொற்
பரமகவி யாகத்தற் பாடுவித் தானே. ௩

( குறள் )

13. அரசான வாண்டா னருள்வெற்றி கூறும்
முரசா மடியேன் மொழி. ச

---

* சூடுதல்—சூடுவித்தல் எனப் பிறவினை ; அணிவித்தலை அணிதல் என்பது போல்.

14. சிவத்துவத்தா லோங்குகுரு தெய்வமே என்றன்
கவித்துவத்தா லோதுங் கருத்து. ரு

குறிப்பு: குரு தெய்வம்-குருவடிவான தெய்வம்; கருத்து-கருதப்பட்ட பொருள்; பிரதிபாதிக்கப்பட்ட பொருள்.

### 7. அடியார் வணக்கம்

(கொச்சகக் கலிப்பா)

15. சிவநேயக் காதல் செழித்தலாற் றம்முட்
பவமாய வாழ்விற் பசையற் றொழியத்
தவஞான மோனவொளி சார்ந்த வகத்தோர்
அவஞால மோக மகற்றியாள் வாரே. க

# மெய்த்தவ விளக்கம்

**காப்பு**

(கொச்சகக் கலிப்பா.)

16. பத்தித் திறத்தாற் பரிபக் குவமுற்றுச்
சித்தந் தெளியீற் சிவகுருவே யுள்ளிருந்து
முத்திப் பரசொருப மோனஞா னுனுபவ
சித்தி யருள்வன் சிவசத்தி காப்பாமே. க

**மங்கலம்**

(குறள்)

17. கண்ணுன சுத்தவருட் கைவல் லியசொருபக்
கண்ணுலங் காண்மங் கலம். க

18. சுமங்கலமா வுள்ள சொரூப வுணர்வே
அமங்கலந்தீர் மங்கல மாண்பு. உ

(கொச்சகக் கலிப்பா)

19. சிவத்துவம் பொங்கத் தெளிந்தமெய்ஞ் ஞானக்
கவித்துவ வாக்கெழக் காரண மாகச்
சுவைத்தென் னகத்தொளிர் சுத்த சொரூபம்
சுவத்தமாத் துன் று சுமங்கல மாமே. ந

## நூல்

### 1. புகல்

( குறள் )

20. அங்கணு லென்னையடிக் கங்கி கரித்தகுரு
புங்கவன்பொற் றுளே புகல். க

21. பேத மயக்கமனப் பீழைதீர் சுத்தவருட்
போத சொரூபம் புகல். உ

22. ஓர்தன் மயமா வுலகெலா முற்றவருட்
போத சொரூபம் புகல். ங

23. தன்னந் தனிப்பர தத்துவமாத் தங்குசிவப்
பொன்னம் பலமே புகல். ச

குறிப்பு : பொங்குசிவ எனவும் பாடம்.

24. தன்னறிவா லென்னறிவைத் தான்கரந்தான் சுத்தவருட்
பொன்னடியே யுண்மைப் புகல். ரு

குறிப்பு : தன்னறிவு - சிவபோதம் என்னும் குருபோதம்; என்னறிவு - ஜீவபோதம்; கரந்தான் - சதாசிவ வடிவான சற்குருநாதன்.

25. தப்பாத வுண்மையாத் தங்கு சொரூபவருட்
பொற்பாத மேநம் புகல். சு

26. ஆன்றமுழுத் தன்மை யறிவில் விளக்கியமெய்த்
தோன்றலருட் சால்பே துணை.

27. பந்தமோட் சக்கற் பனையாற்பற் றப்படாச்
சொந்த சொரூபம் துணை. அ

(கொச்சகக் கலிப்பா)

28. மூண்டவகங் கார முனைப்பற்மூ லத்தொடுக்கிக்
காண்டலரு சுத்தவருட் கைவல் லியந்துலங்கத்
தூண்டுபரஞ் சோதித் துரீய சொருபமா
வாண்டவனே யன்றியெனக் காரும் புகலின்றே. கூ

## 2. கதி

(குறள்)

29. அதிரா வடிகளா வாண்டவருட் பெம்மான்
கதிரார் கழல்காண் கதி. க

30. கருத்தைக் கடந்த கருத்தனுக் கூனுக்
கருத்தற் றெழுதல் கதி. உ

(கொச்சகக் கலிப்பா)

31. சொல்ல வொணாத சொருபமோ ணுநுபவம்
அல்லதுமற் றென்றுமடைந் தாரத் தகுவதில்லை
அல்லலுறு மோக வகப்பா ழிருளுக்கோ
ரெல்லியா வுள்ளபே ரின்ப விறைகதியே. ங

32. எதிராஜ னை விறையோன் அடியேன்
பிதிரான மாயப் பிறப்பை விசாரச்
சதிரால் விடுவித்த சற்குரு நாதன்
கதிரார் கழலே கதிகாட்டி யாமே. ச

## 3. சரண்

(குறள்)

33 மங்கா தொளிர்சொருப மாண்பா விதயத்துத்
தங்காநின் றானே சரண். க

34. எம்பிரா னாக விதயத் தொளிர்சொருபத்
தம்பிரான் பாதஞ் சரண். ௨

35. எம்பிரா னான வியற்பிரான் சுத்தசிவத்
தம்பிரான் பாதஞ் சரண். ௩

36. விரும்பவே தில்லா வியன்சொருபப் பேறு
தரும்பிரான் றாளே சரண். ௪

37. பரமார்த்த மோனவருட் பார்வை செழிக்கத்
தருமாத்தன் பாதஞ் சரண். ௫

38. நெஞ்சகத்து வாலறிவா நின்ற சொருபமே
தஞ்சமாத் தாங்குஞ் சரண். ௬

39. சதாசிவமாங் கைவல்யத் தற்பரமே மிக்க
சதாசிரய மாமெய்ச் சரண். ௭

40. எங்குங் கலந்தியல்பே ரின்பமா வுள்ளுணர்விற்
றங்குசிவ பாதஞ் சரண். ௮

41. யானென்னு மோக மிகந்தொழிய வுள்ளுணர்வாத்
தானென்று பாதஞ் சரண். ௯

42. புத்திக் கலக்கமறப் பொங்கு மனுக்கிரக
சத்திக் கழற்கே சரண். ௧0

43. மாயாமோ கப்பாழ் வலைகிழித்த சிற்சத்தித்
தாயான தந்தை சரண். ௧௧

44. சக்திகளுக் கெல்லாமோர் தாயான சுத்தவருட்
சத்திநமக் குண்டே சரண். ௧௨

( கொச்சகக் கலிப்பா )

45. பொய்வகையாத் துன்றுலகப் புன்கலக்கம் போக்கநான்
செய்வகையா தொன்றுந் தெரியா துழலுங்கால்
உய்வகையா லென்னை யுளம்புகுவித் தாண்டபிரான்
மெய்வண்ண மாக விளங்குவெளித் தாள்சரணே. ௧௩

## 4. அரண்

(குறள்)

46. படுமாய மானவெம் பாசமற நோக்கா
லடுமா ரியன்றுள் அரண். க

47. தீண்டாமற் காலபயம் சிற்சொருப மாகவிளங்
காண்டான் பதமே யரண். உ

48. தூண்டாநின் றென்னைத் துரீய சொருபமா
வாண்டான் பதமே யரண். ந

49. நேரியதன் செந்நெறிக்கென் னெஞ்சை நிகழ்த்தலுற்ற
ஆரியன்மெய்ஞ் ஞான வரண். ச

50. என்றுமொரு தன்மைத்தா வேய்ந்தவருட் போதவுரு
வன்றியுயிர்க் கில்லை யரண். ரு

குறிப்பு: உரு - சொருபம்.

51. துன்றுபர மார்த்த சொருபந் துலங்கினு
லன்றியில்லை மற்றுரே ரரண். சா

52. ஒன்றியா வோங்குபர வுண்மையர்ஞ் சிற்சொருப
மன்றிவே றில்லை யரண். எ

## 5. அடியார்

(குறள்)

53. கடையேனை யாண்டவருட் கற்பகத்தை அன்பா
லடையாநின் றூர்பாக் கியர். க

54. சததந் தொழுவார் சதுரர்தம் மானே
இதயத் திருக்கோ யிலில். உ

55. அடக்க வொடுக்கமுளார் ஆணவ வேகக்
கடுப்பிலார் மெய்யடி யார். ந

56. சிற்பரவின் ஞகத் தெளிந்தவருட் கண்ணேக்கப்
பொற்படியர் சாந்திப் புலம். ரு

குறிப்பு: ஆண்டவன் கண்ணேக்கப் பொற்பே அடியர் சாந்திப்புலம் என்பதாம்.

57. நல்லாங் கருளேயே நாடலுற்ருேர் பொய்ம்மயக்கப்
பொல்லாங் ககன்றுவாழ் வார். ரு

58. பெரிதெளிதாம் பெம்மா னடியார்க் கயலா
ரரிதரிதென் ருேது மது. சு

59. தொண்டுசெய்யப் பெற்ருேர் துரீய சொருபனுற்
கண்டடைவர் தந்தொல் லியல். எ

( கொச்சகக் கலிப்பா )

60. இன்னற் கலக்கஞ்சேர் யானெனும்பா ழாணவஞ்செற்
றென்னைத்தன் னேடே யிரண்டறநன் காண்டவிறை
துன்னற் கரிய சொருபப் பரஞ்சோதி
வன்னப் பதவொளியில் வைகுறுவோர் பாக்கியரே. அ

61. பல்லா யிரங்களாத் தன்னைப் பகுத்துக்கொண்
டெல்லாமுந் தாஞ வியல்சிற் சொருபவருள்
வல்லாளன் பாதமே வல்லரணுக் கண்டடைந்தா
ரல்லான் மயக்கவலை யாரறுக்க வல்லாரே. கூ

## 6. அடியா ரடையும் பயன்

( கொச்சகக் கலிப்பா )

62. உகப்பமிக நல்ல னுணர்ந்தார்க் குணர்வா
லிகப்பரிய தன்மையா லேக சொருபன்
முகப்பரிய சுத்தசிவ மோனப் பதவாழ்
வகற்பனுந் தன்மெய் யடிசேர்ந்தார்க் காமே. க

63. முற்ற முழுமதியா மோனவருட் சீர்வளர்வெண்
கொற்றக் குடைநிழலிற் கூடிக் குதூகலிப்பர்
பற்றுமுற்ற வாண்டவன்பொற் பாதத்தே யாகவருட்
சுற்றக் குழாமாத் தொழுதெழுமெய் யன்பரே. உ.

64. அடியேனை யாளுடைய வம்மா னடிக்கண்
முடியேற வைத்து முயங்கும் மனத்தர்
செடியேறு பாவங்க ளெத்தனையுந் தீரக்
குடியேறப் போவர்வை குந்தநன் னுடே. ௩.

## 7. அடியார்க் கடிமை

(குறள்)

65. தன்னிழப் பாலே சதாகால பூஜையியற்
றன்னவரே யாண்டா ரெமக்கு. க.

66. என்னுடையா ளுன விறைவனருட் சிற்பதமே
துன்னடியா ரென்னுடை யார். உ.

67. அடியா ரடிக்கடிமை பூண்டமெய் யன்பர்க்
கடியே னடிமைபூண் டேன். ௩.

## 8. குரு தரிசனம்

(குறள்)

68. ஆண்டவனைக் கண்டேன் அதீதசிவத் தன்மைகண்டேன்
காண்டல்கா ணுமைகடந் தேன். க.

69. அதிட்டான மான வருட்பதத்தி லென்னைப்
பதித்தா னவனே பரன். உ.

## 9. ஆட்கொண்டான்

(குறள்)

70. சிந்தையிலே மோனச் சிவமாச் செறிந்தொளிரவ்
விந்தையினு லாண்டா னிறை. க

71. பரமார்த்த ஞானப் பதத்திலென்னை நாட்டித்
தருமார்த்த காமமொழித் தான். உ

72. ஒழிந்ததாற் பொய்யா வுபாதியுணர் வுள்ளத்
*தெழுந்ததென் னுண்மை யியல். ௩

## 10. திருவடி

(குறள்)

73 மிக்கவே தாந்த விசுத்தஞா னனுபவப்
பொக்கணமாம் பாதப் புலம். க

74. ஈண்டியபே ரின்ப வியற்சிற் பரவெளியே
காண்டலரு முண்மைக் கழல். உ

75. சிற்பர வாழ்வாத் தெளிந்த சிவானுபவக்
கற்பக நீழல் கழல். ௩

76. விட்டொழிய வொண்ணுத்தன் மெய்யே விசுத்தவருட்
கட்டழகு சேர்ந்த கழல். ச

77. ஒளிவெளியா மோன வுணர்வே சொருபக்
களிவளர்பே ரின்பக் கழல். ரு

78 வாலறிவா முண்மையே மாயப் பிரமாதக்
கால னணுகாக் கழல். சு

79. படர்ந்தமதோன் மத்தப் பசாச மனத்தைக்
கடந்தொளிர்கை வல்யங் கழல். எ

---

*எழுதல்—தோன்றுதல்.

80. உய்வுள்ளு மன்பருளத் துள்ளுணர்வாப் பொங்குபொருள்
கைவல்ய ஞானக் கழல். அ

81. எண்ணும வெண்ணி யிருப்பாருக் கன்றிமற்
றெண்ணு துடையான் பதம். கூ

82. சதிர்சே ரனுபவமாச் சார்ந்ததெனக் காண்டான்
கதிர்சேர்மெய்ஞ் ஞானக் கழல். க0

83. மோனத்தா லென்னை முகந்துகொண் டாண்டகுரு
ஞானத்தாள் வாழ்வே நலன். கக

84. பாசப் படர்ச்சியறப் பாற்றினன் சிற்பதச்சீர்
வாசம்பே ரின்பவருள் வாழ்வு. கஉ

85. பாழ்வா தனையறச்செற் றுண்டகுரு பாதநிழல்
வாழ்வாம் பரந்தாம வைப்பு. கங

86. ஆண்டவன்சீ பாத வருள்விளக்கஞ் சேர்ந்தவகத்
தீண்டலில்லை பாச விருள். கச

87. கொடியமறக் கூற்றங் குமைத்தோ னடியே
யடியார் களின்வல் லரண். கரு

88. சிற்பரமா வுள்ள சிவன்கழலே சாந்திபெறக்
கற்புறுவார் தேர்ந்த கதி. கசு

89. மத்தக் கலக்கமற மாற்றுவது சுத்தவருட்
பத்திக்கு வித்தாம் பதம். கஎ

## 11. திருவடித் தியானம்

(குறள்)

90. மாலைக் கடக்க வழிசுத்த வாலறிவன்
காலை மறவாக் கருத்து. க

91. *வெஞ்சமத்தில் வென்று விளங்குவார் சுத்தவருட்
செஞ்சரணஞ் சிந்திப் பவர். உ

92. உடையவன் றளையகத் துள்ளிலன்றி மாயப்
படையினின்று தப்ப லரிது. ௩

## 12. திருவடி ஞானம்

(குறள்)

93. மருவு மகந்தை மயலற் றெழிவே
திருவடி ஞானத் தெளிவு. க

94. இளிவரல்சேர் பாச விருளைக் கெடுப்ப
தொளிவளர்சீ பாத வுணர்வு. உ

95. சுழலுமனக் கற்பனையின் சூதகன்ற துண்மைக்
கழல்விளங்கக் கண்ட கருத்து. ௩

## 13. குரு பத மாட்சி

(குறள்)

96. குருப்பதமே தம்மாற் குறிக்கொள்ளத் தக்க
திருப்பதமாத் தேர்வரறிந் தோர். க

97. அடர்வுறுவெம் பாச மறுக்கலுற்றோர் காணக்
கடவதுமெய்ஞ் ஞானக் கழல். உ

98. சிற்பரவாழ் வாகச் செழிக்கலுற்ற மோனவருட்
கற்பகமே யாண்டான் கழல். ௩

99. சிற்பரவாழ் வான சிவானுபவச் சீரளிக்குங்
கற்பகமென் ஞண்டான் கழல். ச

---

*வெஞ்சமம் - வாசனைப் படைகளின் கோர யுத்தம்.

100. சுட்டப் படாத துரியமே சுத்தவருட்
பட்டப் பிரான்மெய்ப் பதம். ரு

101. வாழ்வாக வுள்ளவருள் வாலறிவன் பாதமே
பாழ்வா தனைதீர் பதம். சு

102. தெளிய விளங்குசிவச் செம்பிரான் பாத
வொளியிற் கரந்த துலகு. எ

103. பரமா விளங்குகுரு பாத வொளியே
உரமான மோன வுணர்வு. அ

104. கண்ணு ரமுதன் கழலே கருத்தொன்றி
எண்ணுநிற் பாரிறை யோர். சு

105. அருள்வண்ண மாக வகம்பொங்கு பாதப்
பொருள்வண்ண வாழ்வற் புதம். க0

106 பேதமில்சற் போதவருட் பெம்மான்பே ரின்பவியற்
பாதமே முத்திப் பதம். கக

107. இன்பவருள் வாழ்வா விதயத் திலகுசுப
நம்பனடி முத்தி நலன். கஉ

108. அடியேனை யாண்ட வருட்பிரான் பாதப்
பொடியேயான் பூசிப் பது. கங

குறிப்பு: பாதப்பொடி-பாததூளி.

( கொச்சகக் கலிப்பா )

109. எள்ளத் தகாதபே ரின்பப் பரமசிவ
வெள்ளமா வுள்ள விசுத்தத் திருவடிதம்
உள்ளக் கருவா வொளிர்தலே அன்பரகந்
தெள்ளத் தெளிந்த சிவானுபவ மென்பவே. கசு

110. உள்ளலரு மோன வுறுதிசால் கைவல்யத்
தெள்ளமுத மானவருட் சேம்வியல் காமுற்றார்க்
குள்ளுணர்வா வுள்ளத் தொளிர்மெய்த் திருவடியே
கள்ளமறக் கண்டுசே விக்கக் கடவதே. கரு

111. கற்பனையை முற்றக் கடந்தொளிர்சற் போதவருட்
பொற்பதமே யல்லாற் புகல்வே றிலாமையாற்
றற்பரமா மஃதே சதமாகப் பற்றலுற்றார்
அற்புதரா வுள்ள வயன்முதலெல் லோருமே. கசு

## 14. ஆண்டவன் இத்தகைய னெனல்

(குறள்)

112. மோனவருட் கைவல்ய முத்தி சொருபமாத்
தானவிர்வுற் றோன்சற் குரு. க

113. சூனியப் பாழைத் துரீய வருள்வெளியாத்
தானொளிர்விப் பான்சற் குரு. உ

114. தான்றானா வுள்ளந் தழைத்தொளிர்சற் போதவருட்
கோன்றான்மெய்ஞ் ஞான குரு. ந

115. அனுக்கமெய் யன்பர்க் கயிக்கியமா வுள்ளான்
கணிக்கவொண் ணாத பரன். ச

116. ஈடிலா வுண்மை யிறையே எனையாண்ட
பீடுசேர் ஞானப் பிரான். ரு

117. குருவுருவு நுட்பவொட்பக் கூரியர்க்கு யாதோ
ருருவுமற்ற சொந்த வுணர்வு. சு

118. உளங்கவர்ந்த வெம்பிரா னுண்மையுருத் தேறில்
விளங்கு துரீய வெளி. எ

119. பேதகல வாண்டவருட் பெம்மான் குருரமணன்
மேதகவு சுத்த வெளி. அ

120. எண்ணமற்ற மோன வியல்பா மிதயவொளி
வண்ணமே யாண்டான் வடிவு. க

121. தானே முழுமுதலாத் தங்கு சொருபவருள்
வானமே யாண்டான் வடிவு. க0

122. போதவருட் பூரணமாப் பொங்கும்ப சாந்தியே
ஏதமற வாண்டா னியல். கக

123. அன்புணர்வு நாளு மகம்பொங் கனுபவப்பே
ரின்பமே யெம்மா னியல். கஉ

124. சிவத்துவவாழ் வாகத் தெளிந்தமைந்த மோனத்
தவத்தியலே யாண்டான் றகவு. கஙு

125. ஒன்றென் றுரைத்த வுடையான் சொருபவுண்மை
என்றென்று முள்ள வியல்பு. கச

126. தானாக வுள்ளபரந் தாமன் சகவுருத்தா
னானு னவன்கே வலன். கரு

127. அருள்விளக்க மானவென் னுண்டான் சொருபத்
திருளியக்க மென்று மிலே. கசா

128. அறிவுரு வாக வகத்தே யுறைமெய்
யிறைவ னிரண்டற் றவன். கஎ

129. குருவுருவா வாண்டவருட் கோமான் உளத்திற்
பிரிவிலா வுண்மைப் பிரான். கஅ

130. அருள்வெளியா வுள்ளான் அமுத சொருபப்
பொருள்வளவாழ் வான புமான். கஙூ

131. கற்பனையற் றேயக் கடைக்கணித்த சிற்பரமெய்
யப்பனியற் சீரே யருள். உ0

132. அறிவிலே யுள்ளா னறிவாக வுள்ளான்
பிறிவு படாவெம் பிரான். உக

133. அறியவொண் ணுவவ் வறிவே யகமாப்
பிறிவறநிற் கின்றான் பிரான். உஉ

134. அரியா னெளியா னயலார்க் கடியார்க்
கிருவே றிலாத விறை. உ௩

135. எங்குமா வுள்ளான் இதயத்தி லன்றிமற்
றெங்குமே காணப் படான். உ௪

136. இதயத்தி லன்றி யியலறிய வொண்ணான்
அதியப் பிரானு மவன். உ௫

137. உள்ளுணர்வா லன்றி யுறவு கலக்கவொண்ணு
வொள்ளியா னென்னுடை யான். உ௬

138. கண்ணாக வெங்குங் கலந்ததோர் சுத்தவருள்
விண்ணான மெய்யனெம் மான். உ௭

139. வெறிசே ரகந்தை விளிந்தா ரறிவிற்
பிறிவறநிற் கின்றான் பிரான். உ௮

140. சிற்பரவாழ் வாகத் தெளிந்த சிவானுபவப்
புத்தமுதா வுள்ளான் புமான். உ௯

141. அம்பரமா வான்ற வனந்தானந் தானுபவச்
செம்பரமா வுள்ளான் சிவன். ௩0

142. உணர்வாக வுள்ளான் உணர்வினுந்தான் வேறு
வுணர்வா லுணர வொணான். ௩௧

143. தப்பருமெய்ஞ் ஞான தயாசொருபன் சுத்தவருட்
பொற்புறுசீ பாதப் புமான். கஉ

144. அத்தனையு மாமோ ரதிசயசிற் சத்தியான்
*வித்தகமா மேனியம் மான். கங

145. சுத்தவறி வான சொருபமா வாளுமுல
கெத்தவறு மில்லா விறை. கச

குறிப்பு: இறை சொருபமா உலகாளும் என வினை முடிவுசெய்க.

146. அன்புமய மாக வறிவு தெளிந்திடிற்பே
ரின்பமய மாகு மிறை. கரு

147. எட்டாக் கடவுளியல் யானென்ற மோகமுனைப்
பொட்டாத மோன வுணர்வு. கசு

( கொச்சகக் கலிப்பா )

148. பற்பலபல் கோடிப் படிவமாத் தோன்றலுற்ற
சிற்பரமேயாண்டவன்மெய்ச்சீர்மையாக்கண்டுகொண்டேன்;
கற்பனையொன் றற்றவருட் கைவல்யக் காட்சியா
வற்பனே னுள்ளத் தவிர்சொருபன் மாட்சியென்னே! கஎ

149. விஞ்ஞான மான விகற்பமனக் கற்பனையின்
பொய்ஞ்ஞால மோகப் புணர்ப்பகற்றி யாண்டபிரான்
அஞ்ஞான மான வகப்பா றறக்கெடுத்த
சுஞ்ஞான மான சொருப குருமணியே. கஅ

150. இனியனு வுள்ளத் தியல்பாக வுள்ளான்
அனியனல் லாதசொந் தான்ம சொருபன்
தனியன் சதாசிவன் சற்குரு நாதன்
மனிதனுச் சில்லோர் மருள்கினுந் தானே. கசு

*வித்தகமா மேனி - சுத்த ஞான சொருபம்

151. தானே தனக்குரிய சற்குருமா ணிக்கமாய்த்
தானே தனக்குரிய சற்சீடத் தங்கமாய்த்
தானே தனக்குரிய சாட்சாற்கா ரப்பொருளாய்த்
தானே விளங்கியதென் னாண்டவன்மெய்த் தன்மையே. ௫௦

152. காந்தழல்சேர் வெஞ்சுரத்திற் கற்பகம்போற் றன்னடிதாந்
தோய்ந்தவரைக் காத்தல் சுபாவமன்றித் தன்னேக்கா
லேய்ந்த விருப்புவெறுப் பில்லா விதயத்தாற்
சாந்த சதாசிவன்மெய்த் தன்மை தடத்தமே. ௫௧

153. ஆதி வியாதி யகன்றொழியப் பொய்த்துவித
பீதியோ டாசையறப் பேர்ந்தொழிய நோக்குபிரான்
நேதியான் மற்றனைத்து நீங்கியபின் னீக்கவொண்ணு
மீதியா வுள்ள வியோமப் பரசிவமே. ௫௨

154. மறவுநினை வொன்றும் மருவான் மனத்தாற்
குறைவுநிறை வொன்றுங் குறியான் மதியா
லுறவுதுற வொன்று முணரான் உணர்வா
லிறவுபிற வோரா ரமணப் பிரானே. ௫௩

155. கலங்காம லென்னையருட் கைவல்ய மோன
நிலங்காண வாண்டொளிர்மெய்ஞ் ஞேய சொரூபன்
மலங்கா தடியர் மனத்தே சொரூப
நலங்காண நல்குமெய்ஞ் ஞானப் பிரானே. ௫௪

156. எண்ணவெண்ண மேன்மே லினிப்பதாம் பேரின்ப
வண்ணவருள் வாழ்வு மடுக்க வழங்குவோன்
எண்ணியெண்ணி மற்றும்பின் னெண்ணவொண்ணு [மோனவியல்
வண்ணமே தன்சொருப வண்ணமாம் பெம்மானே. ௫௫

157. சித்தஞ் சிதம்பரமாச் சேர்ந்தே திருநட்டம்
புத்தமுதாப் பொங்குசிவ பூரணன்செய் வானசையான் ;
*வித்தனு வுள்ளா னனைத்துக்கும் ; மெய்காணில்
வித்துவிளை வென்ற விவகாரங் கற்பனையே சசு

158. நண்ண வெளிமையான் ஞான வருட்குருவா
வண்ண மழகியான் மல்கு சொருபமா
எண்ண வினிமையா னெண்ணமற்ற வுள்ளமாத்
திண்ண வுறுதிசேர் சிற்சொருபப் பெம்மானே. சஎ

159. மிகப்பெரிய சுத்தவருள் வீரன் ; அறிந்தோர்க்
கிகப்பரிய சொந்த வியல்பா மொருத்தன் ;
அகப்பொருளாத் தன்னை யறிந்திடா மற்றோர்க்
ககப்படவொண் ணாத வதீதன்ஆண் டானே. சஅ

குறிப்பு :—ஒருத்தன் - ஏகான்ம சொருபன் ; அகப் பொருள் - அகம் பத லக்ஷ்யார்த்தம் ; அகப் படுதல் - கிடைத்தல் ; ஆண்டான் - ஆண்ட வன் என வினையாலணையும் பெயர்.

160. கள்ளவகங் காரமனக் கற்பனு பேதமறத்
தெள்ளியதோ ருண்மைத் திருவருளா வாண்டவன்மெய்
உள்ள வொணுததொன்றே வுள்ளவேண் டாததுமாய்
உள்ளமே யாக வொளிர்சொருபத் தன்மையே. சகூ

குறிப்பு :—உள்ளவொணுத தொன்றே - உள்ளவொணு தது மட்டு மன்றி.

161. ஒன்றுன மோன வுணர்வி லுவந்துறைவோன்
பொன்றும வென்னையருட் போதக் கழலிலுய்த்தோன்
மன்றுடி யாவகத்து மாநட்ட மாடுகின்றேன்
தொன்றுன சொந்த சொருபப் பெருமானே. ருo

162. திருத்தமா வுள்ளசிவச் சிற்பரக்கண் ணேக்கம்
பொருத்தியே யென்னகத்திற் பொங்கலுற்ற பாதன்
அருத்திசேர் வுற்றமெய் யன்பரகத் தின்ப
நிருத்தமென் னுளுஞ்செய் நீதப் பிரானே. ருக

*வித்தன்—அறிவுருவன் ; காரணவடிவன்.

163. ஊரிலான் பேரிலான் உற்றார்பெற் றுரையில்லான்
ஓர்விலான் சற்றுமுளத் தூகமிலான் மோகமிலான்
தேர்விலான் சுத்தசிவச் சிற்பரந்தா னாகவுள்ளான்
ஆரியன்மெய்த் தன்மைசச்சி தானந்த மோனமே. ருஉ

164. எண்ணமற்ற மோன வியற்சிற் பதத்திலருள்
வண்ணமார் வாழ்வா வளர்சொருபத் தம்பிரான்
மண்ணிலே விண்ணிலே மற்றெவருந் தன்னினிரண்
டெண்ணவே றில்லா வியல்பா லொருத்தனே. ருங

165. யானான வென்னை யியற்பரமாக் கண்டபிரான்
யானாரென் றாய்வா ரிதயத்துத் தற்பரமே
தானா வியல்சொருப சாட்சாற்கா ரந்துலங்கு
மோனானு பூதி முகக்கவருள் சிற்பரனே. ருச

குறிப்பு:—இதயத்து மோனானுபூதி முகக்க வெனக் கூட்டுக.

166. தனக்கே யதீனமாத் தானென்னை யாண்ட
வினைக்கேட னானவருள் வித்தகன்மெய் வேறா
நினைக்கவோ வன்றி மறக்கவோ வொண்ணாத்
தனிக்கே வலசொருபத் தன்மைத்தாங் காணே. ருரு

குறிப்பு:—வித்தகன்மெய் கேவல சொருப தன்மைத்தாம் எனவியையும.

167. நல்லார் தமக்கு நனிநல்லன் மற்றாங்கே
பொல்லார் தமக்குமிகப் பொல்லானே போல்கின்றான்;
எல்லார் தமக்கும் பொதுவா வியல்சொருபத்
தொல்லோன் இணையனெனச் சொல்லவொணா னார்க்குமே. ருசு

## 15. ஆண்டவன் நாமம்

(குறள்)

168. இனிக்கவெனை யாண்ட விறைரமணன் பேர்காண்
மனக்கவலை மாற்றும் மருந்து. க

## 16. ஆண்டவன் முகம்

(குறள்)

169. ஊனவகப் பேய்கரக்க வுள்ளத் தொளிர்சொருப
மோனமே யாண்டான் முகம். க

170. சித்திக் கலக்கமறச் சிற்பரமாப் பொங்குசுப
முத்தியே யாண்டான் முகம். உ

## 17. ஆண்டவன் விழி (பார்வை)

(குறள்)

171. கள்ளவகங் காரமறக் காணும் பரசொருப
வெள்ளவருள் ளெம்மான் விழி. க

172. அன்பே வடிவா வகந்துலங்கு மோனவியல்
விம்பமே யாண்டான் விழி. உ

173. உள்ளலற்ற சுத்த வுணர்வான மோனவருள்
வெள்ளமென் ஞண்டான் விழி. ௩

174. உள்ளமே யாகவிளங் கொட்பப் பரசொருப
வெள்ளங்கா ஞண்டான் விழி. ௪

175. உள்ளலற்ற வுள்ளமா வுள்ள சொருபவருள்
வெள்ளமே யாண்டான் விழி. ௫

176. உள்ளதுபே ரின்ப வுணர்வா வொளிர்சாந்தி
வெள்ளமே யாண்டான் விழி. ௬

177. உள்ளங் கிளரவிளங் கொட்பநுட்ப மோனவருள்
வெள்ளமே யாண்டான் விழி. ௭

178. தெள்ளமுத மாகத் தெளிந்த சிவானந்த
வெள்ளமே யாண்டான் விழி. ௮

179. உண்ணோக்கு மாறென்னைக் கண்ணோக்க லுற்றவருள்
விண்ணோக்கம் பெம்மான் விழி. ௯

குறிப்பு:—கண்ணோக் கலுற்ற பெம்மான் விழி அருள் விண்ணோக்கம் என்க.

180. அருணா சலமா வகந்தெளிந்த சுத்த
கருணா விலாசமவன் கண். க0

குறிப்பு:—அகந் தெளிந்த அவன் கண் கருணா விலாசம் என்க.

181. வீட்டுப்பே றின்ப விளைவிதயத் துள்ளுணர்விற்
காட்டுவது கர்த்தனருட் கண். கக

182. சுட்டறிவாங் கற்பனையைச் சுட்டொளிர்மெய்ஞ் ஞானவருட்
கட்டெரியென் றாண்டவன் கண். கஉ

183. பகவனருட் பார்வை பதிந்தவகம் சற்றும்
பகவற் றொளிர்மெய்ப் பரம். கங

குறிப்பு:—பகவு - பிளவு, பின்னம்.

184. ஆரியன்கண் ணோக்க மடைந்தால் அதாவிளங்கும்
கூறியமெய்ஞ் ஞானக் குறி. கச

185. குருப்பார்வை கூர்த்த குறிக்கிலக் கானோர்
கருப்பாழ் சுவற்றுங் கனல். கரு

குறிப்பு:—குருப்பார்வை என்றது கனல் என்னும் பெயர்ப்பயனிலையைக் கொண்டு முடிந்தது.

(கொச்சகக் கலிப்பா)

186. மூர்க்க வகந்தை முனைப்பால்யான் முட்டுப்பட்
டேக்க முறும விதயத் தகமகமென்
றூக்கமா வுற்ற வருட்சிற் பரசொருபன்
நோக்கமே யன்றியுயிர்க் காக்கமொன் றில்லையே. கசு

187. வானவரும் மானவரும் வந்து வணங்கியவர்
ஞான சொருபகுரு நாதனருட் கண்ணோக்கால்
ஊன மயற்செருக்கற் றுள்ளமிகத் தெள்ளியராய்
மோனவொளி சான்ற முகப்பொலிவோ டேகுவரே. கஎ

188. குருவித் தகரமணன் கூர்ந்தவருட் கண்ணோக்
கருவித் திரள்போ லமுதம் பொழியும்;
வெருவித் தனையடைந்த மெய்யன்பர் வாழ்வு
பருவப் பயிர்போற் பசும்பொலிவுண் டாமே. கஅ

குறிப்பு:—பருவப் பயிர் - பருவ மழை பெற்ற பயிர்; உண்டாம் - உண்டாகப் பெறும்.

## 18. ஆண்டவன் மனம்

(குறள்)

189. பண்ணவொன் றற்றவருட் பார சொருபவியல்
வண்ணமென் றுண்டான் மனம். க

## 19. ஆண்டவன் வண்மை

(குறள்)

190. உள்ளம் பொலியவிளங் கொள்ளியோன் மிக்கவருள்
வள்ளன்மைக் கில்லை வரை. க

191. அருள்வெள்ள மான வனந்த சிவச்செம்
பொருள்வள்ளி யோன்மெய்ப் புமான். உ

(கொச்சகக் கலிப்பா)

192. ஊன மனக்கவலை யோய்ந்தொழிய வுற்றார்க்கு
ஞான சொருபகுரு நாதன் வழங்குவது
மோன வசீகரஞ்சேர் முத்தித் தலக்கமொடு
போனகமாப் பொங்குமனு பூதிப் பொருள்வளமே. ங

193. பொய்ம்மயல்சேர் மாயமனப் போராட்டம் பொன்றவருட்
செம்மைசேர் தன்னைச் சிறக்க வளிக்கின்றான்
மெய்ம்மைசே ரன்புணர்வு மீக்கூர் நிவேதனமாத்
தம்மையளிக் கின்ற ததீயருக் காண்டவனே. ௪

194. இணக்கமா மோன வியற்செம் பதத்தில்
வணக்க வொடுக்கமா வந்தடை வோரை
உணக்க விடாம லுவந்துபே ரின்ப
மணக்களி வாழ்வில் வரைந்துகொள் வானே. ௫

## 20. ஆண்டவன் மாட்சி

(குறள்)

195. அச்சாணி கண்ட ரகிலங் கனுக்குமே
எச்சார்பு மற்ற விறை. ௧

196. நினைப்புமறப் பில்லான் பிறப்பிறப் பில்லான்
தனிப்பரமா வுள்ள விறை. ௨

197. அளவைக் களவையா நின்றானை யாரெவ்
வளவையா லேயளக்கிற் பார். ௩

198. எத்திறத்தா லெண்ணுவா ரெவ்வெவர்மற் றவ்வவர்க்கவ்
வத்திறத்தான் *ஓர்திறமில் லான். ௪

199. யானாக வென்னை யிலக்கினேன் ஏகபரந்
தானா விளங்குமம் மான். ௫

200. யானேயா னாக வியல்வித்தோன் ஏகான்மா
தானேதா னாந்தத் துவன். ௬

201. நவசக்தி யாக நடப்பதென்னை யாண்ட
சிவசக்தி யானவருட் சித்து. ௭

* ஓர்திறம் - ஒரு திறம்; ஓரப்படுந் திறன்.

## 21. குரு பக்தி

(குறள்)

202. ஆண்டவனே யெண்ணி யகங்குழைமெய் யன்பன்றி
வேண்டலெவன் வேறு தவம். க

203. ஆண்டானை யெண்ணி யகங்கரைய லுற்றார்க்கு
வேண்டாவாம் வேறு தவம். உ

204. தஞ்சமா வாண்டவனைச் சார்ந்தா ருளத்திலருள்
விஞ்சை விளங்க லுறும். ௩

205. குருவடிவு நாளுங் குறிக்கொண்டு வாழில்
ஒருகெடுவு மில்லை யுயிர்க்கு. ௪
குறிப்பு:—கெடு-கெடுதி.

206. குருமணியா நின்றவருட் கோலமணி தெய்வத்
திருமணியாஞ் சிந்தைத் திறத்து. ௫

207. தப்பாத வாழ்க்கை சதாசிவமா வாண்டகுரு
சிற்பாத சிந்தைத் திறன். ௬

208. ஆண்டான் பதத்திலெனக் கார்வங் கிளர்ந்ததே
ஆண்டா னருள்விளைந்த தாம். ௭

(கொச்சகக் கலிப்பா)

209. கற்றறிவு முற்றக் கழிந்தொழியக் கற்பனையிற்
சுற்றறிவு முற்றத் தொலைந்தொழிய என்வடிவு
வெற்றறிவா முற்ற விளங்கலுற மோகவகப்
பற்றறுத்த சற்குருசற் பத்திமுத்தி சாதனமே. ௮

210. அரதிதீ ரின்ப வருள்வாழ் வளிக்கும்
பரதெய்வ மானகுரு பாதமன்றி நான்மற்
றொருதெய்வ மோரே னுணர்வால் உயிர்க்குச்
சரதமா வுள்ள சரண்பிறிதொன் றின்றே. ௯

211. ஞானகுரு பாத நயப்பான பக்தியிலார்
ஊனப் பழிசே ருலகமயல் வேட்கையுறார்
ஈன விளிவரல்சேர் யானெனும்பொய் மானாபி
மானமறப் பொங்குமியல் வாழ்வளிப்பான் சற்குருவே. க0

212. பார்க்காது பார்க்குமியற் பார்வையால் என்னகத்தைத்
தாக்காது தாக்கியவென் சற்குருதன் மெய்ப்பதத்து
மாக்காத லுற்றார் மனமகிழத் துன்றுவது
நோக்காத நோக்கமாம் நுட்பவொட்ப மெய்யுணர்வே. கக

213. ஆலிக்கும் மோக வகப்பாழ் கடத்துமருட்
கோலக் குருபதமே கோட்பாடாக் கொண்டொழுகிற்
சாலப் பெருமிதங்கூர் தற்பரஞ்சேர்ந் துய்ந்திடலாம்
சீலக் கடுந்தவந்தான் செய்துவருந் தாமலே. கஉ

214. மயக்கமனக் கற்பனையை மாற்றினா லன்றி
உயக்கமற வாழ வொண்ணாமையாற் பாசக்
கயக்கமுறு சித்தக் கலக்கமறச் சிந்தை
நயக்கலுறப் பற்றுகமெய்ஞ் ஞானகுரு நட்பே. கங

215. ஒன்றியாந் தன்மெய் யுளத்தில் விளங்கலே
வென்றிசேர் கைவல் லியவியல்வாழ் வார்வமொடு
துன்றியே சற்குருவைத் தோய்ந்தொழுகும் மெய்யன்பர்க்
கன்றியே வாய்ப்பரிதவ் வற்புதமெய்ஞ் ஞானமே. கச

216. பாசப் படர்கெடக்கூர் பார்வையால் ஆர்வமுறப்
பேசப் பெரிதினிய பேராளன் சுத்தசிவ
நேசத் தழுந்தினோர் நின்மலராய் மெய்ஞ்ஞானத்
தேசுற் றொளிர்வர் சிவானுபவம் பொங்கவே. கரு

## 22. குரு வருள்

(குறள்)

217. படுமாய மானவெம் பாசமற வுள்ளத்
தடுமா ரியன்கூ ரருள். க

218. குருவருளா மோனக் குலாவிதயஞ் சேரில்
வெருவரல்சேர் பாசம் விடும். ௨

219. ஆண்டான் சொரூப வருட்பீட மானவகத்
தீண்டாது பாச விருள். ௩

220. ஆண்டா னருளே குறிக்கோளாப் போற்றிலுயிர்க்
கீண்டா வுறுதி யிலே. ௪

221. உடையா னருட்சீ ரொளிசேர்ந்த வுள்ளத்
தடையாது பாழா ணவம். ௫

222. துரியவியல் வாழ்வைத் தொடர்ந்தொளிர்வ துள்ளத்
தரியகுரு நாத னருள். ௬

223. மடுக்க வொணுதசிவ மாட்சி மடுக்க
அடுக்கலுற்ற தாண்டா னருள். ௭

(கொச்சகக் கலிப்பா)

224. நீளப் படைத்த நிதித்திரளால் ஊனமில்வாழ்
வாளப் பெறுவோமோ ஆசாபா சங்கெடுமோ
மூளநமக் கின்பமய மோனுனு பூதியகத்
தாளக் கொடுப்பதுஞா னுசா ரியனருளே. ௮

## 23. ஆண்டவன் உபதேசம்

(குறள்)

225. சொரூபமே யாகத் துலங்குசிவச் சீர்மை
குருபதே சத்தின் குறி. ௧

226. ஆதி வியாதி யனைத்துமறக் காப்பதுசற்
போதிநா தன்மெய்ப் புகல். ௨

227. சாதனையி னன்றித் தலைப்படவொண் ணுதகுரு
போதனையி னுண்மைப் புலன். ௩

228. குருரமண போதக் குலாவே யுயிர்க்கு
வருமரணம் போக்கு மருந்து. ௭

229. இருந்த விருப்பே யியல்விளக்க மாகப்
பொருந்துசிவ போதம் பொருள். ௮

230. ஆண்டான் சொரூப வருட்போதத் தாலகந்தை
மாண்டாலே மாளும் மயல். ௯

## 24. அந்தரியாமித்துவம்

(குறள்)

231. பரன்சிவ னூடே பதிவிருந்து காக்கு
மருஞ்சீர்மை யாய்தற் குறித்து. ௧

232. வெளியா வகத்தில் விளங்கும் பரமே
தெளிவான சுத்த சிவம். ௨

233. நீடும் பரஞான நிட்டானு பூதிவிளைத்
தாடுகின்ற ஞண்டா னகத்து. ௩

234. செறிவுற் றறிகதஞ் சித்தத்தே யாண்டான்
பிறிவறநிற் கின்றவருட் பெட்பு. ௪

## 25. ஆண்டவன் உறைவிடம்

(குறள்)

235. எங்கெங் கெனத்தேடி யேங்காதீர் சிந்தனைசேர்
அங்கங்கே யுள்ளா னரன். ௧

236. வணக்கமோ டன்பின் வழுத்துவா ருள்ளத்
திணக்கமா வுள்ளா னிறை. ௨

237. கள்ளமா மோகக் கலக்கமற்ற வுள்ளுணர்வே
உள்ளமா வுள்ளா னுரு. ௩

238. உள்ள முடையான் உணர்வுருவா வுள்ளத்திற்
கள்ளமெலாங் காணுங் கரி. ௪

239. அண்ணு மலையா மகத்தா மரைமணியே
கண்ணு வெலாங்காண் கரி. ௫

### 26. இறை பணி நிற்றல்

(குறள்).

240. உடையான் றிருவுளத்தோ டொத்தொழுகி லன்றி
அடைவரிது சாந்தி யகத்து. ௧

241. மெய்த்தோங் கனுபூதி மேவுந் திருவருளோ
டொத்தாங்கு வாழு முயிர்க்கு. ௨

### 27. கடன் (கடமை)

(குறள்)

242. அகப்பொருளை நானுரென் றுய்ந்தகத்து மூழ்கி
முகப்பதே முன்செய் கடன். ௧

243. திருத்தமாம் போசத் தெளிவாஞ் சிவத்தைக்
கருத்திற் பொருத்தல் கடன். ௨

244. யானே யெனக்குறுதி தேடிக் கொளாவிடின்மற்
றேனே ரியற்ற லெவன். ௩

245. தானே யுறுதிபெறத் தன்னையுய் விக்கிலன்றி
ஏனோர்தாஞ் செய்த லெவன். ௪

### 28. புருஷார்த்தம்

(குறள்)

246. துரிய சொருப சுவானுபவப் பேறே
அரியபுருஷார்த்த வடைவு. ௧

247. உலப்பிலாத் தன்சொருப வுண்மையே தேடித்
தலைப்படவேண் டுந்தத் துவம். ௨

248. * பெறுதியா வாருயிர்க்குப் பேணத் தகுவ
துறுதிசே ருண்மை யுணர்வு. ௩

249. நீடும் பரமசிவ நேயவுணர் வுள்ளத்திற்
கூடுவது வாழ்க்கைக் **குறி. ௪

250. உற்றடையத் தக்க துணர்வுதெளிந் துள்ளத்து
நிற்கவுறு தன்மெய்ந் நிலை. ௫

251. நயன்சேர் சொருபமெய்ஞ் ஞானனு பூதிப்
பயன்காண் பிறவிப் பயன். ௬

252. சிற்பரமா வுள்ள சிவத்துவமே ஆருயிர்க்குத்
தப்பரிதா மூண்மைத் தகவு. ௭

253. மோன வருள்வெளியா மூண்டசொரு பானுபவ
ஞானமே யுண்மை நலன். ௮

## 29. சாத்திர மோகம்

(குறள்)

254. புத்தகஞா னத்தாற் புலமாமோ தன்சொருப
வித்தகமெய்ஞ் ஞான வெளி. ௧

குறிப்பு:—சொருப...... வெளி — வெளியான சொருபம் என மாற்றிக் கொள்க.

255. உற்றுங் கசாகளத்த மொப்பாம் வருந்தித்தாங்
கற்றுங்கு நில்லார் கலை. ௨

குறிப்பு:—உற்றுங்கு—உள்ளபடி; அசாகளத்தம் — ஆட்டின் கழுத்தில் (அனாவசியமாகத் தொங்கும் அலைதாடியென்னும்) சதைத்திரள்.

---

* பெறுதி - அடையத்தக்க புருஷார்த்தம்.

** குறி - குறிக்கோள், இலட்சியம்.

256. சிற்பரமாத் துன்று சிவத்திற் கரந்திடும்பல்
கற்பனு பேதக் கலே. ௩

257. கலேயிலே செல்லுங் கருத்தடங்கி னன்றி
நிலேயிலே நிற்கை யரிது. ௪

258. மலேவிலாத் தன்சொருப மௌனுனு பூதி
கலேயிலே காண்ட லரிது. ௫

(கொச்சகக் கலிப்பா)

259. மெய்ஞ்ஞான வித்தை விரும்பிப் பயிறலின்றிப்
பொய்ஞ்ஞால வித்தைகளிற் புக்குப் புலம்புவோர்
எஞ்ஞானங் கற்று மிகத்துக்கே யாவதன்றி
மெய்ஞ்ஞானப் பேரின்ப வீட்டுக் குதவாதே. ௬

260. இருள்வளர்மோ கப்பா ழிகப்பக் கடந்த
வருள்வெளியே தானு வகங்கிளரப் பொங்கும்
பொருள்வளர்மெய்ஞ் ஞானு பூதித் திறத்தாற்
றிரள்வித வித்தைகளுஞ் சீர்குலேந்து போமே. ௭

குறிப்பு:—திரள்வித வித்தைகள் - பலதிறப்பட்ட திரளான வித்தைகள் - கலேகள்; சீர் குலேந்து போதல் - மெய்த்திறங் கெட்டொழிதல் - பொய்த்துப் போதல்.

261. பொய்க்கலேக ளூடு புலம்பிக் கழியாதீர்!
தொக்க மயக்கமறத் துன்று துரீயமா
மிக்க சொருபவருள் விஞ்சையில்வெள் கிக்கரப்ப,
கற்குறுமற் றெல்லாக் கலேகளும்புற் கென்னவே. ௮

குறிப்பு:—அருள்விஞ்சையான மெய்க்கலேயே ஆராய்ந்து கற்க வேண்டும் என்பது எச்சப் பொருள்.

262. ஆயபல் வேறுகலே யத்தனேயுங் கற்றிடினுந்
தோய வொணுத சொருபவருட் சிற்பதத்திற்
சாயைகளே யாகத் தவிர்ந்தொழியு மன்னவைபொய்ம்
மாயையிலே யன்றி வழங்குமா றில்லேயே. ௯

263. மதசாத் திரங்கள் வகைப்படக்கற் றுலும்
மதிசூக் குமமா மடுக்கிலன்றி யுள்ளத்
ததிசூக் குமவுண்மை யான சொருபப்
பதியோர்த் தறிந்துமட்டிற் பற்றவொண் ணுதே. க0

264. தீர்ந்தபர மார்த்தத் திறந்தெரிய வுற்றுருக்
கோர்ந்தறிய வேண்டுவதா வுள்ளபல சாத்திரமும்
ஆர்ந்தமெய்ஞ் ஞான வனுபூதி மான்களாற்
றேர்ந்தறியி லன்றித் திகைப்புண்டு பண்ணுபவே. கக

குறிப்பு:—தீர்ந்தபரமார்த்தம்—முடிவான பரமார்த்தம்.

## 30. வாதம்

(குறள்)

265. சொல்லுக்கெட் டாத சொருபத்தை வாதித்து
மல்லுக்கு நிற்கை மடம். க

266. கதண்டுபோல் வேகக் கரட்டுவா தஞ்செய்
விதண்டை கொடும்பாழ் விடம். உ

267. பேதமென் றுமில்லாப் பிரம்ம சொருபத்தில்
வாதமில்லை யான்மடங்குற் றுல். ந

குறிப்பு:—யான் மடங்குதல்—யானென்னும் அத்தியாச வகந்தை யானுரென்றுய்தலால், உண்மையில் அது என்றுமே முனைத்தலற்ற உணர்வுருவான வுள்ளத்தில் ஒடுங்குதல்.

## 31. மாயை

(கொச்சகக் கலிப்பா)

268. நிசித்திர ளாக நிகழா ணவத்தில்
விசித்திர மான விலாசஞ்சேர் மாயை
பசைத்திர ளான படைப்புருவா நம்முன்
*அசித்ததை நோக்கி யறிவழிந் தோமே. க

---

*அசித்தல்—நகைத்தல், தோன்றுதல்.

## 32. சிற்சத்தித் திறம்

(குறள்)

269. அவனிடத்தி னின்றே யவனுதித்து மீண்டு
மவனிடத்தே தானொடுங்கு வான். க

270. உண்மையே போற்பல் லுலகுகளைக் கற்பிக்குந்
திண்மைசேர் சத்திசச் சித்து. உ

271. முத்தியொன்றே பந்தம் முதலா வெலாமேசிற்
சத்தி விலாசச் சதிர். ங

272. மாயாசத் திக்கு வசப்பட்டார் நானெனுமோ
காயாசத் திற்பேர் வரிது. ச

273. கற்பனு பேதங் கணக்கிலவாக் காண்டலொரே
சிற்பரா சத்தித் திறன். ரு

274. கற்பனு சத்திக் கலக்கமறக் காண்பதுசச்
சிற்பரா சத்தித் திறம். சு

275. தற்பர வுண்மை தலைப்படக் கூட்டியது
சிற்பரா சத்தித் திறன். எ

(கொச்சகக் கலிப்பா)

276. ஒண்ணாத வற்றையெலா மொண்ணுவிப்ப தேசொருபத்
திண்ணான மாயாசத் தித்திறமென் றோர்ந்தாரேல்,
கண்மாய மாகக்காண் கண்கட்டு வித்தைகளா
வெண்ணாமல் யாது மிறும்பூதா நோக்காரே. அ

## 33. உலகு பொய்த் தோற்றம்

(குறள்)

277. பொல்லாத மோகவகைப் புன்புலமாஞ் சுட்டறிவே
யல்லா லெவன்கொ லுலகு. க

278. பரந்த வருட்சிற் பரவெளியி னுண்மை
கரந்தொழியக் காண்ப துலகு. உ

குறிப்பு:—காண்பது-காணப்படுவது; உலகு-காண்பான் உள்ளிட்ட திரிபுடி பேதக் காட்சி.

279. மஞ்சளைக் கண்டு மயங்கார் வெயிலின்முன்
முஞ்சுமதன் பான்மையுணர்ந் தோர். ௩

280. தோழமைகொண் டாரைத் துவைத்துப்பா ழாக்குவது
பாழிமைசேர் பாச வுலகு. ௪

281. மாயா விலாச மயக்கத் தழுந்தலுற்றோர்
தோயார்மெய்ஞ் ஞான சுகம். ௫

282. காணப் படுங்காட்சி கற்பனையே காண்பான்மெய்
மாணத் துலங்கிலன்றி மற்று. ௬

283. உண்மைப் பரமா வொளிர்சொருப ஞானமின்றேற்
கண்மயக்கே காணு முலகு. எ

284. வித்தகமெய் யாக விளங்கு சொருபத்திற்
பொய்த்தகல்வாற் பொய்முப் புடி. அ

285. சிற்பதமே தேர்ந்து செழிக்கத் திளைப்போர்க்குக்
கற்பனையே காணும் புலம். ௯

286. செவ்வேதம் முண்மை திகழிலன்றி யுள்ளத்திற்
பொய்யேதாங் காணும் புலம். ௧0

287. தற்பரமாந் தன்சொருபத் தன்மை யுணர்ந்தார்க்குக்
கற்பனையே காண்ப வெலாம். ௧௧

குறிப்பு:—அவை அவர்க்குக் கற்பனை யாதல் அவற்றைத் தன்னி னயலாகக் காண்போனை நானென்னு மவனே முதலிற் கற்பனையாகக் கழிந்தொழிந் தமையால் என்க.

288. உண்மைவிழிப் பாக வொளிர்கே வலங்காணிற்
கண்மயலே காணு மெலாம். ௧௨

289. விரியலுற்ற மாயா விலாசமே ஜீவர்
தெரியலுற்று மாழ்குஞ் செகம். கக

290. சுத்தசச் சித்தாச் சுடர்சொருபத் தற்பரத்திற்
சித்திரப்பொய்த் தோற்றம் செகம். கச

குறிப்பு:—'சித்திரமா மிஃதெல்லாம்' எனவும், 'நிழற் சக விசித்திரம்' எனவும் பகவான் கூறுவது ஈண்டு நினைவு கூர்தற் பாலது.

291. சுத்த வறிவொளியாத் துன்றுசொரு பத்திரையிற்
சித்திரமே தோன்றுஞ் செகம். கரு

குறிப்பு:—காண்பான், காட்சி, காணப்படுபொருளாகிய முப்புடியும் சேர்ந்ததே செகம்.

292. பரவெளியா வெங்கும் பரந்த சொருப
வுருவெளியே தோன்று முலகு. கசு

293. பார்ப்பானை யன்றியிலாப் பார்வைபோற் பார்வையைவிட்
டோர்ப்பதற்கு வேறின் றுலகு. கஎ

294. உண்மையைத் தேடியுளத் தோர்த்துணரார் போற்றுலகு
கண்மயலாத் தோற்றுங் கனு. கஅ

295. காண்பானுந் தன்னைவிட்டுக் காணப் படுமுலகு
காண்பானைக் கண்டு நகும். கசு

(கொச்சகக் கலிப்பா)

296. ஒன்றுக வுள்ளதோ ருண்மை யதனியல்பால்
என்று யினுமிரண்டா வேய்ந்ததில்லை; ஏய்வதில்லை;
தொன்று வியன்ற துவிதவுல கத்தோற்றம்
குன்றுத மோகக் குடிலமனக் கற்பனையே. உ0

297. திரண்டசற் போதச் செழும்பரமாந் தன்னில்
மருண்டமனக் கற்பனு மாயவுல கில்லை
வெருண்டெழுந்து மாயா விலாசத்திற் பாயார்
தெருண்டமனத் தாற்பொய்ச் செருக்கற்றோர் தாமே. உக

298. தாரகமா வெல்லார் தமக்கும் அகவெளியிற்
பூரணமாப் பொங்குசற் போத சொரூபத்தை
மாரகஞ்செய் தாற்போல மாயமா மையாந்தார்
காரணவு கற்பனையின் *கட்டணங்கா ணிவ்வுலகே. உ௩

299. மாயா விலாச மகத்துவமே நாமவுருச்
சாயா சமூக ஜகப்புரட்டு; நீயதிற்பட்
டோயா துழல்கை உடலா வுனைமருண்டு
பேயாத் திரியுமனப் பித்தலாட் டப்பிழையே. உ௩

300. நாரரவே போலமெய்ஞ் ஞான சொரூபமே
காரறிவா மோகமனக் கற்பனையாங் காட்சிக்குப்
பாருருவாய் மெய்போற் பயில்வதென் றோராதார்
பாரவியன் பாழிலகப் பட்ட மருளரே. உ௪

குறிப்பு:—நார் அரவே போல - கயிறே மனக்கலக்கத்திற் பாம்பாகத் தோன்றுவது போல.

301. பொறிவளர்பொய்ம் மாயப் புலவுலகு தேர்வா
ரறிவளவே யாக வறிகிலரேல் அன்னார்
மறவியாற் கற்பனையின் மாழ்கிக் கழியும்
வெறியரே யாவரென்பர் மெய்யுணர்ந் தோரே. உ௫

302. தொக்க சொரூபச் சுடரொளிதோ யாதவுயிர்
பொக்கவகப் பாழிற் புலப்படுஉங் கற்பனையிற்
சிக்கி யிடைவிடாச் சிந்தா குலவழற்பட்
டுக்கொழியுமென்றால் உலகியல்வாழ் வுட்குடைத்தே. உ௬

303. உண்மை யுணர்ந்தே னுளத்தவ் வுணர்வுருவ
வுண்மையொன்றை யல்லா துபயமில்லை; உள்ளபடி
நுண்மைபெறத் தன்னை நுனித்துணரா மோகமனக்
கண்மயல்காண் பல்விகற்பக் காட்சி யனைத்துமே. உ௭

*கட்டணம் - கட்டடம்

304. தன்னியலாய் வுற்ருேர் சதிர்ப்படுவர் ; தன்னியல்விட்
டன்னியமாய் வுற்ருே ரகந்தையாற் பாழ்படுவர் ;
அன்னியங்க ளெல்லா மவைகாண்பா னுட்படச்செம்
பொன்னணிகள் போலப் புலப்படூஉங் கற்பனையே. உஅ

305. உண்மைப் புலமாக வுள்ளத் தொளிர்சொருப
வண்மையால் வாழ்வு மலர்தலுற்ருேர் மாயமனக்
கண்மயலாத் தோன்றுபுலக் கட்டா முலகென்னின்
விண்மைபோ லஃது வெறுங்கற் பிதப்புலமே. உகூ

குறிப்பு :—என்னின்-என்பரேல் ; விண்மை-ஆகாய நீலம்.

306. சித்தமாந் தம்முண்மைத்தேற்றமில்லார் மெய்போற்காண்
மொய்த்தபற் பல்விகற்ப மோகப் புலவுலகு
சித்துருவாந் தன்னைச் செடவுடலாப் பேதுற்ற
மத்தவகங் கார மனப்பிழையாற் ருேன்றியதே. ௩0

## 34. அதிஷ்டானம்

(குறள்)

307. சிற்பரமா வென்றுந் தெளிந்த சிவசொருபத்
தற்பரமே *தாங்குந் தளம். க

308. துலங்குபர வுண்மைத் தொடர்பா லெனக்காண்
இலங்குவது மற்றிவ் வெலாம். உ

குறிப்பு :—தொடர்பு - சம்பந்தம்.

309. கற்பனு பேதமனக் காட்சிக் கடிநிலமா
கிற்பதொர்சச் சிற்கே வலம். ௩

குறிப்பு :—அடிநிலமாகிற்பது — ஆதாரமாயிருப்பது.

310. அடுக்கடுக்காப் பல்கோடி யண்டபகி ரண்டம்
சடக்கெனக்கற் பிப்பதுசச் சித்து. ௪

*தாங்குந்தளம் - அகிலத்தையுந் தாங்கும் அதிஷ்டானம்.

(கொச்சகக்கலிப்பா)

311. ஆன்ற சொரூப வருட்சிற் பரவெளியே
மான்ற மயக்க மனத்தோர்க் குலகுருவிற்
றேன்றுமா ரோபத் தொகைகளுக்கெல் லாம்பரமா
ஊன்றுமதிஷ் டானமென் றுய்த்துணரத் தக்கதே. ௫

## 35. பேதம் மனக்கற்பனை

(குறள்)

312. சொரூபசச் சித்தாத் துலங்கும் பரத்தில்
*விரோதவிகற் பங்கற் பனை. க

313. தொக்கதோ ருண்மை சொரூபமே; பற்பலவாப்
பக்கவெல் லாங்கற் பனை. உ

314. ஒருமைசே ருண்மை யுணர்வொளியூ டில்லை
இருமைசேர் பொய்க்கற் பனை. ௩

315. சுபாவமா வுள்ள சொரூபப் பரத்தில்
விபாகம் மனக்கற் பனை. ௪

குறிப்பு:—விபாகம் - ஜீவன் பரன் என்றுற் போலத் தூலசூக்குமோபாதி பற்றித் தோன்றும் பேதம்.

316. சொந்தமாத் துன்று சொரூபத்தி லென்றுமில்லை
பந்தமுத்தி யாங்கற் பனை. ௫

317. விசுத்தசிவ மான வியன்பரத்திற் பாசப்
பசுத்துவ(ம்)மா யக்கற் பனை. ௬

318. இயற்சிற் பரத்தி லிரண்டுமூன் றென்ப
மயற்கற் பனைகளே மற்று. ௭

குறிப்பு:—இரண்டு மூன்று - இரட்டைகள் முப்புடிகள்.

---

* விரோத விகற்பம் - மயக்க விகற்பம்; விரோதம் - இருள், மயக்கம்.

319. சுட்டறிவாத் துன்றுந் துவித மனைத்துமகப்
பட்டிமைசேர் மாயப் பரப்பு. ௮

320. கள்ளமனக் கற்பனையே, கண்ணுகத் தெள்ளிதா
வுள்ளதகத் தோரா ருணர்வு. ௯

321. ஒன்ருன வுண்மையிற்பல் வேறும் புலப்பாடு
தொன்ருன மாயமனச் சூது. ௧0

322. வெற்றறிவா மெய்யறிவில் வெவ்வேரு வுற்றறியும்
மற்றவெலாம் மாயா மயம். ௧௧

323. சுத்த வருள்வெளியாத் துன்று சொரூபமின்றி
மித்தையே தோன்றும் பிற. ௧௨

324. தோற்றவள வாகுந் துவிதந்தன் சிற்சொருபத்
தேற்றவனு பூதித் திறத்து. ௧௩

325. சுத்தவித்தை யான சொருபஞா னத்திலறப்
பொய்த்தொழியும் பேதப் புணர்ப்பு. ௧௪

326. துவித மனைத்துமனக் கற்பனையாத் தூற்றில்
அவிர்தருமுன் னுண்மை யகம். ௧௫

327. அறிவறி யாமை யிரண்டு *மவத்தம்
அறிவுருவாந் தன்மெய்த் திறத்து. ௧௬

328. ஒளிவெளியாப் பொங்குவதே யூனமற்ற வுண்மை;
பிளவுறுதோற் றங்கள் பிழை. ௧௭
குறிப்பு: பிழை— மித்தை, பொய்.

329. விசுத்தத் துரீய விழுப்பதத்திற் பாசப்
பசுத்துவமோர் பாழ்ங்கற் பனை. ௧௮

330. சொந்த சொரூபந் துலங்கலுற்ற ஞானிக்குப்
பந்தம் மனக்கற் பனை. ௧௯

---

* அவத்தம்—பிழை, மித்தை.

331. கற்பனு பேதமனக் கட்டறக்காண் கின்றவருட்
சிற்பதமே கண்டாய் சிறப்பு. உ0

332. ஒளிவெளியே யொன்ருன வுண்மை; இளிவரல்சேர்
கற்பனையே காணும் பல. உக

(கொச்சகக் கலிப்பா)

333. ஒருமையிலே பன்மைகளை யொன்ற வொடுக்கும்
உரவர்களே மெய்யுணர்ந்த வொள்ளியோர்; மன்ற
ஒருமையே யுண்மை; ஒழிந்தபல பேதத்
தெரிவனைத்தும மோகத் தெருமாற்காண் பன்றே. உஉ

334. கண்டடையத் தக்கவருட் கைவல்யப் பாதவொளி
மண்டுமகப் பார்வையால் வஞ்சவகப் பாழ்கரக்கக்
கண்டனவெல் லாமோர் கடவுட் பரவெளியா
மண்டியதாற் பேதம் மனுமையப்பொய்க் கற்பனையே. உ௩

## 36. உலகு பரமே யாம்

(குறள்)

335. விளங்குபரா சத்தி விலாசமே யுண்மை
யுளங்கிளரா நின்ருர்க் குலகு. க

336. வெளியா விளங்கு விசுத்த சொருப
வொளியலா தில்லை யுலகு. உ

337. தேறவெதிர் தோன்றுஞ் செகத்தின் ப்ரமார்த்தம்
பார வருட்சிற் பரம். ௩

338. பொன்மயமாத் துன்று பொலன்கலன்போற் காண்பானுந்
தன்மயமே காணுஞ் சகம். ௪

339. உள்ளத்தே யுள்ளமா வுள்ளதோ ருண்மையொளி
வெள்ளத்து நீர துலகு. ௫

340. பின்னமற்ற முற்றமுழுப் பெம்மான் சொரூபவொளி
வன்னமே மற்றிவ் வுலகு. கூ

341. போதப் பொருளின் புலங்காட்டி யாண்டகுரு
பாதவொளித் தோற்றமிப் பார். எ

342. வெளியான ஞான விசுத்தவருட் பெம்மா
னொளியிலே வாழு முலகு. அ

343. அறிவளவே யாக வகிலங் கலையும்
அறிவா ரறிவறிந் தார். கூ

344. மாண்பதமே வாழ்வா மனந்தெளிந்தோர்க் கைம்புலம்போற்
காண்பவைகா ணுங்கண் மயம். க0

345. சித்தந் தெளிந்தாற் செகந்தெளியுஞ் சிற்பரமாச்
சித்தமன்றி யில்லை செகம். கக

346. பொன்னையன்றி யில்லாத பூண்போல் அறிவுருவாந்
தன்னையன்றி யில்லை சகம். கஉ

347. வெளியில் வெளியா விளங்கு சிவச்சீ
ரொளிமயமே தோன்று முலகு. கங

348. வெளியே யுருவா விளங்கு சொரூப
வொளிமயமே தோன்று முலகு. கச

349. உள்ளங் குளிரி லுலகமுற் றுங்குளிர்வால்,
உள்ளமன்றி யில்லை யுலகு. கரு

(கொச்சகக் கலிப்பா)

350. காண்பானுந் தன்சொருபக் காட்சியா மெய்யுணர்வு
மாண்பா வகத்தே மடுக்கும் பரியந்தம்,
வீண்பாவம், பொய்யென்றோ மெய்யென்றோ சாதித்தல்
காண்பானுந் தன்னையின்றிக் காணு வுலகையே. கசு

குறிப்பு:—பரியந்தம் உலகைப் பொய்யென்றோ மெய்யென்றோ சாதித்தல் வீண்பாவம் என்பதாம்.

351. உணர்வன்றி யில்லை யுலகமெனத் தேர்ந்தவ்
வுணர்விலே யொன்ற வுலகை யொடுக்கில்
உணர்வுருவாந் தன்னோ டொருமயமாப் பொங்கும்
உணர்வுருவில் யாதோ ருபயமும்பற் றுதே. கஎ

352. சித்தமல மான செருக்கற் றெழிந்தவகம்
புத்தமுத மானவருட் போகம்பொங் கிப்பொலியும்
மத்தமனக் கற்பனைதீர் மாட்சியா லில்வுலகு
சுத்தசிவ மான சொரூபமாத் துன்றுமே. கஅ

353. தாறுமா றுகச் சரிக்குமனப் பான்மையே
ஏறுமா றன வியற்கைசே ரிவ்வுலகு;
வேறுபா டான விகற்பக் கலக்கமறத்
தேறுமோ னுனுபவஞ் சேரில் வெளியொளியே. கசு

## 37. சற்சங்கம்

(குறள்)

354. உள்ளத்தே தன்சொருப வுண்மையைக்கூர்த்
[தோர்த்துணர்ந்த
தெள்ளியர்பாற் சேர்தல் சிறப்பு. க

355. தொல்லியல்பா வுள்ள சொருபந் துலங்கலுற்ற
நல்லவர்பா லேநல் லினம். உ

356. ஆன்ம சொருப வருளா லகந்தெளிந்த
தான்மிகர்தஞ் சார்பே சதம். ௩

357. சாந்தானு பூதிச் சதிராளர் தம்முறவு
சார்ந்தார் தவம்படைத் தார். ச

358. ஒள்ளியமெய்ஞ் ஞான வுரவோரைப் பற்றுவோர்
கள்ளமனக் கட்டறக்காண் பார். ரு

359. ஒள்ளியா ரைச்சேர்ந் தொழுகலுற்றால் வெள்ளியோர்
தெள்ளியோ ராவர் சிறந்து. சு

360. பெரியாரைப் பேணல்போற் பேணினர்க் குண்மைப்
பெருமை தரும்பிறிதொன் றில். எ

361. துட்டவகப் பேய்மயக்கச் சூதறத்தீர் வார்சொருப
நிட்டரருட் பார்வைபெற் றோர். அ

( கொச்சகக் கலிப்பா )

362. மூன்றுப் புணர்பேத மோக வகந்தையறப்
பூன்ற சொருபானு பூதிப் புலநலம்பொங்
கான்றோ ரிடந்தேர்ந் தறிவு தெளியிலன்றி
மான்ற வகப்பேய் மனக்கலக்கம் மாறாதே. கூ

குறிப்பு: மூன்றுப் புணர்பேதம்—திரிபுடிபேதம்.

## 38. துற்சங்கம்

( குறள் )

363. வணக்க மிலாதவுன் மத்தச் செருக்க
ரிணக்கம் இழுக்குத் தரும். க

364. உள்ளன் பிலாத வுளத்தா ருபசாரக்
கள்ளங் கடுவிற் கடிது. உ

365. உலகவியா பாரத் துழல்வோ ருணரார்
இலகுமுப சாந்த வியல். ௩

366. சிற்பரமாச் சித்தந் தெளிந்து விரியாதார்
அற்பரே மிக்கோ ரலர். ௪

குறிப்பு: உலகியலில் மற்றெத்திறத்தால் எத்துணை உயர்ந்தோரேனும் உண்மையில் உயர்ந்தோ ரல்லர் என்பதாம்.

( கொச்சகக் கலிப்பா )

367. தருக்களா னத்தாற் றருக்குவ தன்றி
ஒருக்கி யுணர்வை யுளத்தி லொடுக்கார்
அரக்கரே போன்ற வகங்கார வேகச்
செருக்கக் கிறுக்கர்பாற் சேரவொண் ணாதே. ரு

368. இடர்ப்பா டுழப்பதற்கே யேதுவாத் தோன்றும்
உடற்பா முலகப்பா ழோம்புவதே யன்றிக்
கடப்பாடாச் செய்யக் கடவதவம் பேணார்
ஜடப்பா மரரிணக்கச் சார்பு தகாதே. சு

## 39. சிறியோர்

(குறள்)

369. காணப் படுமாயக் கற்பனையை மெய்யேபோற்
பேணுவார் பேதுபட் டார். க

370. ஆழ்கலமா மாழ்குற் றழுங்குவார் பொய்ம்மாயச்
சூழ்கனவின் சூதுணரா தார். உ

371. அகப்பொருளின் சீர்மை யறியார் புலனும்
புறப்பொலிவு கண்டுகளிப் போர். ங

372. ஒக்கவெங் கெங்கு மொளிர்சொரு பத்தைமனப்
பொக்கரெங் குங்காண் கிலார். ச

373. அலமரல்சேர் மோக வறிவால் உலகக்
கலவரஞ்சேர் கின்றார் கலார். ரு

374. மனக்கற் பனையே மதித்துழல்வர் மெய்யாந்
தனைக்கற் றுணர்கலா தார். சு

375. உவப்புக் கிடனாந்தன் னுண்மை யுணரார்
அவப்பொழுது போக்குகின் றார். எ

376. சிவத்திற் றமதுண்மை தேறகில் லாதார்
அவத்திற் பிறந்திறக்கின் றார். அ

377. ஒளிவெளியா வுள்ளத் துறுசிவத்தை *வஞ்சக்
களிமன்வர் பாழ்படுக்கின் றார். கூ

* வஞ்சக்களி—யானெனதென்னுஞ் செருக்கு.

378. ஒன்றான வுண்மையையுள் ளோர்த்துணரார் கற்பனையின்
மன்ற மனங்கலங்கு வார். ௧0

379. வஞ்சமனக் கற்பனையை வாழ்வாக மாழாந்து
துஞ்சுவார் மெய்யுணரா தார். ௧௧

380. கள்ளமனக் காட்சியே கண்டுகளிப் பார்தேறார்
தெள்ளியதோ ருண்மைத் திறம். ௧௨

381. மாயா விலாசத்து மாழ்குவோர் தம்முண்மை
யாயா தயலாய் பவர். ௧௩

382. உள்ளற் குரிய வுணர்வுருவாந் தம்மையே
கள்ளலுற்றார் கள்ளமனத் தார். ௧௪

383. பாச மனக்கற் பனைச்சுழலிற் பட்டுழல்வர்
கோசமாத் தன்னைமருண் டோர். ௧௫

384. தப்பலுற்று வாழ்விற் றவிப்போர் அகந்தைமனக்
கற்பனையிற் காலாழ்ந் தவர். ௧௬

385. உள்ளத் தமைதிசே ரொட்ப வுணர்வில்லார்
கள்ளமனத் தாற்கலங்கு வார். ௧௭

386. தனைக்கெடுத்துத் தானே தடுமாறு கின்றான்
மனக்கலக்கஞ் சேர்பா மரன். ௧௮

387. அழுங்குவா ருள்ளத் தறிவான வுண்மை
மழுங்கலுற்ற *பேய்ப்பா மரர். ௧௯

388. கலகமே வாழ்வாக் களிக்கு மனத்தர்
அலகை யுருக்கரந் தோர். ௨0

389. வாழ்வுக்கு வாழ்வா வளர்சொருபச் செம்பதத்தில்
மாழ்குவர்பொய்ம் மாய மடர். ௨௧

* பேய்ப்பாமரர்—அகப்பேய் வசத்தரான ஆணவர்.

390. மாயப் படிற்று மனத்தர் அருட்குமிகச்
*சேயர் சிவஞ்சேர் வெவன். உஉ

391. கூரிய நேர்மைக் குணமற்ற பொய்ப்படிற்றுப்
பூரியர்தம் வாழ்வு புலே. உங

392. செருக்கிக் கலங்குவோர் சித்தந் தெளிந்த
வொருக்க்மெவ் வாறுணர் வார். உச

393. விரிக்கவே யன்றி விகற்ப மனத்தை
யொருக்க வறியா ருளத்து. உரு

394. காரா ணவக்களியர் காணுர் கலாதீதச்
சீரார் சொரூப சிவம். உசா

395. கோசவடி வான குடிலமனப் பேதையர்வெம்
பாசவிடாய் சற்றும் விடார். உஎ

396. மருட்காணி தேடிமனம் மாழ்குவோர் உள்ளத்
தருட்காணி யாட்சியறி யார். உஅ

397. உருவெளித்தோற் றத்தி ஞெழியார் சொரூபப்
பரவொளிதாம் பற்று தவர். உசா

398. பற்றினு லன்றியருட் பார்வையகத் தாணவத்தோர்
தொற்றுமயற் பாச மறுர். ௩0

399. தெய்வத் திருவருளின் செம்மைத் திறந்தேருர்
மெய்வித் தகமிலா தார். ௩க

400. துளங்கு மனப்பாழ்ஞ் சுழலினின்று தப்பார்
விளங்கலுற **மெய்தேரு தோர். ௩உ

401. கலங்காத மோனவியற் கைவல்ய வுண்மை
துலங்காதார் வாழ்வே துயர். ௩௩

*சேயர்—தூரத்துள்ளவர்.

** மெய் - ஆணவப் பாழைக் கடந்து விளங்கும் பிரஞ்ஞான கனமான சுவசொரூப வுண்மை.

402. *மோகப் பரத்தையின் மோகத் தழுந்தினோர்
சோகிப்பர் சூதிற் சுழன்று. ௩௪

* மோகப் பரத்தை — மோகமாகிய பரத்தை, என்றது மாயாப் பிரபஞ்சத்தை.

(கொச்சகக் கலிப்பா)

403. சித்திரமாத் தோன்றுலக ஜீவியந்தங் கண்முன்னர்ப்
பொய்த்தொழியக் கண்டுமதன் மாயப் புணர்ப்புணரார்
மெய்த்திரம்போற் பற்றுளத்தால் விம்மிவிம்மி வெய்து
மத்தவகங் கார மயக்க மனத்தோரே. [யிர்ப்பார் ௩௫

குறிப்பு:—உணரார்—வினைமுற்று வினையெச்சம்; மெய்த் திரம்—நிலையான வுண்மை.

404. பேசற் கினியவருட் பேராளன் சுத்தசிவ
நேசக்கா தல்கூர நெஞ்சத் தொருப்படார்
பாசக்கா மக்கலையே பாராட்டிப் பாழ்படுவர்
கூசக் கடவதந்தக் குச்சிதர்தங் கொச்சைமையே. ௩௬

405. சித்தத்துட் சித்தாச் சிவமிருக்க மோனவருள்
வித்தகத்தாற் கண்டடைந்து வேணவா முற்றுது
மத்தமனத் தாலே மயங்கிநா னென்னதென்று
பைத்தியமே போலப் பதறுவார் பாமரரே. ௩௭

406. சீர்த்த சிவத்துவமாஞ் சிற்சொருப வாழ்வைமறந்
தூத்தையுடல் வாழ்வே யுவந்துவா ளுள்கழிப்போர்
ஒர்த்துணர்வில் லாது வயிற்றுக்கே யுண்டுறங்கும்
மோத்தைகளே யாக முயங்குஞ் சடர்களே. ௩௮

407. காணக் கடவசிவக் கைவல்ய மாண்பதந்தாம்
பேணிப் பரமார்த்தப் பேறுபெற நோக்காதார்
வீணிற் பிறந்திறக்கும் வீணரெனத் தாம்பரிந்து
நாணப் படத்தக்கார் நல்லோராற் காணவே. ௩௯

408. நாணவே தக்கதற்கு நாணு மடச்செருக்கர்
நாணவேண் டாததற்கு நாணுவார் நல்லார்போல்,
மாணவொண் ணுத மயக்கவசத் தாலுடலே
பேணுவார் மானுபி மானவகப் பேயரே. ௪0

409. தான்றானு வுள்ளசிவத் தன்மையைமற் றுணவத்தோர்
ஏன்று னுணர்வ ரெளிய பசுத்துவத்தோர்;
யான்று னெனுமருட்சிக் கேதுவாம் பேதைமைதீ
ரான்றோர்பா லுள்ளுணர்வா லாய்ந்தறியார் தம்மியலே. ௪௧

410. அருட்பொலிவா லென்னையகத் தாண்டான் *சொரூப
விருப்பொளியா லுண்மை விளங்கலுற்றோ ரன்றி
அருட்பொலிவு நோக்கவல்ல ரல்லர், உடல
மருட்பொலிவே நோக்கி மயங்குமனத் தோரே. ௪௨

* சொரூப விருப்பொளி - அன்பருக் கார்வமெழுவிக்கின்ற சொரூபவொளி.

411. வேண்டிய வாறே விநோதமா யாஜாலத்
தீண்டலுற்ற பாச வியற்கையோர் சொப்பனமாக்
காண்டலுற்ற மோகமனக் கற்பனையிற் கன்றியே
மாண்டொழிய வீண்டறிவு மக்களின்பாற் பட்டதன்றே. ௪௩

குறிப்பு:—ஈண்டறிவு மாக்களறிவின் பாற் பட்டதன்றி மக்களறிவின் பாற் பட்டதன்றென்பதாம். மக்கள் : மக்களறிவுக் காகுபெயர்.

412. மூலா ணவப்பேய் முனைத்தலாற் பொய்ம்மாயக்
கோலா கலத்திற் குதூகலித்துக் கொந்தளிப்பார்,
தோலாத ஞான சொரூப வருட்பதத்தே
நோலாத மாந்தர் நுடங்கி முடங்குவரே. ௪௪

413. உள்ளமா வுள்ளத் தொளிர்சொருப வுண்மையையவ்
வுள்ளமே யாகவுளத் துள்ளாழ்ந் துணரகில்லார்
வெள்ளமனக் கற்பனு விட்சேப சொப்பனமாங்
கள்ளமயக் கப்பிறவிக் கட்டறத்தான் காணுரே. ௪௫

414. துள்ளு மகப்பேய்த் துடிப்பால் விசித்திரப்பொய்க்
கள்ள மயக்கமனக் கற்பனையிற் கன்றுவோர்
உள்ளுவா ருள்ளத் தொளிர்பரமா வுள்ளதனை
எள்ளுவோ ராயிரங்கி யானெனதென் றேங்குவரே. சசு

415. கள்ளமா மோகவகங் காரமற வுள்ளத்துத்
தெள்ளிதா வுண்மை தெளியாதார் சுத்தவருள்
வெள்ளமா மோன வெளிப்பரத்திற் கள்ளமாத்
துள்ளுமனக் கற்பனு சொப்பனங்காண் சூதரே. சஎ

416. ஏனையமற் றேது மியல்பன்று தன்னுருவாத்
தானியல்சுத் தப்பரமே தத்துவமாம்; அஃதுணரா
தூனவுருத் தாமா வுயிர்க்குமகப் பேய்மனத்தர்
யானிதுவென் றேங்கி யிறந்துபிறந் தெய்ப்பரே. சஅ

417. அணங்குதாக் கென்றறியா தைம்புலத்தை யாசித்
திணங்கலுற்ற வேழையரை இன்பக் களியா
லுணங்கவுளத் துண்ணின் றுயிர்கவரும் மாயைக்
*குணங்கொடுகூ டுற்றார் கொடும்பாழ்வீழ் வாரே. சகூ

*குணங்கு - பேய்மகள்

418. மத்தாகங் கார மயக்கமரு *வீணர்அகஞ்
செத்தாரே போற்சாத் திரஞானத் தாற்பிறரை
வித்தாரம் பேசி வெருட்டுமனப் பேதையருக்
கெத்தாலு மில்லைபே ரின்பங்கூர் மெய்யுணர்வே. ரு0

* வீணரான பேதையர் எனக்கூட்டுக.

## 40. மனம்

(குறள்)

419. அருட்பூ ரணத்தி லகந்தையாத் தோன்றும்
மருட்கற் பனையே மனம். க

420. அவ்வதனைச் சார்தலால் அவ்வப்போ தவ்வதன்
வண்ணமா நிற்கும் மனம். உ

421. இரண்டு படாத வியற்சிற் பரத்தை
மருண்டுபடும் மாய மனம். ௩

422. பொய்யான கற்பனையை உள்ளதன்மே லேறிட்டு
மையாக்கும் மாய மனம். ௪

423. இரட்டையொடு முப்புடியென் றின்னவற்றை மெய்போல்
மருட்டுவது மாய மனம். ௫

424. உள்ளமா வுள்ளபர வுண்மையைக் கள்ளலுற்று
மாழ்குமகங் கார மனம். ௬

425. நஞ்சிற் கொடிய நவைப்படுகா ராணவப்பாழ்
வஞ்சக் கரவு மனம். ௭

426. இன்பவீ டான வியற்பரத்தில் வெம்பிறவித்
துன்புறுவ தூனமனச் சூது. ௮

427. ஆயபர மார்த்த மறிந்தோர்க்கு முற்றமுமு
மாயமே யாகும் மனம். ௯

428. இயல்விளங்கப் பெற்ற விதயத்தில் இல்லை
மயல்வழங்கும் மாய மனம். ௧0

429. பொங்கு சொரூபவருட் பூரணமாந் தன்னிலையில்
மங்குமனம் மாய மயல். ௧௧

430. ஒன்றையுஞ் சாரா தொழியில் வெளியுருவா
மன்ற விளங்கும் மனம். ௧௨

## 41. சுத்த மனம்

(குறள்)

431. உண்மைவாழ் வாக வுளந்தெளிய வூற்றவருள்
வண்மையே சுத்த மனம். ௧

432. எண்ண வொணாத வியற்சிற் பரசொருப
வண்ணமென்பர் சுத்த மனம். உ

433. பண்ணுங் கருமமொன் றில்லாப் பரசொருப
வண்ணங்காண் சுத்த மனம். ௩

434. எண்ணமறப் பொங்கு மியற்பரசற் போதவருள்
வண்ணமென்பர் சுத்த மனம். ௪

435. எண்ணவொண் ணாத வியற்சிற் பரசொருப
வண்ணமென்பர் சுத்த மனம். ரு

436. பொன்னம் பலமேகாண் போத சொருபவருள்
வன்னங் கலந்த மனம். சு

437. உள்ளந் தெளிந்தா ருறுதிபெற்றார் சுத்தவருள்
வெள்ளமென்பர் மெய்சே ருளம். எ

438. இரவுபக லற்ற வியற்சிற் பரமே
உருவொழிந்த சுத்த மனம். அ

439. விண்ணேகண் ணாக விளங்கு சொருபவியல்
வண்ணமே சுத்த மனம். ௯

440. சித்தந் தெளிந்தார் சிவந்தெளிந்தார் புன்மலந்தீர்
சித்தமே சுத்த சிவம். க0

441. சித்தக் கலக்கமறத் தெள்ளத் தெளிந்திடிலச்
சித்தமே சுத்த சிவம். கக

குறிப்பு:—சித்தம் சிவமே என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக.

442. இதயவெளி யான வியற்சிற் பரத்திற்
பதியுமனம் சுத்தப் பரம். கஉ

443. ஆசையற்ற மோன வறிவான சாந்தியே
பாசமற்ற சுத்தமனப் பண்பு. க௩

444. தன்னந் தனிக்கத் தழைத்தவருட் கேவலமா
மன்னுவது சுத்தமன மாண்பு. க௪

445. எண்ணமற்ற வுண்மை யிலக்கமே சுத்தவருள்
வண்ணமாய் பொங்கும் மனம். கரு

446. உள்ளந்துாய் தாகத் தெளிந்தாற்பே ரின்பவருள்
வெள்ளமா மந்த வுளம். கசு

447. கோலவாழ் வாகக் குலாவுவது சுத்தவருள்
வாலறிவா வைகும் மனம். கள

448. சூழ்நிலையோ டொன்றித் துளங்கலில்லை தன்சொருப்
வாழ்விலே யூன்றும் மனம். கஅ

449. சிந்தை சிவமயமாச் சேர்ந்தோர்தஞ் சித்தமே
நிந்தைதீ ருண்மை நிலை. கசு

450. சிவமாத் தெளிந்தவருட் சித்தமே ஞானத்
தவமியல்பா நண்ணுந் தகவு. உ0

451. சிந்தனைக்கெட் டாதவருட் சிற்பரத்திற் செத்தமனம்
பந்தனையற் றூரும் பரம். உக

452. சித்தந் தெளிந்தாற் சிவனங்கே யென்றுமுண்மை
ஒத்தங் கொளிரு முனக்கு. உஉ

குறிப்பு :—உண்மை - இருப்பது. தெளிந்தால் ஒளிரும் எனவியையும்.

453. விளங்குசிவ ஞான விபூதிபெற்றோ ருள்ளம்
களங்கமரு கைவல் லியம். உங

454. செருக்கற் றமைந்தமனச் சீர்மையே மோனப்
பெருக்கமா முத்தி நிலை. உச

## 42. மகா வாக்கிய மாண்பு

(கொச்சகக் கலிப்பா)

455. பாக்கிய மாகமனம் பற்றக் கடவதுமா
வாக்கிய மான மகத்தாம் பரமார்த்தம்
ஊக்கியகத் தாழ வொடுங்கிநா னுரெனத்தன்
னேர்க்கில் அகம்பிரம்ம மாக வொளிருமே. க

## 43. சிவோகத் தியானம்

(கொச்சகக் கலிப்பா)

456. ஊறுபடத் தன்னை யுடற்றிமனக் கற்பனையில்
மாறுற் றெழுந்தவகப் பேயகற்றும் மந்திரமாத்
தேறு சிவோகத் தியானம் பரமார்த்த
வீறுயர்மெய்ஞ் ஞான விசாரமுறை தேறுர்க்கே. க

457. வெளியில் வெளியா விளங்கிலன்றி வாழ்வு
களிசே ரகந்தைமனக் கட்டறு வாற்றுல்,
ஒளிசே ருணர்வோ ருடலகந்தை யோயத்
தெளிசேர் சிவோகமதி செய்யத் தகுமே. உ

## 44. தியானம் மனக் கற்பனை

(கொச்சகக் கலிப்பா)

458. இரண்டலா வொன்றை இரண்டுவெவ் வேரு
மருண்டுநா னென்னும்பொய்ம் மாய மனத்தால்
திரண்ட தியானுதி சாதனை செய்வர்
தெருண்டுநா னென்னுஞ் செருக்கை விடாரே. க

## 45. சித்த சுத்தி

(குறள்)

459. சுத்த மனத்திலன்றித் தோய்வரிது தொக்கபரா
பத்திஞா னுனு பவம். க

460. கூர்மை யிலாதோர் குறிக்கொள்ள வொண்ணுது
சீர்மைசேர் தன்மெய்த் திறம். உ

461. உண்மைநிலை யொட்ப முணர்வரிது திட்பநுட்ப
வண்மையுர மில்லா மனத்து ௩

462. சித்தந் தெளியிலன்றித் தேற வொணுதுசச்
சித்தான சுத்த சிவம். ௪

463. சித்தந் தெளியிலன்றித் தேற்றரிதங் கென்றுமொளிர்
அத்தன் சொரூப வருள். ரு

464. கலக்க மகன்ற கருத்திற் றிருத்தமாத்
தேற விளங்குஞ் சிவம். சு

465. கற்பனு மோகக் கருத்தூ டொளிராது
சிற்பரனு மெந்தைபதச் சீர். எ

466. விஞ்சியதன் னுண்மை விளங்காது நானெனும்பாழ்
வஞ்சமதோன் மத்த மனத்து. அ

467. கருத்தே திருந்தார் கடந்த சொரூபப்
பரத்தையெவ் வாறுகாண் பார். கூ

468. உண்மையே வாழ்வா வுளந்திளைக்க வேண்டுமனத்
திண்மையிலார் *சிந்தை யருர். க0

* சிந்தை - சிந்தாகுலம், மனக் கவலை

## 46. சித்தம் சிவம்

(ஜீவன் சிவன்)

(குறள்)

469. சித்தமாத் தோன்றுவது சித்தே யெனவிளங்கும்
சித்தத்தின் மெய்தேர் வுறில். க

470. இவனையா ராய்ந்தா ரிதயத்தே அன்று
ரவனையே யாய்ந்தறிந் தார். உ

குறிப்பு:—இவன்-ஜீவன்; அவன்-சிவன். ஜீவனை ஆய்ந்தால் சிவம் வெளிப்படும் என்பதாம்.

471. துருவி யடைந்த சொரூபானு பூதித்
தெரிவிலே ஜீவன் சிவம். ௩

472. அந்தத் தெரிவே யனைத்துந்தா னுகவவிர்
சொந்தப் பரதத் துவம். ச

473 அறிவான வுண்மை யகத்திலே யாழச்
செறிவான சித்தஞ் சிவம். ரு

474 சித்தந் தெளிந்தார் சிவந்தெளிந்தார்; சுத்தவருட்
சித்தமலா தில்லை சிவம். சு

475 கதியான சுத்தவருட் கைவல் லியத்திற்
பதிவான சித்தம் பரம். எ

476. சிந்தையுரு வானமலந் தீர்ந்தொழியிற் சித்தமே
பந்தமற வோங்கும் பரம். அ

477. ஊன வகந்தையுரு வோய்ந்தவுயிர் சுத்தவருள்
வானமே யாகும் வடிவு. கூ

(கொச்சகக் கலிப்பா)

478. பொக்கவகங் காரப் புலங்கெடநான் யாரென்று
மிக்கமெய்ஞ் ஞான விசாரவருள் வாயிலாச்
சிக்கெனவுள் ளத்திற் செறிந்தாழ்ந் தொடுங்குமனம்
பொய்க்கனவா முப்புடிதீர் போதப் பரவெளியே. க0

479. சித்தக் கலக்கமறத் தீர்ந்தால் இதயமே
சுத்தப் பரசிவமாத் துன்றும்மோ னனுபவம்,
புத்திக்குட் போதமாப் பொங்கும் பரசொருப
சித்தியில்யா னென்னுஞ் செருக்கான மோகமற்றே. கக

குறிப்பு:—பரசிவமாத் துலங்க என அவாய்நிலையால் வருவித்துக் கொள்க.

480. எற்றி விசாரத்தால் யானென் பதுமுதலா
மற்றனைத்தின் சார்புமற மாற்றிக் கழித்தொழியில்
வெற்றிசேர் சுத்த வெளியா விளங்குமனப்
பெற்றியே தன்னுருவா பேணக் கடவதே. கஉ

## 47. அகந்தை அல்லது அகங்கார தோஷம்

(குறள்)

481. கூறுபடத் தன்னைக் குலைப்பதுடல் யானெனும்பொய்
சேறுபா டான வுணர்வு. க

482. தானென்ற தன்மையே தத்துவமாப் பொங்குவதில்
யானென்ற தன்மை மயல். உ

483 தானான வுண்மைதனக் கன்னியமாத் தான்மயங்கல்
யானென் றெழுந்த செருக்கு. ங

484. கற்பனைசேர் மோகவகங் கார மனத்திலன்றித்
தற்பரத்தி லில்லை தவறு. ச

485. யானெழுந்தா லெங்கு மிருந்தொளிர்சச் சிற்பரமவ்
யானெழுந்தா லெங்குமின் ரும். ரு

486. யானென் றெழுந்த விவன்குற்ற வாளியன்றித்
தானென்று மில்லான் தவறு. சு

487. யானே முதற்குற்ற மென்றெழிக்க லுற்றருக்
கேனோ வெனதென் பது. எ

488. இகந்தொழியத் தக்கதோ ரின்னாத பொல்லாங்
ககந்தையே யன்று பிற. அ

489. தானான வொன்றை யிரண்டு படுத்தியது
நானென்னும் மோக மனம். கூ

490. ஊன வகப்பே யுணர்வின் கலாபமே
தோன்றுபுடி பேதத் தொகை. க0

491. கற்பனைக்கெல் லாமூல காரணமாத் துன்றுமயற்
சற்பனைநா னென்னுஞ் சடக்கு. கக
குறிப்பு :—சடக்கு — செருக்கு.

492. பேதைமைசேர் நானெனும்பாழ்ம் பேய்முனைப்பே
பேதவிகற் பங்களுக்கும் வித்து. [பல்வகைய கஉ

493. முன்னை லெழுந்த முனைப்பே யனைத்துக்கும்
பின்னை லொழிகற் பிதம். கங

494. விருத்தமாச் சேர்ந்த வெறிசே ரகந்தைக்
கருத்தே கொடும்பாழ்ங் கலி. ௧௪

495. பாழ்த்தபழி பாவப் பசாசுமற்றொன் றெங்குமில்லை
காழ்த்தவகப் பேய்போற் கடிது. ௧௫

496. அகப்பேய்போல் உள்ளத் தறிஞரா லாராய்ந்
திகப்பக் கடவதொன் றில். ௧௬

497. தேகத் தெழுமத் தியாச வகந்தைமதி
மோகக் கலக்க முனைப்பு. ௧௭

498. பாசப் புலத்திலே யாசையாற் பாழ்படுகை
மூசுமகப் பேயின் முனைப்பு. ௧௮

499. தேக வுருவாச் செருக்கு மகந்தையே
மோகமனப் பாச முரண். ௧௯

500. ஏக மனேகமா வேய்ந்தாற்போற் றோற்றுவது
மோக வகந்தை முனைப்பு. ௨0

குறிப்பு :—தோற்றுவது — தோன்றுவிப்பது.

501. யானென்னும் மோக விருட்கற் பனுஜீவ
மானமே பொய்மை வடிவு. ௨௧

குறிப்பு :—யானென்னும் ........ மானம் — யானென்னுஞ் செருக்கு.

502. மோகமனச் சுட்டுணர்வா முப்புடியின் பல்விகற்பம்
தேகமகம் புத்தித் திறன். ௨௨

503. உடலுக்கே தம்மையற வொப்பித்த வாழ்வு
மடமைக்கோர் கோல வடிவு. ௨௩

504. மாயா விசித்திரத்தின் மாட்சி விளங்கலுற
நீயேதான் சாலுங் கரி. ௨௪

505. மாணவொணு வூன மனக்கற் பனுதுவிதம்
பேணலகங் காரப் பிழை. உரு

506. பிரமாத மோகவகப் பேயறிவே ஜன்மக்
கருமாய வாழ்க்கைக் கலாம். உசு

507. தேக மயக்கமறத் தீர்ந்தாலே தோன்றுலக
மோகக் கலக்க மறும். உஎ

508. எனக்கெனக்கென் றெண்ணுமவ் வீனப் பசாச
மனக்கலக்கம் பொல்லா மயல். உஅ

509. உள்ளத் தொளிர்சொருப உண்மையைக் கள்ளுவது
சிச்சடப்பொய்ம் மாயச் செருக்கு. உகூ

510. உண்மை விழிப்புக் குறுதடைநா னென்னுமயற்
றிண்மைசேர் வஞ்சச் செருக்கு. ௩0

511. பொய்ச்சடத்தை மெய்போற் புலன்செய்து மாழ்குவது
சிச்சடமா மோகச் செருக்கு. ௩க

குறிப்பு :—புலன் செய்தல் — புலப்படுத்தல், புலப்படக் காண்டல்.

512. வெளியில் வெளியா விளங்கு சிவத்தைத்
தெளியா தகந்தைச் செருக்கு. ௩உ

513. விசுத்தப் பரவடிவு தன்னினும்வே றுதல்
விசித்தவகப் பாச விளைவு. ௩௩

குறிப்பு :—வேறுதல் — வேறு போலத் தோன்றல்.

514. தானும் பரமார்த்தத் தத்துவத்தைக் கட்டியது
நானென்னும் பாழா ணவம். ௩ச

குறிப்பு :—பரமார்த்தத் தத்துவமாந் தன்னை என மாற்றிக் கொள்க; பிரம்ம சொருபமான ஆத்மாவை என்றவாறு.
பரசொருபத் தத்துவத்தை என்றும் பாடம்.

515. சிவச்செம் பொருளே பொருளாகத் தேறார்
அவிச்சையா லாவரிப்புண் டார். க௫

516. ஆணவமோ கத்தா லறிவு கலங்கியபாழ்
வீணர் பரந்தேர் வுறார். க௬

517. விஞ்சும் பரமார்த்த வித்தகக்கை வல்லியங்கண்
டஞ்சுவோ ராணவத் தோர். க௭

518. பேயாற் பிடிபட்ட தேயறியாப் பேயரெங்ஙன்
பேயின் விடுபடு வார். க௮

519. சல்லியஞ்சேர் மோகச் சதிகாரப் பேயகந்தைப்
புல்லியர்தே றார்மெய்ப் பொருள். க௯

520. அகங்கார மோகமுனைப் பற்றொழிந்தா லன்றி
முகங்காட்டாள் முத்தித் திரு. ௨0

521. யானென்னும் மோக வியற்கையோர் சிற்பரமோ
னைந்தந் துன்ற லரிது. ௨க

522. மாய வுலகை மதித்துண்மை யாகமனம்
மாயல் உடல்வா தனே. ௨௨
* மாயல் –செத்தாற் போல வருந்தல்.

523. கள்ள வகந்தை கழன்றொளிர்தன் மெய்யுணர்வே
உள்ளங் கலங்கா வுரன். ௨௩

524. பிரியா துறையும் பிரான்சொருப வுண்மை
தெரியாமை மோகச் செருக்கு. ௨௪

525. ஒருதான் பலபோலா வொன்றைக்கண் டொன்று
வெருவல் விசித்திரங் காண். ௨௫

526. தற்பெருமை போலயாங் காணேந் தரணியின்மற்
றற்பமனப் பான்மை பெரிது. ௨௬

## 48. பிரமாதம்

(குறள்)

527. பிறவனைத்துங் கற்றறியப் பெற்றோர்க்குந் தன்மெய்
யறிவறியாப் பிழை பெரிது. க

528. போத சொரூபம் புறக்கணிக்கப் பட்டவுயிர்
வேதனையே வாழ்வாய் விடும். உ

529. வினைக்கலக்க மானபெரு வில்லங்கக் கட்டு
தனக்குறல்கர்த் தத்துவமே தான். ௩

530. சொருபவுண்மை பற்றிச் சுடர்தலின்றி யூன
வுருவகமென் றூழ்த்தொழித லென். ௪

531. ஏமஞ்சேர் முத்திக் கிடையூறு மன்னுயிர்க்குக்
காமியஞ்சேர் மோகக் கருத்து. ரு

532. மறவியே போற்கொடிய மாற்றான்மற் றில்லை
யறவடர்க்கத் தக்க தகத்து. சு

533. நினைப்புரு வாக நிகழ்தலே சித்தந்
தனைப்பற் றுதற்குத் தடை. எ

534. நினைப்பு மறப்பா நிகழும் மனமே
தனைப்பே துறச்செய் தவறு. அ

535. மயக்கமே போன்ற மறலிவே றில்லை
யுயக்கருத லூற்ற வுயிர்க்கு. ௯

536. மயலூ டமுந்து மனத்தின் வடிவே
முயலூ ரகந்தை முனைப்பு. க0

537. சடவுடலாத் தன்னைத் தடுமாற லூற்ற
மடமையே மாய மயக்கு. கக

குறிப்பு :—மாயச் செருக்கு எனவும் பாடம்.

583. தன்னை யுடலாத் தடுமாறும் பேதைமைபோல்
இன்னல் விளைப்பதொன் றில். கஉ

539. அயர்க்கவொணு வுண்மை யறிவான தன்கண்
மயக்கமோர் மாயம் மதி. கஙு

540. *மாதவகங் கார மனப்பிழையே தோன்றகில
பேதங் களுக்கும் பிறப்பு. கச

* மாதம் — பிரமாதம், மயக்கம்.

541. உணர்வுருவாந் தன்னை யுடல்வடிவாப் பேதுற்
றணவகமே மாயப் பிறப்பு. கரு

542. உடல்வடிவாத் தன்னை யுறழ்ந்துநோக் குற்ற
மடவுணர்வே மாயப் பிறப்பு. கசு

543. இயல்பான சொந்த வெழிற்சிற் பரவாழ்
வயல்போறல் ஆணவத் தால். கஎ

544. மெய்ப்பரமாந் தன்னுருவின் வேருகத் தன்னைமருண்
டெய்ப்பதுநா னென்னுஞ் செருக்கு. கஅ

545. உருக்குலைவுற் றூன முழப்பதுநா னென்னச்
செருக்கலுற்ற மோகத் திறம். கசு

546. மோக்கவியல் வாழ்வையே மூடிக் கலங்குவது
பேய்க்கலக்க மான பிழைப்பு. உ0

547. உண்டுண் டுலகமலப் பாழி லுறங்குவது
பண்டுபடு பாழ்வா தனை. உக

548. உள்ளமே யான வொளிப்பிழம்பாந் தன்மெய்யை
எள்ளலே பாழ்ம்பே ரிளிவு. உஉ

549. காயமா மோகம் கழிக்க வெளிதல்லா
மாயமா லங்காண் மனத்து. உ௩

குறிப்பு:—மோகம் — மோக வினைவான அகந்தைக்கு ஆகு பெயர்.

550. உள்ளமே யாக வொளிர்சொரூ பத்தையயர்த்
தெள்ள விடருழத்தற் கேது. உச

குறிப்பு:—அயர்த்தலே எள்ளலென்க; அயர்த்தல்—மறத்தல். பிரமாதமே பிறவித் துன்பத்திற்குக் காரணம் என்பதாம்.

(கொச்சகக் கலிப்பா)

551. உரிமைசேர் பூரணவாழ் வுள்ளிருக்க நோக்கா
திருமைசேர் கற்பனையூ டேங்கலுக் கேது
பெருமைசேர் சுத்தப் பிரம்ம சொரூப
வொருமைசே ருண்மை யுணராப் பிழையே. உரு

552. அற்றமறக் கண்ட வகத்திலன்றிப் பாசமனக்
குற்றமற்ற மோனவருட் கொற்றந் துலங்கலில்லை
அற்றமே மோக வகங்கார வாயிலாக்
குற்ற மனைத்துமெழக் கூட்டுகின்ற வாற்றலே. உசு

குறிப்பு:—அற்றம்—அழிவு.

553. அல்லா டகப்பா ழறிவோர் பரமாக
வில்லாத வற்றை யிதுவதுவென் றேறிட்டுக்
கல்லாத மோகமனக் கற்பனையாற் கண்டுகலங்
கல்லாட்ட மென்பர் அனர்த்த மயக்கமே. உஎ

குறிப்பு:—என்பர் அறிந்தோர் என்பதாம்.

554. போத சொரூபமாப் பொங்கலுற்ற புண்ணியன்பால்
ஓர்தவறு மில்லை யுணர்வு தெளிந்தக்கால்;
நோதகவுக் கேது நுனித்துண்மை நோக்கலற்ற
பேதைமையிற் சேர்ந்தவகப் பேய்த்தனமாஞ் சித்தமே.
உஅ

555 சூர்மைசேர் சாக்காடு சொச்சொருபப் பொச்சாப்பே:
கூர்மைசே ருண்மைக் குறிக்கோளர் தன்னிலையின்
சீர்மைசே ரோர்மை திறம்பார்; விசாரவொளி
யார்மனவர் சாவா வமுத சொருபரே. உகூ

குறிப்பு:—சூர் - அச்சம், உக்கு; பொச்சாப்பு - மறதி.

## 49. அகந்தை யழிதல்

(குறள்)

556. எங்குமிறை யேய்ந்திடினும் யானெனும்பா ழாணவக்கார்
மங்குறிலே தானொளிர் வான். க

557. நமவென் றிறைவனடி நண்ணுவோர் நானற்
றமைகின்றே ரேதம் மகத்து. உ

558. அத்தனருட் சிற்பரமோ னனுபவம் பற்றுவோர்
மத்தவகட் பேய்மாய்ந் தவர். ௩

559. யானென்னும் மோகப்பா ழீனவுணர் வற்றநிலை
யூனமற்ற தன்மெய் யுணர்வு. ச

560. தேகான்ம பாவமறத் தீரிலன்றித் தீராது
மோகாந்த கார முனைப்பு. ரு

561. நானற் றொழியிலன்றி ஞான சொருபவருள்
வானத் தியல்வாழ் வரிது. சா

562. அகந்தையறக் காணிலன்றி யான்ம சொருப
முகந்துலங்கக் காண்ட லரிது. எ

563. யானெனும்பொய்த் தன்மை யிறும்வரையிற் றனெனு
தன்மை யடைந்ததன் றும். [மெய்த் அ

564. அற்றலே யன்றியகத் தாணவப்பேய், வாழ்வலரப்
பற்று தியற்சிற் பரம். சு

565. நானற் றொழியிலன்றி நண்ணவொணு தொட்பநுட்ப
வானப் பரசொருப வாழ்வு. க0

566. ஊன வுணர்வற் றொழியிலன்றி யில்லைமெய்ஞ்
ஞானவுணர் வான நலன். கக

குறிப்பு :—ஊனவுணர்வு-உடலுலக வடிவாகத்தோன்றுஞ் சீவபோதம்; ஞானவுணர்வு-அருள் வடிவாக வவிர்கின்ற சிவ போதம்.

567. ஊன வகந்தை முனைப் போய்தல் சொருபமெய்ஞ்
ஞானங் கிளர்ந்த நலன். கஉ

568. பேயகங் காரமறப் பேரிலன்றிப் பேரின்ப
நேயநிலை நேர்வ தரிது. கங

569. வஞ்சமனந் துஞ்சிலன்றி மன்னுயிர்க்கு வாய்ப்பரிது
சஞ்சலந்தீர் சாந்தி சுகம். கச

570. அழிவிலா யார்வதுதன் னுக்கமென நானற்
றழிவதே நோக்கா யகத்து. கரு

571. சுத்தப் பரசிவமே சொந்த சொருபமாச்
செத்தொழிய வேண்டுஞ் செருக்கு. கசு

572. மயக்க வகந்தை மனங்கெட் டொழிந்தால்
உயக்கமென் றுமில்லை யுயிர்க்கு. கஎ

573. பழிசே ரகந்தைப் படிற்று முனைப்பின்
கழிவே சொருபக் கலை. கஅ

574. மத்தவகங் கார மனங்கெட் டொழியுமட்டும்
சித்திமயக் கந்தீர் வரிது. கசு

575. தேகான்ம பாவமறச் செத்தா லனுபவமாம்
ஏகான்ம வுண்மை யியல். உ0

576. அகந்தை யுருக்குலைவுற் றாலே அறிவு
முகந்திடும்மோ னனு பவம். உக

577. ஆணவத்தை மாய்த்தா லதீதத் துரியமே
காணவத்தை யாகுங் கலந்து. உஉ

578. உருவா மகப்பே யுணர்வொளியாப் பொன்றல்
குருபோ தனைக்குறிக் கோள். உங

579. மருட்போத மாமகந்தை மாய்ந்துயிர்ப்பே யாண்டா
னருட்போ தனைதே ரறிவு. உச

580. கன்னிமையாம் மோகவகக் கட்டறலே சாத்வியாம்
பன்னியமங் கட்டும் பயன். உரு

581. அகந்தை யறிவா மறியாமை தீரின்
முகந்துலங்கும் முத்தித் திரு. உசா

582. அகந்தையறி வான வனர்த்தந் தொலேந்தாற்
றிகழ்ந்திடும் முத்தித் திறம். உஎ

583. யானென் றெருவனின்றே லென்னதென யாதுமிலே;
யானறலே முத்தி யியல். உஅ

584. தனுகரண மோகந் தணந்த வுணர்வே
அனுபவவாழ் வுண்மை யறி. உகூ

585. மாயவுடல் வாழ்வின் மயக்கமறில் வெம்பிறவி
நோயகல வீட்டுநோக் காம். ௩0

586. ஊனநா னற்றெழிந்த வுள்ளத் தொளிருமொரு
தானுன மெய்த்தத் துவம். ௩க

587. உய்யக் கடவதாச் செய்யக் கடவதகப்
பொய்யிற் கழிவதே யாம். ௩உ

588. பற்றற லென்ப தகப்பற் றறலென்றோர்ந்
தற்றெழிக வவ்வகப்பாழ்ம் பற்று. ௩௩

589. சுத்தசிவ ஞானத் துலக்கமுற வேண்டுவோர்
செத்தொழிய வேண்டுஞ் செருக்கு. ௩சா

590. விசுத்தசிவத் தன்மை விளங்குமகம் மோக
வசுத்த வகந்தையற் றால். ௩ரு

591. தெரிக்க வொணுதநிலே தானுத் தெரியும்,
மரிக்கி லகந்தை மனம். ௩சா

592. நானற் றெழிந்தமெய்ஞ் ஞானவருட் செம்பதச்சீர்
வானத் தமுதவியல் வாழ்வு. ௩எ

593. அவப்படு மோக வகந்தை யழிவே
சிவப்படு ஞானத் திறன். ௩௮

594. அகந்தை முனைப்பற் றெழிந்தாங் ககத்தே
யிகந்ததாம் பாச விகல். ௩௯

595. வெறிசே ரகந்தையை விட்டொழிந்தாற் கன்மக்
கிறிசேர் மயக்கங் கெடும். ௪௦

596. அயத்தனமா வுண்மையொளி யாரும் அகந்தை
மயர்த்தனமற் றேய்ந்த மனத்து. ௪௧

597. நானற் றெழிந்தமெய்ஞ் ஞானந் துலங்கிலருள்
வானமாத் துன்றும் மனம். ௪௨

598. பாழா ணவப்பேய்ப் பதைப்பொடுங்கிற் சிற்பரமே
வாழ்வா மலரும் மனத்து. ௪௩

599. ஊன வகந்தையுணர் வோய்ந்தொழிந்த வாழ்வேமெய்ஞ்
ஞானவியல் பான நடை. ௪௪

600. அங்கமகம் புத்தி யகன்று லனுபவமாம்
பங்கமற்ற வுண்மைப் பதம். ௪௫

601. திகந்த மளாய சிவானுபவஞ் சேரும்
அகந்தை யகன்று ரறிவு. ௪௬

602. மன்ற வியல்சொருப மாண்பிலே செத்தமனத்
தொன்றுமுப சாந்த வுணர்வு. ௪௭

603. மோக வகந்தை முடங்கலே சிற்பரத்தோ
டேகமா வுள்ள வியல். ௪௮

குறிப்பு:—நானுதியா துள்ளநிலை நாமதுவா யுள்ளநிலை (உள்ளது நாற்பது). முனைப்பறலே எனவும் பாடம்.

604. சிச்சடமா மோகச் செருக்கற் றெழிந்தநிலை
சச்சிதா னந்தப் பரம். ௪௯

605. மத்தக் கலக்கமா மாயச் செருக்கறத்தீ
ருத்தமரே யுண்மையுணர்ந் தோர். ௫௰

606. வினைக்கலக்க மான வெறிசே ரகந்தை
முனைக்கலற்றோன் சீல முனி. ௫௧

607. அகந்தை யகன்றார் பரமேதா மாக
முகந்துகொண்டார் முத்திபெற் றார். ௫௨

608. ஞானப் பரசொருப நாடாள்வர் யானெனும்பா
ழூனவகப் பேய்விடுபட் டோர். ௫௩

609. ஊன வகந்தை யுருக்கெட்டார் கூடுவர்மெய்ஞ்
ஞான சொரூப நலன். ௫௪

610. வல்லார்தம் வல்லாண்மை மாயமனப் பேயறக்காண்
பல்லா தயலெதூ மன்று. ௫௫

## 50. நிரகங்கார நிலை

(கொச்சகக் கலிப்பா)

611. பத்திசெய் வார்க்குப் பரமன் பதவுணர்விற்
புத்தம் புதியதாப் பொங்குபுள வானுபவம்
மத்தவகங் கார மயக்கமற்ற ஞானிக்கு
நித்தசித்த மாக நிகழ்வுறுதன் மெய்யியல்பே. ௧

குறிப்பு:—'புதியதுபோற் பொங்கு' எனவும் பாடம்.

## 51. சரணாகதி

(குறள்)

612. ஆண்டான் பரமாக வாக்கிவிடிற் பாரமுழு
தாண்டவனே தாங்குகின் றான். ௧

613. அரணாவ தாருயிருக் காண்டவன்பா லாற்றுஞ்
சரணா கதிதருமந் தான். ௨

614. சரணு கதிசா தனேயே அரணு
வடையக் கடவ கதி. க

615. தஞ்ச மடைந்தோர் சதாசிவசாந் தானுபவ
நெஞ்சரா நீடுவாழ் வார். ச

616. ஆண்டவனுக் கர்ப்பணமா வாக்கலுற்றுற் சேட்டையற
மாண்டொழியும் மாய மனம். ரு

617. அருட்புலத்து மாய்ந்தமன மாரமுத மான
திருப்பதத்து வாழுஞ் செழித்து. சு

618. தணக்க வொணுதான் *சரணுகத் தன்பா
லிணக்கமுற் றுரா லிறை. எ

(கொச்சகக் கலிப்பா)

619. அருளுக்குத் தம்மை யடைக்கலமாச் சேர்த்தோர்
இருளிற் கிடந்துழன் றேழையரா வேங்கார் ;
மருளற் றெளிர்துரிய வாழ்விற் சிவச்செம்
பொருளுக் கதிபராப் பொங்குவர் தாமே. அ

620. பகவ னருட்சிற் பதத்திலே தம்மை
யுகவொடுசேர்ப் பித்த வுரஞ்சான்ற நல்லோர்
சுகவியல்வாழ் வான சொருபானு பூதித்
தகவுசேர் மோனந் தலைப்படுகிற் பாரே. சு

குறிப்பு:—உரம்—திடம், திடபத்தி.

## 52. ஊணுதல்

(குறள்)

621. கடவுளுக்குத் தாமூணுக் கண்டோரே யந்தக்
கடவுளனு பூதிகாண் பார். க

* சரண்—ஆன்ம சமர்ப்பண மென்னும் தன்னிழப்பான சரணுகதி.

622. உணர்வுத் தெளிவாக வுற்றபரஞ் சோதிக்
குணவா ணவப்பா முணர்வு. உ

623. செத்துப் பிறந்தல் சிவத்தேநா னற்றொழிதல்
வித்தகர்க் கல்லா லரிது. ௩

## 53. தன்னிழப்பு

(குறள்)

624. யானென்னுந் தன்னை யிழந்தொழிந்தா லன்றிமற்
றானமென்றும் போகா துயிர்க்கு. ௧

625. யானென்ற தன்மை யிழந்தோன் பரசொரூப
வானென்ற தன்மெயடை வான். ௨

626. கங்கைநதி ஜீவன் ; கடல்காண் சிவசொருபம் ;
சங்கமமே தன்னிழப்பின் சால்பு. ௩

627. இறைவனுக்குத் தம்மையிழந் தெய்தும்பே ரின்ப
நிறையுணர்வே யுண்மை நிதி. ௪

628. நானுதியாத் தன்னிழப்பே ஞானந் தெளிந்ததிட
மோனநிலை யான முடிவு. ௫

629. நானுதியாத் தன்னிழப்பு நண்ணியவோர் மானவன்
வானவர்தஞ் சென்னிமே லான். ௬

630. நானற் றொழுகலே ஞான வரம்பான
மோன நடையின் முறை. ௭

(கொச்சகக் கலிப்பா)

631. தன்னுருயா தென்றகத்துத் தான்றேரில் யானென்னும்
பின்ன வகந்தைமதி பேதைமையாப் பேர்தலாற்
றன்னை யிழத்தலே தற்பரத்தைச் சார்தலெனப்
பன்னுவர்தம் முண்மைப் பரங்கண்ட மேலோரே. அ

## 54. பொருள்

(குறள்)

632. கூறறிவா லன்றிக் குறிக்கொளவொண் ணுவுருவே
பூரணவாழ் வாமெய்ப் பொருள். க
குறிப்பு:—உரு-சொரூபம், சுயசொரூபம்

633. சொரூபமாத் துன்றலாற் சுட்டறிவுக் கெட்டா
விருபமா மெய்ப்பொருளின் மெய். உ

634. இதயவெளி யாக வியல்சொரூப ஞானப்
புதையலே மெய்ச்செம் பொருள். ௩
குறிப்பு:—'மோனப் புதையலே' எனவும் பாடம்.

635. நித்தமா வுள்ள நிரதிசயா னந்தசிவப்
புத்தமுத வாழ்வே பொருள். ச

636. சுத்தவறி வாகத் துலங்கு சொரூபமே
புத்தரனு பூதிப் பொருள். ரு
குறிப்பு:—தானே தானே தத்துவம் என்பதாம்.

637. வெளிதானு நின்ற விசுத்தவகந் தானே
யொளிர்தா ரகமாம் பொருள். சா

638. அகத்தே விளங்கு மகச்செம் பொருளே
மகத்தாங் கதிமன் னுயிர்க்கு. எ

639. தானேதா னுகத் தழைத்தொளிர்சற் போதவருள்
வானே பரமார்த்த வைப்பு. அ

640. புலப்படாத் தானே பொருளன்றி வேறுப்
புலப்படுவ தன்று பொருள். கூ

641. நிட்களமா நெஞ்சிலொளிர் ஞேய சொரூபமே
புட்களமாப் பொங்கும் பொருள். க0

642. பொருளியல்பு கண்டு பொருந்துவார்க் கஃதே
யருளமுதா வாரு மகத்து. கக

643. உண்டாற் பசிதீர்த லொப்பவுளத் தொண்பொருளைக்
கண்டாற் கலிதீருங் காண். கஉ

## 55. அருள்

(குறள்)

644. அருளே பொருளா வடையப் பெருதோர்
வெருள்வர் மருளில் விதிர்த்து. க

645. அருளே பொருளா வடையலுற் ருர்க்குப்
பொருளோ பிறபல் பொருள். உ

646. போக்கமிலாத் துங்கப் பொருளெங்குங் காண்பரிது
மிக்கவருட் செல்வம்போல் வேறு. ந

647. அருளையே வேண்டுவ ரான்ருேர், தமிலவ்
வருளும் பொருளுமிகன் ருல். ச

648. நிறைவெளியே யாக நிகழ்சொருப மோவ
வறிவொளியே யுண்மை யருள். ரு

649. இருள்சே ரவிச்சை யிகவாது, சுத்த
வருள்விளங்கி லன்றி யகத்து. சு

650. உள்ளத் தருள்விளங்க லுற்ருற் கரந்தொழியும்
கள்ளத் தனப்பாழ்ங் கலி. எ

651. அங்கமகம் புத்தியற வார்ந்த வருள்விளக்கம்
பொங்குமனு பூதிப் புலன். அ

652. பேதமனக் கற்பனையைப் பீறிப் பிளப்பதுசற்
போதவருட் கூர்வாட் படை. கூ

653. ஒடுங்கொடுங்க வுள்ளத் துறுதி பயக்கும்
அடங்கடங்க வுள்விள் ளருள். க0

654. அருளாற் பரத்தை யறியென்பர்; அந்த
வருளே பரமென் றறி. கக

655. இனைத்தென் றறிய வெவராலுங் கில்லாத்
தனைத்துன்றல் சுத்தவருட் சால்பு. கஉ

656. மோன வெளியுணர்வே முத்தி சொருபமாத்
தானவிர்தல் சுத்தவருட் சால்பு. கங

(கொச்சகக் கலிப்பா)

657. திருவருளே தேறத் தெளிந்தசிவ பத்தி;
திருவருளே தேறத் தெளிந்தசிவ யோகம்;
திருவருளே தேறத் தெளிந்தசிவ ஞானம்;
திருவருளே தேறத் தெளிந்தசிவ வாழ்வே. கச

குறிப்பு:—திருவருள்-திருவருள் நாட்டத்துக்கு ஆகுபெயர்

658. அருள்விளங்கப் பெற்ற வகத்தோர் உலக
மருள்வசப்பட் டேங்கி மலங்கார்; சொருபத்
தெருள்விளங்க வாண்டான் திருவருளாற் பாச
விருள்விடுபட் டுண்மையியல் யானடைந்தே னன்றே.
கரு

## 56. அருட்பர சாம்ராச்சியம்

(குறள்)

659. கற்பனைதீர் சுத்தவருட் காட்சியாற் கற்றோர்காண்
சிற்பதமே சாம்ராச் சியம். க

660. பொய்மைதீர் சுத்தவருட் போதமா மோனமே
செம்மைசேர் சாம்ராச் சியம். உ

661. மோன வுணர்வு முழுமுதற்பே ரின்பவருள்
வானரசு நல்கும் மனத்து. ங

## 57. விசார சாதனை

(குறள்)

662. பாவனு யோகம் பயிலா திதயத்திற்
சீவனுந் தன்சொருபந் தேர். க

663. விசாரணைக்குத் தக்கோனு மேவின்மற் றெல்லா
மசாரமா நீங்க வகற்று. உ

664. சாதனையின் மேலாந் தரமென்பர் சாதகனு
மோர்தனைநன் கோர்த்த லுளத்து. ந

665. உணர்வுருவா வுள்ளத் துளானையோர் கிற்ப
துணர்வுபிற வற்றி லொழிவு. ச

666. சாந்திபெற வேண்டுவோர் சஞ்சலமற் றேயவகத்
தாய்ந்தறிய வேண்டு மகம். ரு

667. மாயமாத் துன்றுபிர மாதவகப் பேய்ச்செருக்கை
*ஆயலுற வேண்டு மகத்து. சு

668. பேதப் புலன்களையே பேணுமகங் காரமனஞ்
சாதற்கே செய்சா தனை. எ

669. யானு ரெனத்தன் னியலோர்த் துணரிலன்றி
யூனமே தேர்சுட் டுணர்வு. அ

670. அறிவான தன்னையே யன்னியம்போ லிஃதென்
றறிவா னெவனோ வறி. கூ

671. அகத்தே யகமாக வுள்ள பரத்தைத்
தகத்தேர்வ தேமெய்த் தவம். க0

---

* ஆய்தல்—ஆராய்ந்து களைந்தெறிதல், ஆராய்தலே களைந்தெறிதல். என்னை? உருவற்ற பேயகந்தை தேடினு லோட்டம் பிடிக்குமாகலின்—உள்ளது நாற்பது.

672. உதித்த விடமே யொடுங்குமிடம் யானெங்
குதித்ததென வோர்ந்துள் ளொடுங்கு. கக

673. கற்பனையைத் தாண்டுங் கருவி அகமுகப்பட்
டுற்பவமோர் கிற்கு முணர்வு. கஉ

874. ஏகாக் கிரமா விதயத் துசாவிலறும்
மோகாத் தியாச முனைப்பு. கஉ

675. ஓரா வுளம்புக் குதித்தவிடங் கூர்த்தறிதல்
வாராக் கதிசேர் வழி. கச

குறிப்பு:—ஓரா - ஓராநின்று.

676. மூடுவதா நின்றமதி மோகமறுந் தன்சொருபம்
தேடுவதா லுள்ளந் தெளிந்து. கரு

677. அடிப்படையா முண்மையைநன் காராய்ந் தறிந்தாற்
* புடிப்படைகள் பொய்த்து விடும். கசு

678. நுட்பநோக் காலே நுனித்துணர்கிற் பாரகத்தூ
டொட்பமாக் காணு **முரு. கஎ

679. ஊடுருவித் தேரி லுளத்தே அகம்பரமா
நீடுறுமெய்த் தன்மைவிளங் கும். கஅ

680. உதிப்பிடமெங் கென்றுள்ளாழ்ந் தோர்க்கிலுறும்
னுதித்தலற்ற * வுண்மை நிலை. [பொய்ந்நா கசு

* உண்மை நிலை-தானதுவாந் தன்னிலை

681. உள்ளுணர்வாற் றன்னையுளத் தோர்க்கலுற்றுற் றன்
விள்ளுறுமோர் சாந்த வெளி. [னுருவா உ0

682. கள்ளமனே மாயங் கழன்றொழியச் சோதனைசெய்
யொள்ளியோர் பாற்றே யுணர்வு. உக

குறிப்பு:—உணர்வு - மெய்யுணர்வு.

---

* புடிப்படை—திரிபுடிபேதத்திரள்
** உரு-சொருபம்

(கொச்சகக் கலிப்பா)

683. மறலியே யென்று மதிவல்லோ ரஞ்சும்
மறவியால் வந்து மடுத்ததே மாயப்
பிறவியெனில் அந்தப் பிறவிதீர் மார்க்கம்
விறல்சேர் சொரூப விசாரமன்றி யாதே. உ௨

684. அன்னியம்போற் றோன்று மகிலமே தங்களுமோர்
மின்னு சிதான்ம விலாசமே யாதலாற்
பன்னெறிக ளுள்ளும் பரமா விளங்குவதோர்
நன்னெறிதன் மெய்யுருத்தேர் ஞான விசாரமே. உ௩

685. உற்பவமே யோரு முசாத்திறத்தாற் பல்விகற்பக்
கற்பனைசேர் மோகவகங் காரமுனைப் பற்றொழியச்
சிற்பரமா மோனந் தெளியிலன்றி யுள்ளத்துத்
தற்பரமா முண்மைநிலை சற்றுந் தரியாதே. உ௪

686. யானு ரெனத்தன் னியல்விசா ரிக்கிலன்றித்
தானேதா னுவொளிர்சாட் சாற்காரஞ் சாராது;
யானு ரெனத்தேர்ந் திடிலிதயத் தொட்பநுட்ப
வானு வொளிருந்தன் மாட்சிசேர் வைபவமே. உ௫

687. துள்ளுமகப் பேயறத்தற் சோதித்து நானுரென்
றுள்ளடையா நின்ரு ருணர்வில் விளங்குவது
தள்ளவோ கொள்ளவோ சற்றுமொணு முற்றமுழு
வெள்ளடையா வுள்ள விசுத்தப் பரசிவமே. உ௬

688. கற்பனைதீ ருண்மைக் கடவுள்பால் யானுரென்
றுற்பவமோர்ந் தொன்ற வொடுங்குற்றோர் கைவல்யத்
தற்பரமே யாகத் தழைப்பதன்றி மாயமனக்
கற்பனையூ டொன்றிக் கலங்காரென் றென்றுமே. உ௭

## 58. விசார அறிவு

(குறள்)

689. சுத்தத் தெளிவாந் துரீய சொருபவருள்
வித்தை விசார விளைவு. க

690. அருட்பாக் கியவாழ் வடையும், மருட்பாழை
யூடுருவக் காண்கூ ருணர்வு. உ

691. யானெனுமச் சொல்லி னியற்செம் பொருளுணர்ந்தால்
மானவர்சச் சிற்பரமா வார். ௩

692. ஊனவாழ் வுய்த்துணர்ந்தால் ஒள்ளியபே ரின்பவருள்
வானவாழ் வாகும் மலர்ந்து. ௪

693. அலர்ந்துபர மாக வகந்தெளியி லன்றிக்
குலைந்ததன்று பாசக் கொளை. ரு

## 59. சுட்டறல்

(குறள்)

694. தம்மியலே தாமறியார் தாமறிந்த மற்றனைத்தும்
பொய்ம்மயல்சேர் கற்பனையே போனம். க

695. தன்னையே தானறியாத் தன்மையாற் பேதைமையே
அன்னியமே தேரு மறிவு. உ

696. விண்மைப் புலமே யெதிர்வோர்மே வார்சொருப
வுண்மைப் பொருள்கூர்ந் துளத்து. ௩

697. ஐயறிவாஞ் சுட்டறிவற் றறிலன்றித் தன்சொருப
மெய்யறிவு மேவ லரிது. ௪

698. உள்ளமே யாவொளிர்தன் னுண்மையினைக் கள்ளமனச்
சுட்டறிவு தேர்வுறுமோ தான். ரு

699. அறிவல்லா யாதுஞ் சடமா மசத்தென்
றறிவுதெளிந் தாற்சுட் டறும். ௬

700. தொட்டுப்பற் றுது சுகானுபவம், சுட்டுபுலத்
தொட்டுப்பற் றற்று லொழிந்து. ௭

701. காணக் கடவதந்தக் கண்ணுன தானேயாப்
பேணிலறும் பேத மயல். ௮

702. கண்ணுன தன்மயமாக் காட்சி யடங்கில்அருள்
விண்ணு விளங்குறுந்தன் மெய். ௯

703. வெறுவெளிமெய் யாக விகற்பமறிற் காணும்
அறிவொளிமெய் யானவான் மா. ௧0

## 60. சுபேச்சை

(குறள்)

704. நயக்க நயக்கமெய்ஞ் ஞானப் பதத்தை
மயக்கமனக் கட்டு விடும். ௧

705. தானுவா வுள்ளசிவ தற்பரமாஞ் சிற்பரத்து
வேணவா வொன்றே சுபம். ௨

706. மருளாசை மங்கலுற் றுரே மனத்தா
லருளாசை பூண்டோ ரறி. ௩

## 61. உரன்

(குறள்)

707. பாரம் பரிக்கப் பரமனுளா னென்னுமனே
தீரமே நெஞ்சத் துரன். ௧

708. ஆன்ற சொருப வறிவான மோனத்தி
லூன்றலே யுண்மை யுரன். ௨

709. உண்மையிலே சுத்த வுணர்வோ டொடுங்கு மனத்
திண்மையே தீரமென் பார். ௯

## 62. வைராக்கியம் அல்லது நிராசை

(குறள்)

710. ஒன்றும்வேண் டாத வுணர்வுரமே யுத்தமர்க்கேற்
கின்றபர வைராக் கியம். க

711. சொந்தப் பதியைத் துறந்து விபசரிக்கை
நிந்தைசேர் புன்புலத்து நேர்பு. உ

குறிப்பு:—ஆன்மசுகத்தை யகன்று விஷயசுகத்தை விரும்பி நுகர்தல் வியபிசாரத் தோஷமுடைத் தென்பதாம்.

712. வேசைவலைப் பட்டாரின் வேறல்லர் மோகப்பா
ழாசைவலைப் பட்டழுங்கு வார். ௩

713. துவிதமனக் கற்பனையாத் தோன்றுலகப் பாழில்
எவிதமெய் யின்பமுண் டாம். ௪

714. தன்னுண்மை காணத் தலைப்பட்ட தீவிரர்மற்
றின்னொன்றை நாட லெவன். ௫

715. விடுபட்டார் ஆசையை விட்டவர்; கட்டிற்
பிடிபட்டார் விட்டொழியா தார். ௬

716. உலகி லியங்கலா லூறில்லை, தன்னி
லுலக மியங்கா விடில். ௭

717. உடம்பே மிகையா வுணர்ந்துவர்க்க லுற்ற
திடம்பெறிலே தீருஞ் செருக்கு. அ

718. ஆசாபா சந்தீர்ந்த வந்நிலையே சுத்தசிவ
நேசானு பூதி தரும். ௯

719. மாயவுல காசையற மாற்றிலன்றித் தூயசிவ
நேயவுணர் வுள்ளத் துற்று. ௬0

720. ஆசாபா சங்கழன்று லன்றியகம் பற்றுது
நேசானு பூதி நிறைவு. ௬௧

721. ஆசையறப் பெற்ற வளவே பரமசிவ
நேசவுணர் வூறுவது நெஞ்சு. ௬௨

722. உறவுபிற வற்றி லொழிய வொழிய,
உறுதிபெறும் பத்தி யுணர்வு. ௬௩

723. விரும்பத் தகாவிடய வேட்கையாற் சித்தக்
கரும்புவேம் பாகுங் கசந்து. ௬௪

724. துறந்தொழியின் மோகமனச் சுட்டறிவில் வேட்கை
நிரந்தரமா மின்ப நிலை. ௬௫

725. ஆசைகள் யாவுமொருங் கார்ந்த மகிழ்வடிவாம்
ஆசையே சேரா வகம். ௬௬

## 63. அன்பு அல்லது பக்தி

(குறள்)

726. ஆண்டவன்பா லன்ட வளர்ந்த வகத்திலில்லை
ஈண்டவோ ராசைக் கிடம். ௧

727. அன்பு கலந்த வனுபவத்தோர்க் காண்டவன்பே
ரின்பநிலை மிக்க வெளிது. ௨

728. அன்பில் விளைந்த வமுத வுணர்வேபே
ரின்பவருட் பத்தி ரசம். ௩

729. அனுக்கராச் சேர்ந்தமெய் யன்பரைத் தன்னோ
டிணைக்கமாக் கொள்வா னிறை. ௪

730. அன்புறவு பூண்ட வகத்தமர்ந்து வாழும்பே
ரின்பவியல் பான விறை. ௭

731. இன்பமார் சாந்தி திளைப்பர் இறைவன்பா
லன்புற்ற வுள்ளத் தவர். ௮

732. நெஞ்சிற் கிளர்சொருப நேய வுணர்ச்சியே
வஞ்சக் கலக்கமகல் வாழ்வு. ௯

733. நீர்மைசே ரன்பு நிறை நெஞ்சிலன்றி யீசனருட்
சீர்மை திளைத்த லரிது. ௧

734. பழுத்தமெய் யன்பாற் பரமனடி போற்றி
வழுத்தலே யுண்மை மகிழ்வு. ௯

735. சீரியமெய் யன்புத் தெளிவா முணர்ச்சியே
கூரியசற் பத்திக் குறி. ௧0

736. அற்புதமா நின்ற வருட்பதத்திற் சொக்கிமனங்
கற்பதுகாண் பத்திக் கலை. ௧௧

737. புத்தியா லுள்ளம் பொருந்தக் கடவதுசற்
பத்தியே யானவருட் சால்பு. ௧௨

738. முத்திக் கலப்பான மோனவுணர் வற்புதசற்
பத்தித் திறத்தின் பயன். ௧௩

739. சதாபத்தி யாகச் சரிக்கு முணர்வே
உதாரத் தவத்துக் குரு. ௧௪

740. அன்பு சுரந்தெழுபே ரார்வமே மெய்யடியார்க்
கின்பவுணர் வூற்று வெழும். ௧௫

741. அதிசாந்த மாகமெய் யன்புணர்வு சாரின்
மதுவார்ந் தொளிரும் மனத்து. ௧௬

742. அன்பு விளைந்தா லருட்பரமாந் தன்சொருப
வின்பவியல் காணு மினிது. ௧௭

743. இன்பமெழப் பொங்கு மியல்பாகத் தற்பரமெய்
யன்புதழைப் புற்ற வகத்து. கஅ

744. சுத்தமெய் யன்புணர்ச்சி தோன்றிலகத் தத்தனருட்
சீர்மை விளங்குஞ் சிறந்து. கசு

745. புத்தியா லோர்த்தல் பொருளன்று சுத்தவருட்
பத்தியொளி சேராப் பதத்து. உ0

746. பரமகுரு வாகவுளம் பற்றிநிற்பான் பத்தித்
தரமுற் றவர்க்கிறைவன் றான். உக

747. கடவதுயா தென்னிற் கருத்திறைவன் றாளிற்
படர்வதாம் யோகப் பயில்வு. உஉ

748. பேரின்ப மானசிவப் பேறு சொருபமாக்
கூரன் புணர்வின் குலா. உங

749. ஆதரங்கூ ரன்பே யருட்சிற் பராநுபவஞ்
சேர்தருசற் பத்தித் திறம். உச

750. இருப்பாவா வுள்ளத் திலகு சொருப
விருப்பமே மெய்யன் புணர். உரு

## 64. தியானம்

(குறள்)

751. யாவ னெதனை யிடைவிடா தெண்ணுவான
அவனது வாக வவன் க

752. எண்ணலுற வேண்டுவோ ரீசனுல், ஈசனைத்தா
மெண்ணலுறிற் றானு மெனும். உ

## 65. நேயத் தழுந்தல்

(குறள்)

753 பேடகந்தை யானைமனப் பித்தலாட் டத்துமகிழ்
நீயகன்று நேயத் தழுந்து. க

754. காயமா மோகங் கழன்றொளிருந் தன்சொருப
நேயத் தழுந்தினோர் நெஞ்சு. ௨

755. காயத் தகந்தை கழன்றொழியுங் காறுமுயிர்
நேயத் தழுந்த லரிது. ௩

756. சிக்கெனவுட் பற்றிலன்றிச் சிற்பதத்தை மோகமனப்
பொய்க்கனவிற் றீர்த லரிது. ௪

757. சிவத்திலே மூழ்கித் திளைக்கிலன்றி மோக
வவத்தைக் கலக்க மறுது. ௫

## 66. சிவபத்தி

(குறள்)

758. ஆர்வங் கிளர்சொருபத் தாழ்ந்து திளைக்குமனச்
சீர்மைசிவ பத்தித் திறன். ௧

759. சிவத்திலே சேர்ந்து திளைத்தலே யுண்மைத்
தவத்திலே சார்ந்தமனச் சால்பு. ௨

760. சிவத்திலே யன்பு செழித்தலே யுண்மைத்
தவத்தியலாக் காணத் தகும். ௩

761. சிவத்தி லியல்பாச் செழிக்கலுற்ற வன்பே
தவத்தினாற் சாரும் பயன். ௪

762. திருந்தலா யன்பு சிவசொருபத் தூடு
பொருந்தலே பத்திப் புலன். ௫

763. இறைவன்பா லிச்சை யிறுகிற் பிறவற்
றறவு நெகிழ்ச்சி யுறும். ௬

764. நிலையாக வுள்ளசிவ நேய வுணர்வே
தலையான தெய்வச் சரக்கு. ௭

765. சிவநேயச் செல்வமே செல்வமச் செல்வம்
அவனியிற்பெற் றோர்பெரி யார் ௮

766. நெஞ்சந் தெளிந்தசிவ நேயர்க் கருள்கூட்டும்
விஞ்சுபர வித்தை யொளி. ௫௯

767. பாச மனத்திலே பற்றுது சுத்தசிவ
நேசவாழ் வாமெய்ந் நிறைவு. ௬0

768. சுத்தப் பரசிவத்திற் சொக்கலே யுத்தமசற்
பத்திப் பரானுபவப் பண்பு. ௬௧

769. அறிவே சொருபமா வாண்டா னடியிற்
செறிவே சிவஞ்சேர் திறன். ௬௨

(கொச்சகக் கலிப்பா)

770. பரம சிவத்திற் பரபத்தி பூண்டோர்
பரம சிவத்தையே பாவிப் பதனுற்
பரம சிவானுபவம் பற்றத்தந் நெஞ்சம்
பரமசிவ மாகவே தாமுயிர்ப் பாரே. ௬௩

## 67. பரபத்தி

(குறள்)

771. சிற்பரமா வுள்ள சிவத்திலே தானமுந்தக்
கற்பதே பத்திக் கலே. ௧

772. உள்ளும் புறந்தன்றே யொள்ளியோ ருள்ளமாத்
தெள்ளும் பரபத்திச் சீர். ௨

773. உதித்த விடத்தி லொடுங்க மனத்தைப்
பதித்தல்சற் பத்தியென் பார். ௩

774. அறிவுருவிற் சிந்தையழிந் தான்றமைந்த மோனம்
பிறிவில்சற் பத்தியென் பார். ௪

775. இன்பவுருள் வாழ்வா வியைந்த சொரூபமெய்
யன்புணர்வு பத்தியென் பார் ௫

776. சுத்தப் பதத்திற் றுலங்கும்ப சாந்தவுணர்
வத்தனருட் பத்தியென் பார். ௬

777. பேச வொண்ணுதவருட் பெற்றிசேர் சுத்தசிவ
நேசமே பக்தி நிலை. ௭

778. விழுமியசற் பத்தி விசுத்த சொரூபத்
துழுவலன்பு சேர்ந்த வுணர்வு. ௮

779. முத்தியா வென்னை முகந்துகொண் டான்சொருப
பத்திமோ றுணு பவம். ௯

780. பேரின்ப மோனவருட் பெற்றிசே ராண்டவன்பாற்
கூரன் புணர்வே குணம். ௧0

781. பேரின்ப மோனவருட் பெம்மான் சொருபத்திற்
கூரன்பே பத்திக் குலா. ௧௧

782. பேரின்ப மோனப் பிரான்பா லுளம்பொங்கக்
கூரன்பு பத்திக் குணம். ௧௨

783. சுத்தப் பரமாத் துலங்கு சொருபவருட்
பத்தியே முத்தியென் பார். ௧௩

குறிப்பு:—முத்தி - முத்தி சாதனம். 'சொருபவியற் பத்தி' என்றும் பாடம்.

784. சுத்த சிவமே சொருபமாத் துன்றுமியற்
புத்தியே பத்திப் பொலிவு. ௧௪

குறிப்பு:—புத்தி - போதம்.

785. உதாரமெய்ஞ் ஞானி யுளத்தியல்பே மிக்க
சதாசிவசற் பத்திச் சதிர். ௧௫

786. சுத்தப் பரசிவமாத் தொக்க சொருபவியற்
பத்திசற் பத்தியென் பார். ௧௬

787. தாமாக வுள்ள சதாசிவத்தை யெள்ளியிகழ்ந்
தோமாதி செய்யிலென் னும். ௧௭

788. சுத்தசற் போத சுகசொருப நேயமே
அத்துவித வுண்மையா மன்பு. கஅ

(கொச்சகக் கலிப்பா)

789. கூர்மைசேர் பத்திக் குலாவாம் பரயோகத்
* தோர்மைசே ருண்மை யுணர்வுதிக்கும்; பாரவருட்
சீர்மைசே ரன்புத் திறஞ்சால் சிவானுபவ
நீர்மையால் வாழ்வு நிராமயமாப் பொங்குமே. கசு

* ஓர்மை - ஒருமை.

790. பரிவுசே ருண்மைப் பரத்தே பயின்ற
வுரவுசேர் பத்தி யுணர்வால் அகந்தைக்
கரவுசேர் வஞ்சங் கரைந்தோர் அகத்திற்
பெருகுவார்—சுத்தவருட் பேரின்ப வாழ்வே. உ0

791. சிந்தித்துச் சிந்தித்துச் சிந்தனைமுற் றற்றக்கால்
உந்துமுனைப் பான வுணர்வை யறக்கெடுத்துச்
சிந்தனைக்கெட் டாதசிவச் சிற்பரந்தா னகவொளிர்
விந்தைசேர் மோனவருள் வித்தகசற் பக்தியென்னே. உக

## 68. சிவம்

(குறள்)

792. ஒளியா விளங்கு முணர்வான வுண்மைத்
தெளிவே பரம சிவம். க

குறிப்பு:—உணர்வான வுண்மைத் தெளிவு எனக்கூறினும் உணர்வுத் தெளிவான வுண்மை என்பதே கருத்தாகக் கொள்க.

793. கள்ளத் தனமாங் கரவுவெளிப் பட்டொழியத்
தெள்ளத் தெளிவே சிவம். உ

794. ஒளியே வெளியா வெளியே யொளியாத்
தெளிவே விசுத்த சிவம். ௩

795. கள்ளக் கலக்கமனக் கற்பனைதீ ருள்ளுணர்வே
தெள்ளத் தெளிந்த சிவம். ௪

796. விளைந்தவுப சாந்த விளக்கமே யுண்மை
தெளிந்த சிவானுபவச் சீர். ௫

797. அருளறிவா லன்றி யடையவொண்ணு வுண்மைத்
தெருள்வடிவ மென்பர் சிவம். ௬

798. உள்ளத் தியல்பா வொளிர்வுறுதன் னுண்மையே
தெள்ளிதாத் துன்று சிவம். ௭

799. தன்மாத் திரமாகத் தன்னாலே தானொளிர்சச்
சின்மாத் திரமே சிவம். ௮

800. விந்தையா நின்று விளங்குவதோ ருண்மையொளி
சிந்தை யிலாத சிவம். ௯

801. ஒப்பமா வுள்ளதோ ரொப்பநுட்ப வுண்மையே
செப்பமா வுள்ள சிவம். ௧0

802. இரண்டற்ற மோன வியற்சிற் பரமாத்
திரண்டமன மென்பர் சிவம். ௧௧

803. இரண்டற்ற மோன வியல்வா லறிவே
திரண்டபர மார்த்த சிவம். ௧௨

804. இரண்டிலா வாற்ரு லிதயத் தியல்பாத்
திரண்ட வறிவே சிவம். ௧௩

805. பரிசுத்த மானவருட் பார வெளியாத்
*தெரிசித்தே யுண்மைச் சிவம். ௧௪

* தெரிசித்து - விளங்கலுறும் சித்து.

806. உகளு மகந்தைமுனைப் போய வுளத்திற்
றிகழ்வேற் றறிவே சிவம். ௧௫

807. அவத்தை யிலாத வருள்வா லறிவாஞ்
சிவத்திலன்றி யில்லை சிவம். ௧௭

808. கற்பனு பேதங் களுக்கோ ரடிப்படையாஞ்
சிற்பரமே சுத்த சிவம். ௧௮

809. கற்பனையா வெல்லாங் கழன்றொழியக் காண்குறுசச்
சிற்பரமே சுத்த சிவம். ௧௯

810. கற்பனைசே ராதவருட் கைவல்ய வுண்மையே
தற்பரமாத் தங்கு சிவம். ௧௯

811. கற்பனைசே ராதவருட் கைவல் லியசொருப
சிற்பரமே சுத்த சிவம். ௨0

812. ஏமவாழ் வாக விதயத்தி லுள்ளவருட்
சேமநிதி சுத்த சிவம். ௨௧

813. சிவச்செல்வ மாரத் தினைக்கலுற்றுர் நோக்கத்
தவச்செல்வ மாகும் பிற. ௨௨

814. சிவமே சொருபமாத் தேறிலன்றி யார்க்கு
மவமா மயக்க மறுது. ௨௩

815. துரிய சொருபமே சுட்டறிவாற் சற்றுந்
தெரிய வரிய சிவம். ௨௪

816. நிறைவான மோன நிலையேகாண் முற்றச்
செறிவான சுத்த சிவம். ௨௫

817. அறிவான வுண்மையே யானந்த மோனச்
செறிவான சுத்த சிவம். ௨௬

818. அறிவிலே தன்சொருப மாகவொளி ருண்மைச்
செறிவேதான் சுத்த சிவம். ௨௭

819. கற்பனு ஜாலக் கருமயலைக் காலுமில்லாச்
சிற்பரமே சுத்த சிவம். ௨௮

820. கற்பனா மோகக் கலக்கமென் றென்றுமிலாச்
சிற்பரமே சுத்த சிவம். உகூ

821. கட்டுவீ டென்னுமனக் கற்பனையென் றென்றுமில்சச்
சித்துருவே சுத்த சிவம். ௩0

822. யாருமற்ற யாதுமற்ற முற்றமுழுப் பேரின்பச்
சீருணர்வே சுத்த சிவம். ௩௧

(கொச்சகக் கலிப்பா)

823. பரமசிவங் கண்டார் பரமசிவ மாவார்;
பரமசிவத் தன்மை சொருபவிபற் பானம்;
பரம சிவசொருப பானமா மோனப்
பரமசிவ வாழ்விற் பசுபாச மின்றே. ௩௨

824. பரம சிவமே பரமோப சாந்தி,
பரம சிவமே பராற்பரமா முத்தி,
பரம சிவமே பரமிருத வாழ்வு,
பரம சிவந்தம் *பரமார்த்த மாமே. ௩௩

* பரமார்த்தம் - பரமார்த்த சொருபம்.

## 69. நான் அல்லது அகம்

(குறள்)

825. ஒன்றாக வுள்ளத்தெங் கெங்குமொக் கப்பரந்த
நன்றான சச்சித்தே நாம். ௧

826. இரண்டுபடா வுண்மை, இகபத் தகமாத்
திரண்டொளிர் சுத்தசச் சித்து. ௨

827. யானென்ப தேமற் றெலாமந் திரங்களிலுந்
தானுயர்ந்தோங் குண்மைத் தரம். ௩

828. எப்பரத்தின் பாலாமற் றெல்லா மியல்வனவோ
அப்பரமே யுண்மை யகம். ௪

829. நிறைவாக நீடு நிருவிகற்ப மோன
வறிவாகு முண்மை யகம். ௫

830. உளக்கணுறை யொட்பநுட்ப வுண்மையே, சற்று
மளக்கலரு தன்மெய் யகம். ௬

831. தன்னியலோ வன்றிமற் றன்னியமோ தான்றோ
வன்னவறி வேமெய் யகம். ௭

832. குவிவதோ வன்றி விரிவதோ வின்றி
யவிர்வதே சுத்த வகம். ௮

833. வெருட்சிக் கலக்க விகற்பமற்ற சுத்த
வருட்சிற் பதமே யகம். ௯

834. அழுக்ககன்ற தூய வகத்திலன்றி யுண்மை
யொழுக்கமுறை காண்ட லரிது. ௧0

835. இகல்விகற்ப மற்ற வியல்வாழ் விதயத்
தகல்வெளியாம் போத வகம். ௧௧

836. அருளே வடிவா வலர்ந்த வகம்செம்
பொருளின்வே றன்றும் புலம். ௧௨

837. அனைத்துவித சாதனையுந் தன்னு ளடங்கத்
தனித்தொளிர்சை தன்னியமே தான். ௧௩

838. அறிவான வுண்மை யகமேகாண் மோனச்
செறிவாக வுள்ள சிவம். ௧௪

839. நானற் றெழுந்தமெய்ஞ் ஞானவருட் பூரணமே
தானென்ற மெய்த்தத் துவம். ௧௫

840. தானேதா னாகத் தனித்து விளங்குமுண்மை
தானே பரதத் துவம். ௧௬

841. அறிவாக வுள்ளேன் அறியவொன் றில்லேன்
அறிவான்யா னல்லனே காண். கஎ

## 70. 'யான் எனது' அறல்

(கொச்சகக் கலிப்பா)

842. தானேதா னாகத் தழைத்த சொரூபவருள்
வானே பரந்தாம மாட்சிசேர் கைவல்யம்;
யானேநுங் காணவம் மாண்பதமிவ் வையகத்தில்
யானே யெனதே யிறந்தோர்காண் கிற்பரே. க

## 71. தன்மெய் யறிதல்

(குறள்)

843. உய்த்துணரத் தக்கதோ ருண்மைதன் னுண்மையே;
மித்தையுணர் வேமற் றெலாம். க

844. தன்னுண்மை காணிலன்றித் தன்னைத் தவிரமற்
றென்னுண்மை காணிலுந்தா னென். உ

குறிப்பு:—காணல் - அறிதல்: "தன்னை யறிதலின்றிப் பின்னையெ தறிகிலென்" என்னும் ஆன்ம வித்தைக் கீர்த்தனம் ஈண்டு ஒத்து நோக்கத் தக்கது. என்னுண்மை - எந்த உண்மை.

845. தன்னுண்மை தேரலன்றிச் சற்றுமில்லை தான்பிறவற்
றின்னுண்மை தேர்வாற் பயன். ந

குறிப்பு:—'பிற' என்றது தன்னின் அயலாக அறியப்படும் உலகு பரங்களை; பயன் - பரம புருஷார்த்த மான முடிந்த பயன். 'ஐயே அதிசுலபம்' என்ற ஆன்மவித்தைக் கீர்த்தனத்தில் 'தன்னை யறித லின்றி' என்ற சரணம் இங்கு நன்கு ஊன்றி யுணரத் தக்கது. உள்ளது நாற்பதில் 'உருவந் தானாயின்' என்ற செய்யுளும் ஆங்கே உற்றுணரத் தக்கது.

846. யாதொருதன் னுண்மை யிதயத் தியல்வதோ
ஆய்தொறுந்திக் கித்து மது.

847. ஒளிவெளியா வுள்ளத் துணர்வுறு தன்மெய்த்
தெளிவுறலே சாயுச் சியம். ௫

848. தக்கவா றோர்ந்து தரிக்கலுற்ற தன்மெய்யே
தொக்கபர மார்த்த சுகம். ௬

849. ஒளிமயமா வுள்ள வெளியேதன் மெய்யாத்
தெளிவுறலே சித்தித் திறம். ௭

850. தானான வுண்மை தலைப்பட்டா லன்றியில்லை
மோனானு பூதி முகப்பு. ௮

851. தன்னுண்மை கண்டார் தலைப்படுவர் சுத்தசிவத்
தன்மையாங் கைவல்யச் சால்பு. ௯

852. காண வொணாதுசிவக் கைவல்யம் தானதுவா
மாண விளங்கலின் மற்று. ௧௦

853. அருள்வெளியா வுள்ள மவிர்தலே மைத்த
விருள்கலவாத் தன்மெய் யியல். ௧௧

854. கலக்கமென் றென்றுமற்ற கைவல் லியமே
இலக்கமாந் தன்மெய் யியல். ௧௨

855. வரம்பில்லைபே ரின்பவருள் வாழ்வா வகத்து
நிரம்புவதே தன்மெய்ந் நிலை. ௧௩

856. தனித்தவருட் சிற்பரமே தன்னுண்மை யென்பர்
இனைத்தெனத்தம் முண்மையுணர்ந் தோர். ௧௪

857. தன்னுண்மை கண்டாருக் கெல்லாமோர் தன்மயமா
மன்னும்பே ரின்பவருள் வாழ்வு. ௧௫

858. தன்மெய் யுணர்வு சதிர்த்தாற் கரந்தொழியும்
பன்மையுணர் வாங்கற் பனை. ௧௬

859. விண்டொழிவ தன்று வியாமோகப் பாசபந்தம்
கண்டவனைக் கண்டமையுங் காறு. ௧௭

860. வினை முதல்போற் றேற்றுந்தன் மெய்ம்மை யுணர்ந்தால்
வினைப்பாச பந்தம் விடும். கஅ

861. கொள்ளவோ தள்ளவோ கூடாத்தம் முண்மையைத்
தெள்ளுவோர் சேட்டையற் றோர். கசு

குறிப்பு:—சேட்டை-ஜீவபோதச் சேஷ்டை; தெள்ளுவோர் துள்ளலற்றோர் எனவும் பாடம்; துள்ளல்-அகந்தை முனைப்பு.

862. ஊதியமா வுள்ளொளிர்தம் முண்மையிற்போச்
பேதுறுமா மோகம் பிழை. [சாந்துலகிற் உ0

(கொச்சகக் கலிப்பா)

863. அன்னியமல் லாத வரும்பரமார்த் தம்தன்னி
னன்னியமே போல வலமருவோன் உள்ளுணர்வாற்
றன்னியல்யா தென்றுசவித் தன்னுண்மை காணில் அது
தன்னுருவே யாகத் தலைப்படத்தான் காண்பனே. உக

குறிப்பு:—உசவி-உசாவி, ஆராய்ந்து; அது என்றது பரமார்த்தத்தைச் சுட்டியது.

864. தன்னுண்மை காணான் தனக்காதா ரத்தலைவன்
றன்னுண்மை எவ்வாறு தான்காண்பன், ஆராய்ந்து
தன்னுண்மை காணலுற்றால் யானெனுமப் போலி முதல்
தன்னுண்மை யான தலைவன்பா லொன்றுமே. உஉ

865. ஊனென் றுயிர்பொறியென் றுள்ளம்பா ழென்றிவையே
யானென்னும் மோக வியற்பா முகந்தையறத்
தானென் றியல்பாத் தழைத்தொளிர்தன் னுண்மைநிலை
யானென்னும் மோனவியல் வைப்பாம் பரசிவமே. உங

866. கற்பனையைக் காணுமனக் கற்பிதநா னுள்ளடங்கு
சொற்பனமாத் துன்னுகத்துத் தோன்றிமறை பல்விகற்பக்
கற்பனை முற் றக்கடந்த காட்சியாஞ் சிற்சொருபத்
தற்பரமே தன்னுண்மைத் தத்துவமாத் தேர்கவே. உச

867. வெளியுரு வாக விளங்குறு மோனத்
தெளிவியல் சான்ற சிவத்துவ சித்தி
இளிவரல் சேர வெழுந்த முனைப்பற்
றொளிரியல் பானதன் னுண்மை யுணர்வே. ௨௫

868. யானற் றியல்சொருப ஞானமே ஞானமன்றி
யானிதுவென் றோர்ப்ப வெலாமுமனக் கற்பனையே
யானென்னுந் தன்மையின்மெய் யிற்றெனத்தான் காணளவும்
வானவருட் கைவல்ய வாழ்வு துலங்காதே. ௨௬

869. தன்மையி னுண்மையே தானறியான் அன்னியமா
முன்னிலை யோடு படர்க்கையின்மெய் யேனறிவான்
தன்மையி னுண்மை சதிர்ப்படத்தா னாய்ந்தறியின்
முன்னிலை யோடு படர்க்கையின்மெய் வேறன்றே. ௨௭

870. மாயக் கலக்க மனச்சுழலிற் பட்டுழல்வோர்
ஆயக் கடவதாந் தன்னை யலட்சித்தோர்.
வாயக் கடவபெரு மாண்பாம் பரமசிவ
நேயக் கருத்தர் நினைந்தறிக தன்னியலே. ௨௮

871. கருத்தைக் கருத்தாற் கடுக வுசாவிக்
கருத்தற்ற மோனங் கலத்தலா லுள்ளே
திருத்தமாத் தன்மெய் தெரிந்திட லன்றி
* விருத்த விபூதியின் மெய்விளங் காதே. ௨௯

* விருத்த விபூதி - ஒன்றொடொன்று தம்மில் உறழ்ந்தியல் பேதக் கற்பனை சத்திக் கடவுள் விலாசம்.

872. என்னையோ நும்முண்மை யாவரோ நீவிரென்றால்
இன்னமியா மின்னமியா மென்றுதஞ் சீர்வரிசை
தன்னுண்மை சாலச் சதிர்த்தாற்போற் சாற்றுவார்;
மன்றவே நன்றன்றூர் மாட்சிசேர் ஞானமே. ௩0

## 72. மெய்க்-கல்வி

(குறள்)

873. சிற்பரவாழ் வான சிவானுபவ மோனமுறக்
கற்பதே யுண்மைக் கலை. க

874. கற்பனை பேதங் கனவாக் கரக்கத்தற்
கற்பதே யுண்மைக் கலை. உ

875. கற்பானைக் காணத்தாங் கற்பதே கல்வியாக்
கற்போரே கற்றறிந் தோர். ௩

876. உள்ளும் புறமுமொருங் கொத்த வொழுக்கமே
கள்ளமகல் சீலக் கலை. ௪

877. இலக்கியமா வுள்ள விறைவனைத் தேற்றும்
இலக்கணமே ஞானக் கலை. ௫

878. தற்பரமே தன்சொருபத் தத்துவமா வுள்ளத்திற்
கற்பதுகாண் ஞானக் கலை. ௬

879. பொற்ப விளங்குசிவ பூரணமோ னனுபவக்
கற்புணர்வே ஞானக் கலை. ௭

880. வெற்றறிவே மெய்யா விளங்கலே கற்றறிந்த
ஞானக் கலையின் பயன். ௮

குறிப்பு:—மெய் - உண்மை வடிவு, சொருபம்.

881. கற்குந்தன் னுண்மையியல் கற்றறிந்த ஞானநிலை
கற்குங் கலைக்குக் கரை. ௯

882. அவமான மோக வகந்தையறல் சுத்தத்
தவமான ஞானச் சதிர். ௧0

883. சுத்த வறிவுத் துலக்கமே மோனவருள்
வித்தையென் பார்வித் தகர். ௧௧

884. யானென்ற தன்மெய் யியலே யறிகிலான்
ஏனையது தேர்ந்த லெவன். ௧௨

885. கற்கக் கடவுட் கல்வி சொருபமாக்
கற்கிலன்றிக் கற்றார் கலார். கரு

886. எல்லாமா வுள்ள வியற்சிற் பரசொருபம்
கல்லாதார் கற்றுங் கலார். கச

887. பெற்றுவக்க யாதும் பிறிதில்லை தன்னைத்தான்
கற்றுவக்கக் கற்ற விடத்து. கரு

888. நிற்பதே யுண்மை நிலையாகத் தன்சொருபங்
கற்பதே காட்சித் திறன். கசா

889. அடிப்படையா வுள்ளசுத் தான்ம சொருப்பப்
படிப்பினையே யுண்மைப் படிப்பு. கஎ

890. காண்பானைக் காணத்தாங் கல்லாதார் கற்றகல்வி
விண்பாழ்க் கிறைத்ததின்வே றன்று. கஅ

891. அன்னியங்கற் பார்கல்லா ரேரனே அறிவுருவா
யன்னிதஞ் சொந்த வடிவு. ககூ

குறிப்பு:—அன்னியங்கற்பார் தம் சொந்த வடிவு ஏனே கல்லார் என வினையும்.

## 73. மெய்க் காட்சி

(குறள்)

892. கடவுளோ டொன்றுக் கலந்த வுணர்வே
கடவுண்மெய்க் காட்சியென் பார். க

குறிப்பு:—"மெய்ப்பொருளின் உண்மையிற்றன் னுண்மை யினை யோர்ந்தொடுங்கி யொன்றுதலே, யுண் மையிற் காண லுணர்."
உள்ளது நாற்பது-8

893. கற்பனு பேதமறக் காண்டலே கைவல்யச்
சிற்பரமெய்க் காட்சித் திறன். உ

894. மாண்பான காட்சி மனந்தன் னுருவழிந்து
* சேண்பால தாகத் திகழ்வு. ங

* சேண்பால தாக - ஆகாயவியல்பிற்றாக.

895. காண்பான் சொருபவுண்மை காணுர்மற் றென்றுசுட்டிக்
காண்பதெல்லாங் கற்பனேயே காண். ச

896. கலக்கமனப் பாசங் கழன்றெளிருங் காட்சி
உலக்கலற்ற சாந்தி யொளி. ரு

897. அதீந்கிரிய மான வருளறிவாற் கூர்ந்து
ஜிதேந்திரியர் காண்பர் சிவம். சா

(கொச்சகக் கலிப்பா)

898. எண்ணமற்ற வுள்ளுணர்வால் எத்தகைய கற்பனேயும்
ஒண்ணு தொழியவகத் தொட்பநுட்ப மோனவியல்
விண்ணு விளங்கு விசுத்த சொருபவுண்மைக்
கண்ணேகாண் காண்டகுமெய்க் காட்சியாத் தேர்கவே. எ

899. ஒழிவிலா வுண்மை யொளியா லுயிர்ப்போர்
அழிவில்பே ரின்ப வரசிருக்கை யார்ந்தோர்
பழிபாவ மோகவகப் பாழறவே மாற்றுங்
கழுவாய் சொருபவருட் காட்சியன்றி யின்றே. அ

900. கற்பனேயிற் றீர்ந்த கடவுட் பெருங்காட்சி
சொற்பனமாச் சூழ்மயக்கச் சுட்டறிவா(ம்) முப்புடிநீ
சிற்பரமாச் சித்தந் தெளிந்து விளங்கலன்றி
அற்பவகப் பேய்ச்சுட் டறிவின்பாற் பட்டதன்றே. கூ

901. பொய்த்துவித மோகப் புணர்ப்பா மகந்தையால்
எத்தனேயோ காட்சி யெதிர்ப்படத்தாந் தோன்றிடினும்
அத்துவித மானபர மார்த்தத்திற் றன்சொருபச்
சித்துவமே யன்றித் தெரிசனமென் றென்றுமின்றே. க0

902. காண்டல் விகற்பமனக் காட்சியாக் கொள்ளாது
காண்டல் விளங்கலெனக் காண்க; பரசொருபங்
காண்டல் சொருபவருட் கண்ணு விருந்தொளிர்தல்;
காண்டலயல் யாதுமனக் கண்மாய மன்றியின்றே. கக

903. உள்ளத்தே சுத்த வொளிவெளிகா ணக்கிடைத்தால்
எள்ளத் தனையு மிடும்பையில்லை; மோகமறத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவச் செம்பொருள்வாழ்
வுள்ளதங்கு மோன வுணர்வொளியா மெய்ப்படவே. கஉ

904. நன்றாக வுள்ளத்து நாடித்தம் மெய்யுணர்ந்தார்
பொன்றாத சுத்தவருட் பூரணமாப் பொங்கலுற்றார்:
இன்றாக வுண்டாக யாதேனும், புத்தருக்கஃ
தொன்றா வொளிர்சொருப வுண்மையினும் வேறன்றே. கங

குறிப்பு:—'உண்டொரு பொருள்' (அருணாசல அஷ்டகம்-6) என்னும் பாட்டில், ஓர் சில்லால் நின்றிடு நீயே படநிக ரருட்குன்றே - நின்றிட சென்றிட நினைவிட வின்றே என்று பகவான் இக்கருத்தே யுணர்த்துவ தோர்க.

905. தத்துவங்கட் கெல்லாமோர் சத்துவமா வுள்ளபர
தத்துவங்கண் டாலன்றித் தம்முண்மை யாகவகத்
தொத்தபர மார்த்த வுரன்சே ருபசாந்த
வித்தகமா மோன விமுத்திநிலை சேர்வரிதே. கச

906. ஒளிவெளியா வுள்ளதோ ருண்மைகண் டோருக்
கிளிவரல்சே ரின்புதுன்போ யானெனதோ வில்லை;
களிவரல்சேர் மோகக் கருத்தைத் திருத்தித்
தெளிவியன்ற சுத்தசிவச் சிற்பரந்தே ரீரே. கரு

## 74. சொருபம் வரித்தல்

(குறள்)

907. அருட்புண் ணியத்தா லலாதே சொருப
விருப்புண்மை காண்ட லெவன். க

குறிப்பு: அருள் - சொருபவருள்.

## 75. சொருபம்

(குறள்)

908. கண்டுகளித் தன்பு கலக்கநமக் கென்றுமொன்
றுண்டிதயத் தோர்மெய் யுரு. க

909. மண்டார்வம் பொங்க மனேதீத வாழ்வொளியா
உண்டா லுளத்தோ ருரு. உ

910. இகத்திலு மில்லை பரத்திலு மில்லை
அகத்தகமா வுள்ள தது. ௩

911. அதனை யறிந்தா ரபரிமித மோனப்
பதநலங்கண் டாழ்வர் பரத்து. ௪

912. அருட்பரவாழ் வாக வவிர்சொருபத் தன்மை
இருட்படுநா னற்ற வியல். ரு

913. மோனவெளி யானமுழு மூதறிவாந் தற்பரமே
யானெனது நீத்தா ரியல். சு

914. எனதற் றியானற் றிருந்தொளிர்தன் மெய்யே
பனுவற் றுணிபாம் பயன். எ

915. கலைகளுக் கெல்லாம் முடிந்த கருத்தாக்
குலவுவது தன்மெய்க் குலா. அ

916. பூரணவாழ் வானவருட் போத சொருபமே
சீரணவு வேதச் சிரம். கூ

917. யாதுமே தானு வியல்சிற் பரசொருபம்
வேதவே தாந்த விளக்கு. க0

918. வேதமுடி பாக விளங்கு சொருபவருட்
போதமே சாந்திப் புலம். கக

919. சுத்தவறி வாகத் துலங்கு சொருபமே
முத்தியுரு வான முதல். கஉ

920. அறிவில் விளங்குறுசுத் தான்ம சொருப
நிறைவுபரந் தாம நிலை. க௩

921. அறிவுண்மை யானசுத் தான்ம சொருப
நிறைவிலன்றி யில்லை நிலை. க௪

922. குறைவிலா மோனக் குலாவான போத
நிறைவே சொரூப நிலை. கரு

923. நிற்றற் குரியநிலை நிட்டூர மற்றநிலை
மற்றற்ற தன்மெய்ந் நிலை. கசு

924. அச்சயமா வுள்ளவோ ரத்துவிதச் சிற்பரமே
நிச்சயமார் தன்மெய்ந் நிலை. கஎ

925. சூனியமே போன்ற சொருபவருட் பூரணமே
தானியல்பா வுள்ள சதிர். கஅ

926. ஒன்ருக வுள்ளத் தொளிர்சொருப வுண்மையின்முற்
றுன்ருது சூனியப் பாழ். கசூ

927. பிரஞ்ஞான மான பிரம்ம சொருபத்
தொரஞ்ஞான மில்லை யுணர். உ0

928. சுத்த வறிவாச் சுடர்சொருபத் தொன்றில்லை
மத்த வகந்தைமன மாசு. உக

929. சொரூப விலாசத்திற் பொய்த்தொழியும் மாயத்
திரோத மயக்கச் செருக்கு. உஉ

930. வெளியில் வெளியா விளங்குமான் மாலைத்
தளையுமோ பாசத் தடை. உஙு

931. உள்ள வொருதைபர வுண்மை உணர்வார்க்குத்
தள்ளவொருத் தன்னியல்பே தான். உச

932. தானேதா ருகைத் தழைத்தொளிர்சற் போதவருள்
வானே சொரூப வடிவு. உரு

933. காண்பா ரறிவைக் கடந்து விளங்குவது
மாண்பான சொந்த வடிவு. உசு

934. * தானேதா ருகைத் தனித்தொளிர்சற் போதவருள்
வானே சொரூப வடிவு. உஎ

* பாடல் 932-ன் பாட பேதமாகக் கொள்க.

935. தன்னந் தனிமுழுத் தத்துவமா வுள்ளபர
வன்னமே தன்மெய் வடிவு. உஅ

936. எண்ணாவொண்ணு மோன வியற்சிற் பரசொருப
வண்ணந்தன் னுண்மை வடிவு. உகூ

937. விரிஞ்சாதி யோரும் விளங்கவொண்ணு துட்கும்
பரஞ்சோதி தன்மெய் வடிவு. ௩0

938. காண வொண்ணுதவருட் காட்சி சிவமயமா
மாணவொளிர் தன்மெய் வடிவு. ௩௧

939. உண்மை யுணர்வா வுளந்தெளியப் பொங்குபர
வண்மைசேர் வாழ்வே *வடிவு. ௩௨

* வடிவு - சொருபம்.

940. துரியத் தெளிவாத் துலங்கு சொருபம்
*விரிசுத்த மோன வெளி. ௩௩

* 'பரிசுத்த மோனப் பதம்' எனவும் பாடம்.

941. ஈங்காக வுள்ளத் தியல்சொருப வுண்மையே
ஊங்காக வுள்ள பரம். ௩௪

942. அடிப்படையா வுள்ளோங் *ககப்பொருளே மாயைப்
படைப்பைக் கடந்த பரம். ௩௫

* அகப்பொருள் - அகம்பத லக்ஷ்யார்த்தமான சொருபம்.

943. வாழ்கொண்ட சுத்தவருட் கைவல்ய வுண்மையே
பாழ்கடந்த வுண்மைப் பரம். ௩௬

944. இருள்வெளியைத் தாண்டி யிலகு சொருப
வருள்வெளியே தற்பரமென் பார். ௩௭

945. அரங்கமா வுள்ளதுநம் மாட்டத்துக் கெல்லாம்
பரங்கருணை யாஞ்சிற் பதம். ௩௮

946. மதஞ்சே ரகந்தை மதிதீர் சொருபப்
பதமே பிரம்ம பதம். ௩௯

947. உள்ளொளியா வுள்ள *வுருவேபே ரின்பவருள்
வெள்ளவெளி யான பரம். ௪0

* உரு - சொருபம்.

948. தொடர்ந்தியல்பா வுள்ள சொருபமே காணிற்
கடந்தடைய வேண்டும் பரம். ௪௧

949. இதுவென் றறிய வெதனினும்வே றின்றே
வதுதானே மிக்க பரம். ௪௨

950. மிக்கபர மாக விளங்குவது வாலறிவாத்
தொக்க சொருபமே தான். ௪௩

951. சொந்தவியல் பான சொருபமே மோகமறே
பந்தமறக் காணும் பரம். ௪௪

952. ஒருவவொண் ணாததன் னுண்மையே, ஓர்ந்தார்
பருவரல் போக்கும் பரம். ௪௫

953. சொந்தமாம் போத சொருபமே முக்காலும்
பந்தமிலா முத்திப் பரம். ௪௬

954. சொந்தவுண்மை யானசுத் தான்ம சொருபமென்றும்
பந்தப் படாத பரம். ௪௭

955. எங்குங் கலந்த வியல்பா மொளிவெளியே
பங்கமற்ற வுண்மைப் பரம். ௪௮

956. அனாதியா வுள்ள வரும்பரமே உள்ளத்
தெனாதியா னற்ற வியல். ௪௯

957. கடவுளரை யெல்லாங் கடந்துவிளங் குண்மைக்
கடவுள் சுயசொருபங் காண், ௫0

958. மற்றவைபோற் றன்னுண்மை மாயமன்று, மற்றவற்றின்
சூனியத்துந் தானுண்மை யால். ருக

959. அவ்வுண்மை யாராய்ந் தறிந்தார் அகம்பரமாத்
துவ்வுவர்தொந் தந்தீர் சுபம். ருஉ

960. உள்ளதுபே ரின்ப வுணர்வான் தன்னுண்மை;
கள்ளமே பாசக் கருத்து. ருங

961. உண்மை நிதியாக வுள்ளத் தொளிர்சொருப
வண்மையே பேரின்ப வாழ்வு. ருச

962. தொடற்கருமெய்ஞ் ஞான துரீய சொரூபம்
கடக்கரும்பே ரின்பக் கடல். ருரு

963. உள்ளக் கருவா வொளிர்சொரூபம் பேரின்ப
வெள்ளக் கடலா விரும்பு. ருசா

964. இன்பவெள்ள மாக வியல்சொருபந் தோய்ந்தவ்வுயிர்க்
கன்புவெள்ளம் பொங்கு மகத்து. ருஎ

965. அருள்வெளியாப் பொங்குமவ் வன்புணர்வே உண்மைப்
பொருள்வளமா மின்பப் பொலிவு. ருஅ

966. உள்ளுணர்வா வுள்ளத்தே யுள்ள சொருபமென்பர்
தெள்ளுபர வுண்மைச் சிவம். ருகூ

967. உள்ளப் படாத்தன் னுணர்வுருவா முண்மையே
தெள்ளத் தெளிந்த சிவம். சாO

968. ஓர்மையா லுள்ளத் துசாவவிளங் கொட்பருட்பச்
சீர்மைசேர் தன்மெய் சிவம். சாக

969. பார சொரூபமே பத்தரால் வேறுபோற்
றேர விளங்கு சிவம். சாஉ

970. திரமாக நீடு சிதான்ம சொரூபம்
பரமாக வோங்கு சிவம். சாங

971. சுத்தவெளி யான சொரூபமே யன்றிமற்
றத்தனையும் பித்தலாட் டம். சுச

972. ஆன்மாவை நன்று வறிந்தோன் அருட்பரஞா
ஞன்மா வினும்வே றலன். சுரு

973. நிட்களை மான நிஜான்ம சொருபமே
யுட்கலக்க வேண்டு முறவு. சுசு

974. ஆன்ம சொருப வறிவின் விலாசமே
வான்முதலாத் தோன்று வது. சுஎ

975. சொரூபப் பரசிவமாத் துன்றுமவ் வுண்மை
விரூபவிழி யான வெளி. சுஅ

976. சாந்தவியல் பாகத் தழைத்த சொருபவருட்
காந்தியே யுள்ளக் கரு. சுகூ

977. உள்ளக் கருவாக வுள்ளதுபே ரின்பவருள்
வெள்ளக் கடல்வெளியென் பார். எ0

978. துரியவியல் பான சொரூபமே தோய்தற்
கரியபர வுண்மை யறி. எக

979. ஊன்று சொருப வொளிப்பிழம்பா முள்ளமே
ஆன்ற வருணு சலம். எஉ

980. அருளாலே யன்றி யறிந்தடைய வொண்ணுப்
பொருள்வாழ்வு தன்மெய்ப் புலம். எங

981. துங்கமா வுள்ளந் துலங்கு சொருபமே
பொங்குமனு பூதிப் புலம். எச

982. சுத்தசிவ மான சொரூபமே மெய்யன்பர்
புத்தமுத வாழ்வின் புலம். எரு

குறிப்பு: 'சுத்தமகிழ்வான' எனவும் பாடம்.

983. எண்ணமற வுள்ளத் திலகு சொருபமே
நண்ணலரு முண்மை நலன். எசு

984. முனைப்பற் றெழியவொளிர் மோன வுணர்வே
தனிப்பரமாந் தன்னுண்மைச் சார்பு. எஎ

985. முற்றமுழுத் தன்மையே தன்னுண்மை; மோகமுனைப்
பற்றெழிந்தால் விள்ளு மது. எஅ

குறிப்பு: 'தன்மையுண்டேல் முன்னிலை' (உள்ளது நாற்பது-14) என்னும் பாட்டு இங்கு ஆய்ந்தறிய வேண்டுவது.

986. மூல மயக்கமற மோசித்தாற் றேன்றுமெக்
காலுமுள்ள தன்மெய் யியல். எகூ

987. காண்டலரி தாகக் கடந்தநிலை சுட்டுணர்வாற்
றீண்டலரு தன்மெய்த் திறம். அ0

988. நுட்பவொட்ப மாக நுனித்துணரத் தக்கதென்பர்
விட்புலமா வுள்ளொளிர்தன் மெய். அக

989. அறிவுருவாந் தானே அகந்தை மனச்சுட்
டறிவறிய வொண்ணு தது. அஉ

990. பிறிவறநிற் கின்ற பிரம்ம சொருபம்
அறிவொளியா வுள்ளவ்வான் மா. அ௩

991. பற்ற வொணுதவருட் பாரவெளி யேசொருபப்
பெற்றிமற் றல்ல பிற. அ௪

992. வெற்ற வெறுவெளியே யாகவிளங் கான்மாவில்
மற்றனைத்தும் மாயா மயம். அரு

993. சற்றுமருத் தன்மை தனது சொருபமன்றி
மற்றயவை மாயப் பிழை. அசு

994. காட்சிக ளெல்லாங் கரந்தொழியத் தான்கரவா
மாட்சியா வுள்ளதான் மா. அஎ

995. அறிவற்ற வுண்மையே யான்ம சொருபம்;
அழிவுறுமற் றெல்லா மயல். அஅ

996. தானே பரமார்த்தத் தத்துவமாத் தான்றனக்குத்
தானே யருளுவது தான். அகூ

குறிப்பு: 'தானே தானே தத்துவம் இதனைத் தானே காட்டுவா யருணாசலா' வென்னும் அருணாசல அக்ஷரமண மாலை (43) ஈண்டு நோக்குக; 'அருளுவது' என்பது 'விளங்குவது' எனவும் பாடம்.

997. தானு வொளிர்சொருபத் தத்துவமெய்ஞ் ஞானத்துக்
கேனை ரியற்ற லெவன். கூ0

998. முனைத்த வகந்தையறின் மோனவெளி யாகத்
தனித்தொளிர்மெய்த் தற்பரமே தான். கூக

குறிப்பு: அகந்தையறின் தனித்தொளிர் எனக்கூட்டுக.

999. சுத்த வறிவொளியாத் துன்று சொருபவியல்
வித்தகமா மோன வெளி. கூஉ

1000. சற்போத மாகத் தழைத்த சொருபமுயிர்க்
கெப்போது முள்ள வியல். கூஉ

1001. மற்றையவே பற்றி மகிழ்வோர் சொருபநலன்
சற்றுமே தாமறியா தார். கூச

1002. சிவமே சொருபமாத் தேருதார் தந்தத்
துவமோர்ந் துணர்ந்தா ரலர். கூரு

1003. கரவுசேர் மோகங் கடந்தொளிர்தன் னுண்மை
பரம சிவச்செம் பதம். கூசா

1004. மற்றெலாம் மாணத்தாந் தேரினுந்தன் சிற்சொருப
சத்தலா வில்லை சரண். கூஎ

1005. மலங்கியே மாழ்குமுயிர்க் கில்லை சொருப
நிலங்காணி லன்றி நிலை. கூஅ

1006. சுயசொருப வுண்மை துலங்கினு லுள்ளத்
துயல்சரிய மோக மறும். கூகூ

குறிப்பு:—அயல்சரிதல் - அயலறிவுக் கேதுவான யானென்னு மகந்தைமுனைப் பகல்வதா லென்க.

1007. சொந்த சொருபந் துலங்கிலன்றி மாளாது
பந்தபா சக்கற் பனை. க00

1008. சுத்தவறி வான சொருபந் துலங்கிலறும்
மத்தவகங் கார மனம். க0க

1009. யாமாக வுள்ளத் தியல்சொருபந் தேறிலன்றிப்
போமாறில் பாசப் புணர்ப்பு. க0உ

1010. இருள்வழங்கு பேயகந்தை யின்றே சொருப
வருள்விளங்க லுற்ற வகத்து. க0௩

1011. உண்மைசேர் தன்சொருப மோர்த்துணர்ந்தா லன்றி
வண்மையுற வாழ்த லரிது. [யுயிர் க0௪

1012. உண்மயல் போகவுளத் தோர்த்துணரப் பெற்றதன்
னுண்மையே வண்மை யுயிர்க்கு. க0௫

1013. உண்மையே வாழ்வா வொளிர்சொருபச் செம்பதமே
வண்மைசேர் சுத்தவருள் வைப்பு. க0௬

1014. போத சொருபமாப் பொங்குபரி பூரணத்தின்
மேதகவே மோன விளைவு. க0எ

1015. அகத்தேநா ஞகை வவிர்சொருப வுண்மை
மகத்தான மோனவருள் வைப்பு. க0அ

1016. பொருத்தமாப் பொங்குசிவ பூரணத்தே யன்றிக்
கருத்தமைதி காண்ட லரிது. க0கூ

1017. நெஞ்சங் *கரியா நிகழ்சொருப மெய்யுணரார்
துஞ்சுகின்றார் சொப்பனத் துள். கக0

*கரி - சாட்சி.

1018. சுத்தவருட் சிற்பரமாத் துன்றுசொரு பானுபவம்
வித்தகருக் கல்லா லரிது. கககக

(கொச்சகக் கலிப்பா)

1019. உண்டுகா ணென்றுமற் றென்றுளதா மெய்ஞ்ஞானி
கண்டதே யில்லையவன் காட்சிக்குத் தோன்றுவது
பண்டுபோ லென்றும் பராற்பரமாய்த் தானெனைத்துந்
துண்டுபடா துள்ளமுழுச் சொந்த சொருபமே. கககஉ

1020. கண்டங் கறியவொண்ணக் கண்ண விளங்குவதொன்
றுண்டென் றனுபவத்தா லோர்த்துணர்ந்தோர் கூர்த்தவுண்மை
மண்டுங் கனவா மயக்கவிருள் சூழத்தோன்
றண்டங் கடந்த வருட்கே வலவகமே. கககங

குறிப்பு:—'அண்டமாரிரு ளூடுகடந்து' என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரக் கருத்து ஈண்டு நோக்கற்பாலது.

1021. உறுதிசே ரத்துவித வுண்மையா வுள்ளத்
துறுவதுசற் போத வொளிசேர் சொருபம்
பெறுதியா வோங்கும் பிரம்மபத வாழ்வுக்
கறுதியா வாய்ந்தறிய வேண்டுமது தானே. கககச

1022. நெஞ்சங் கலங்கா நிலையான மோனவருள்
விஞ்சைத் திறமே விசுத்த சொருபவியல்
அஞ்சிக் கலங்கநா னென்னுமகப் பாழகந்தை
கொஞ்சமுமங் கின்றிக் குலாவுவது தான்றானே. கககரு

1023. மருள்சேர் மயக்கும் வெருள்சேர் விகற்பும்
இருள்சே ரியற்கை யெனப்படலால், உள்ளத்
தருளா லகந்தைநா னற்றொழியக் காணிற்
பொருளா வியல்வதுசம் பூரணமாந் தானே. கககசா

1024. கலக்கமின் றாகக் கருத்தா மிதயத்
துலக்கமின் றாக வொளிர்சொருப வுண்மை
புலக்கலக்க மாமுப் புடிக்கற் பனைதீர்
நிலைக்களமாத் துன்றுமெய்ஞ் ஞேயப் பரமே. ககஎ

1025. ஒன்றுபட்ட மோன வுணர்வொளிசே ருண்மைவாழ்
வென்று மெவர்க்கு மியல்பா விருப்பதென்று,
கன்றுமகங் காரக் கலக்கமற வுள்ளொடுங்கி
நின்றுணர்வார் தேர்வர் நிஜானுபவ மோனத்தே. ககஅ

குறிப்பு :—'என்று தேர்வர்' எனக் கூட்டுக. 'என்று மெவர்க்கும்.........'எனவரும் (உள்ளது நாற்பது 34 வது) பாடல் ஈண்டு கவனிக்கத் தக்கது; 'ஈசனவன் எவ்வுயிர்க்கு மியல்பானான் சாழலோ' என்னுந் திருவாசகக் கருத்தும் கருதற்பாலது.

1026. 'யான்'றேன்று துள்ள வியல்பா மிருப்புணர்வே
தான்றானு வுள்ள சதாசிவமெய்த் தற்பரமாம்;
ஏன்றானே யானெனதென் றேங்கி யுயங்கலுயிர்
யான்றே யுலக மனைமையமாந் தோற்றத்தே. ககசு

1027. போதாந்த மாகப் பொருந்தும் பரசிவமே
வேதாந்த மாக விளங்கு சொருபமென்பர்;
தூய்தான சுத்தத் துரீய சொருபவெளி
யாதானும் பேத மிலாத வியல்பிற்றே. கஉ0

1028. அளியநா னென்னு மகந்தையை யாராய்ந்
தொளிபெற நோக்கி லுளத்திற் பரமாத்
தெளிய விளங்கு சிவமே சொருபம்;
பளகுசேர் பாசபந் தங்கற் பனையே. கஉக

1029. தன்னை யறியத் தனின்வே றொளியில்லை;
தன்னியலே சுத்தவருட் சைதன்ய வுண்மையொளி:
தன்னியலா லன்றோ சகலங் களுமொளிர்வ
முன்னெழுந்த யானென் பதுமுதலா வெல்லாமே. கஉஉ

1030. அலைவிலா மோன வருட்சிற் பரமே
தொலைவிலா வாழ்வாகத் துன்று சொருபம்;
கலையிலே தேடிக் கலங்காது தன்மெய்
யுலைவிலா தூன்றியுளத் தோரிலொளிர் வஃதே. கஉக

1031. துரியவெளி யான சொரூபமே சற்றுங்
கரவிலா வுண்மைக் கழலென்பர்; காதற்
பரிவா லுருகுசற் பத்தியாற் றன்னைத்
துருவுவா ருள்ளந் துலங்குமது தானே. கஉச

1032. ஆவதோ வன்றி யழிவதோ யாதுமில்லை
போவதோ வன்றி வருவதோ யாதுமில்லை
சேர்வதோ வன்றிமற்றுத் தீர்வதோ யாதுமில்லை
தாவிலா துள்ளதொரு சச்சித்தாந் தான்றனே. கஉரு
குறிப்பு:—தாவிலா - கேடில்லாத.

1033. ஊனமற்ற வுண்மையா வுள்ளத் தகுவதுமெய்ஞ்
ஞான சொரூபமன்றி, நானென் றெழுந்துழல்பா
ழீன மனத்தா லெதிரப் படுவதன்று;
நானெனும்பொய்ம் மாயமறின் ஞானம் விளங்குமே. கஉகூ
குறிப்பு:—ஞானம் – ஞான சொரூபம்

1034. வித்தகசற் பத்தி விசைத்தெழலால் யானென்னும்
புத்திக் கலக்கமறப் பொங்கு சொரூபமே
முத்தித் துலக்கமா மோனனு பூதியென்பர்
அத்தகநிற் கின்றஞா னனுபவச் சான்றோரே. கஉஎ

1035. பொருந்துபர மார்த்தப் புலம்தானே தான
இருந்துவிளங் கவ்வளவே யல்லாமல் யானென்
*றெருந்தலுறும் யாதோ ருபாதியுணர் வன்று
திருந்த வியல்வதுசச் சிற்பரமாந் தானே. கஉஅ
* ஒரு உந்தல்: உந்தல் – எழுச்சி, முனைப்பு.

1036. திகழுவொண் ணாத செடத்தைநா னன்றென்
றகழ்தலுற்ற பின்னையகத் தான்மாவாந் தானு
நிகழ்சிற் பரசொருப ஞேயமன்றி யாவும்
இகழ்தற் குரியமித்தை யென்பரான் றோரே. கஉகூ

குறிப்பு:—திகழ்தல் - தானாக விளங்கல்; அகழ்தல் - அகந்தையை வேரோடு களைந்தெறிதல்; அகமுகப்பட்டு நானா ரெனச்செய்யும் ஞானவிசாரத்தாற் செடவகந்தையைச் சிதைத் தொழித்தல்.

1037. அறிவாக வுள்ளவோ ரான்ம சொருபச்
செறிவே நிறைந்த சிதாகாச வுண்மை;
பிறவாகத் தோன்றும்பல் பேத மெலாமவ்
வறிவே சொருபமா வார்ந்தன தாமே. கூ0

குறிப்பு:—கனவாகக் காணப்படுவது போலவே, நனவாக அறியப்படும் அகிலமும் அறிவு மாத்திரமான உருவெளித் தோற்றமாக அறியத் தக்கது. 'கண்டன வெலாமோன உருவெளி' எனத் தாயுமானவர் கூறுவதும் ஈண்டு கருதத் தக்கது.

1038. மத்தவகங் கார மயக்கப் பிழையறத்தீர்
சுத்தவிஞ் ஞான சொருபானு பூதியின்றி
எத்திறத்தா லுஞ்சற் றியைவரிது கற்பனையிற்
றத்தளிக் கின்றமனத் தாபமகல் சாந்தியே. கூக

1039. பொய்வல்ல மாயைப் புணர்ப்பான முப்புடியின்
மொய்வல் லபங்கூர் முனைப்பா மகந்தைதீர்
கைவல் லியமாங் கனசொரு பத்திலன்றி
உய்வில்லை யென்பருளத் துண்மைதெளிந் தான்றோரே. கூஉ

1040. சற்கதிதான் சாரத் தலைப்பட்டோன் உள்ளுன்றிக்
கற்கக் கடவதுதன் னுண்மையே, கற்றுங்கு
நிற்கக் கடவதுதன் னிஷ்டையே, மோனமாச்
சொக்கக் கடவதுந்தன் சொந்த சொருபமே. கூங

## 76. சொரூபம் அநிர்வசனீயம்
(கொச்சகக் கலிப்பா)

1041. ஆன்றோ ரறிவித்தாங் காரேநா னென்றாராய்ந்
தூன்றுநின் றுள்ளத் துணர்வுருவா வுள்ளபொருள்
தான்றானே யாகத் தழைத்தொளிரக் காணிலன்றி
யான்றா னிதுவதுவென் றெவ்வா றிசைப்பதே. க

குறிப்பு:—ஊன்றுநின்று காணிலன்றி என வியையும்.

## 77. சொருப அருட்காட்சி
(குறள்)

1042. தானேதா னாவிளங்கத் தான்காணி னல்லதுமற்
றேனோரெவ் வாறுதெரிப் பார். க

1043. கள்ளமற்ற வுள்ளமே கண்ணாகக் காணிலன்றி
*விள்ளரிது கைவல் லியம். உ

* விள்ளுதல் – விளங்குதல்.

1044. கண்ணே யகண்டசுத் தாத்துவிதக் காட்சியா
நண்ணுவது ஞான வரம்பு. ங

1045. கண்டாலே யன்றியருட் கண்ணேதா னாகவகத்
துண்டாமோ சாந்த வுணர்வு. ச

1046 கடந்ததோர் மோனவியற் கைவல்யக் கண்ணாத்
*தொடர்ந்தசொரு பங்காண் சுபம். ரு

*தொடர்தல் – தொடர்ந்து விளங்கல்.

1047. கழிவருசற் போதவுருக் கண்டவருக் கன்றி
யொழிவதன்று மோக வுணர்வு. சு

1048. ஞானப் பரசொருப நம்பனுருக் காணிலன்றி
ஊனவகப் பேய்மாய் வுறாது. எ

1049. உள்ளக் கருத்தா வொளிர்சொருபக் காட்சியுற்றாற்
கள்ளக் கருத்தழியுங் காண். அ

1050. கதியான தன்னுண்மைக் கைவல்யங் காணிற்
சிதைவேது மில்லை யுயிர்க்கு. ௯

1051. கடந்தவருட் கைவல்யக் காட்சியாற் றீரும்
படர்ந்தமனப் பாழ்ங்கற் பனை. ௧0

1052. மெய்த்திறங்காண் குற்றல் விடியலிற் காரிருள்போற்
பொய்த்தொழியும் பாசப் புணர்ப்பு. ௧௧

1053. நீக்கமற வுள்ளமெய்ஞ் ஞேயப் பரசொருப
நோக்கமே நுட்பப் புலன். ௧௨

1054. அந்தமில்பே ரின்பமா வான்ற வருட்காட்சி
பந்தமில்கை வல்யப் பரம். ௧௩

1055. காண்டல்கா ணுமை கடந்தவருட் காட்சியால்
ஆண்டவன்மெய் கண்டே னகத்து. ௧௪

குறிப்பு: அகத்தில் கண்டேன் என்பது மட்டுமன்றி, உரையிற் கோடலால் அகமாகவே கண்டேன் எனபதுமாம்.

1056. காணக் கடவவருட் காட்சி கடவுளுக்
கூணமாப் புக்க வுணர்வு. ௧௫

## 78. சொருப மாட்சி

(குறள்)

1057. காணவேண் டுங்கடவுட் காட்சி மனங்கடந்து
மாணவிளங் குஞ்சொருப மாண்பு. ௧

1058. தன்சொருப மாண்பு தலைப்படத்தான் காணிலன்றி
எஞ்சியமாண் பாலென் பயன். ௨

1059. எப்போது முள்ள வியல்பான தன்சொருப
சற்போத மாண்பே சதிர். ௩

1060. மயர்க்கலற்ற தன்சொருப மாண்பே அறிந்தோர்
நயக்கலுற்ற வுண்மை நலன். ௪

1061. தெளிவா வொளிர்சொருபச் சீர்மையே யுள்ளத்
தளையுமோ ஞனு பவம். ௫

1062. யான்கெட் டொழிந்த வியல்பாந்தன் னுண்மையே
ஊங்கெட்ட வொண்ணு வுயர்வு. ௬

1063. கற்பனைதீ ருண்மைக் கடவுளாஞ் சொச்சொருபச்
சிற்பதமே கண்டாய் சிறப்பு. ௭

குறிப்பு: சிறப்பு - மோட்சம்.

1064. கூரியரா லன்றிக் குறிக்கொள்ள வொண்ணாது
சீரியதம் முண்மைத் திறம். ௮

(கொச்சகக் கலிப்பா)

1065. தன்மையி னுண்மை தலைப்படலே மிக்கபெருந்
தன்மையா வுள்ள சதாசிவ மாட்சியென்பர்
தன்மையி னுண்மை சதோதயமாப் பொங்கலாற்
பன்மைசேர் தோற்றம் பகற்கனவா மங்குமே. ௯

1066. உண்ணாடு மோன வுணர்வால் உலகெனவொன்
றெண்ணு தகற்றி இருப்பளவாத் தற்றேறல்
கண்ணான தன்சொருபக் காட்சியென்பர் அத்திறமே
கண்ணு ரமுதவியற் கைவல்ய மாட்சியே. ௧0

## 79. சொருபானுசந்தானம்

(குறள்)

1067. அருட்சிற் பரசொரு பானுசந் தானம்
மருட்சிப் படர்தீர் மருந்து. ௧

1068. நெஞ்சத் தறிவா நிகழ்சொருபச் சிந்தனையா
லஞ்சுபுலக் கள்ள மறும். ௨

1069. சுத்தமெய்ஞ் ஞான சொருபானு சந்தானம்
புத்தமுத வாழ்க்கைப் பொலிவு. ௩

1070. இனியவற்று ளெல்லா மினிதே தனிமையிலான்
மானுசந் தானஞ் செயல். ச

1071. மாயவகப் பாழ்மயக்க வாழ்விலே மோகமற
ஞேயசொரு பத்தை நினை. ரு

1072. கருத்தொருங்க லன்றிவெறுங் கண்மூட லன்று
திருத்துந் தியானக் குறி. சு

1073. புந்திக் கலக்கமறும் போதவருட் சிற்பரத்தைச்
சிந்திக்கு மன்பர் திறத்து. எ

1074. சிவமான சிற்சொருப சிந்தனையே நாளுந்
தவமாகச் செய்சா தனை. அ

1075. சிவசிந் தனையின் றிறத்தளவே, சித்தத்
தவசிந் தனைபோ யறும். கூ

1076. தெளிந்தவுணர் வான சிவத்தியா னத்தால்
விளிந்தொழியும் பாச விடம். க0

குறிப்பு:—சிவத்தியான வடிவாகத் தெளிந்த வுணர்வால்.

1077. சுவத்தவாழ் வான சொருபநிலை தேற்றல்
சிவத்தியா னத்தின் பயன். கக

குறிப்பு:—சொருபநிலை தேற்றலே சிவத்தியானத்தின் பயன் என்றது சிவமே சொருபமாதலால் என்க.

1078. தெளிந்து விளங்குந் தியானமே உள்ளத்
தளைந்தகுரு நாத னருள். கஉ

## 30. சொருப வுணர்வு

(குறள்)

1079. உடலிற் பிறந்தபிறப் போய வுடலியைபற்
றுள்ளசொரு பந்தேர் வுணர்வு. க

1080. உள்ளலற்ற வுள்ளமா வுள்ள சொருபமே
ஒள்ளிதா வுள்ள வுணர்வு. உ

1081. ஒள்ளிதா வுள்ளபர தெய்வமா மவ்வுணர்வே
தள்ளலரு மோனத் தவம். ௩

1082. ஒன்றுங் கருதா வுணர்வே யுரஞ்சான்ற
வென்றிசேர் மோன விளக்கு. ௪

1083. அறிவொளி யுள்ளமா வான்ற சொருப
நிறைவுணர்வே மோன நிலே. ௫

1084. மோனவெளி யாக முயங்குசொரு பானுபவ
ஞானமென்பர் முத்தி நலன். ௬

1085. ஒளிவெளியா வுள்ளத் தொளிர்சொருப வுண்மைத்
தெளிவியல்காண் முத்தித் திறம். ௭

1086. சுத்தத் துலக்கமாந் துங்க சொருபவருள்
வித்தகமே பேரின்ப வீடு. ௮

1087. அறிவா லடைவதொன்று மில்லே விசுத்த
வறிவான தன்மெய் யலால். ௯

1088. தன்சொருப வுண்மை தலேப்படலே சுத்தவருள்
விஞ்சைமற் றல்ல பிற. ௧0

1089. இகப்பரிய தன்மெய் யியல்பா முணர்வே
அகப்பரமா வுள்ள வருள். ௧௧

குறிப்பு:—அகப்பரமா: அகம்பரமா என்பது எதுகை நோக்கி வலித்தல்.

1090. உள்ளமே யொட்பநுட்ப வுண்மைப் பரவெளியாந்
தெள்ளிமையே சித்தித் திறம். ௧௨

குறிப்பு:—பரவெளியே உள்ளமாந் தெள்ளிமை என மாற்றிக்கொள்க; சித்தி - சொருப (சாட்சாற் கார) சித்தி.

1091. சுத்தவறி வான சொருபவுண்மை தானேமெய்
யத்தனியல் பாக வறி. ௧௩

1092. துரியமாத் துன்று சொருப வுணர்வே
அரியபர வாழ்வென் பது. கச

1093. ஊனமொன்று மொட்டாத வுண்மையாந் தன்சொருப
ஞானமே மிக்க நலன். கரு

1094. சிவமே சொருபமாச் சித்தந் திகழ்தத்
துவமே சிறந்த சுபம். கசு

1095. சுத்தப் பரசிவமே சொந்த சொருபமா
வுய்த்துணரிற் பாச மறும். கஎ

1096. சுத்தவறிவான சொருபந் துலங்கலுற்றுற்
பொய்த்தகலும் பேதப் புணர்ப்பு. கஅ

1097. சுத்தவித்தை யான சொருபத்தில் வித்தை
யனைத்து மவித்தையே யாம். கசு

1098. தன்னின்மற் றென்றைத் தலையெடுக்க வொட்டாது
தன்சொருப ஞானத் தழல். உ0

குறிப்பு :—'தானுனை தன்மயமே யல்லா லொன்றைத் தலை யெடுக்க வொட்டாது' என்னும் தாயுமானவர் பாடல் நோக்கற்பாலது.

(கொச்சகக் கலிப்பா)

1099. சும்மா விருப்பான சுத்த வுணர்வொளியே
பொய்ம்மா லறவகத்திற் பொங்கு சொருபவியல்
செம்மாந் திருப்பார் செகசீவக் கற்பனையாம்
பொய்ம்மா லறிவைப் புறக்கணித்த தற்பரரே. உக

1100. ஊன்மயமா நானென் றுளங்கலங்கும் பாழுயிர்மாட்
டான்ம விளக்கமே தோலா வருள்வெற்றி;
வான்மயமாத் தன்சொருப வாழ்வலர வாலறிவாத்
தான்மலர்ந்து தற்பரமாந் தன்மைசார் விப்பதே. உஉ

1101. மருவியபா ழூன மயக்க வகந்தேர்
சருவமெனுங் கற்பனையைத் தாண்டிவிளங் கேக
சொருபவுணர் வுள்ளந் துலங்கிலன்றி யார்க்கும்
வெருவலறு சுத்த விமுத்திநிலை யின்றே. உங

1102. கள்ளமனப் புன்கலக்கக் கற்பனா சக்தியால்
உள்ளபரச் செம்பொருளை யுள்ளலெங்ஙன்! யானெனுமத்
துள்ளலகல் சுத்த சொருபவுணர் வான்மாவா
வுள்ளதனை யுள்ளவா றுள்ளலென்ப ரொள்ளியரே. உ௪
குறிப்பு:—சொருபவுணர்வே உள்ளவாறு உள்ளல் என்பதாம்.

1103. அத்த னருளா லகப்பா ழகன்றுதெளிர்
சுத்த வறிவே சொருபமாத் துன்றிலன்றி
எத்தகைய சித்தி யியைந்தாலும் யாதுபயன்
மித்தைசேர் மாயா விலாசத் துழல்வோர்க்கே. உரு
குறிப்பு:—தெளிர்தல் - விளங்குதல்.

## 81. சொருப ஒளி - வெளி

(குறள்)

1104. துரிய சொருபமாத் துன்றுபர வாழ்வு
விரியலுற்ற சுத்த வெளி. க

1105 களங்கமற்ற சுத்தவருட் கைவல்ய வாழ்வு
விளங்கு சொருப வெளி. உ

1106. வெளியே வடிவா விளங்கு சொருப
வொளியேகா ணுண்மை யொளி. ங

1107. இளிவரல்சேர் மோக வியற்கையறத் துன்று
மொளிவெளியே சொந்த வுரு. ௪

1108. ஒளியே வெளியா வெளியே யொளியா
வுளதே சொருப முணர். ரு

1109. ஊடறுக்க வொண்ணா வொளிவெளியே தன்னுருவா
நீடலுற்ற வுண்மை நிலை. சு

1110. நானென் பதன்பொருளா நள்ளிதயத் தாடொளிரவ்
வானம் பரசொருப மாண்பு. எ

1111. சூரியன்போல் யாது துலங்குமோ தன்னொளியால்,
வீரியஞ்சா லவ்வுருவே மெய். அ

குறிப்பு :—உரு - சொரூபம்.

1112. பரவொளியே யன்றிப் பரந்துலங்குங் காண
உரவொளிவே றில்லை யுயிர்க்கு. கூ

1113. இயல்விளக்க மான விறைவனைக் காண
அயல்விளக்க மில்லை யகத்து. க0

குறிப்பு :—அகத்தில் இயல்விளக்கமான எனக் கூட்டுக.

1114. ஆன்ம சொரூப வறிவொளியா லன்றிமற்
றான்மா வவிர்தலெங் ஙன். கக

1115. உளந்ததும்பு சுத்த வுணர்வொளியே தானைத்
தெளிந்தபரஞ் சோதித் திறம். கஉ

1116. களிசே ரகந்தைமனக் கார்கரக்கும் சுத்த
வொளிவிளங்க லுற்ற வுளத்து. கங

1117. ஊனமற்ற வுண்மை யொளியான வுள்ளுணர்வே
ஈனமற்ற சுத்த வியல். கச

1118. அருட்கே வலமாக வார்ந்த சொரூபப்
பொருட்கே ளொளியே புலம். கரு

1119. களங்கலந்த சித்தக் கலாமறக்காண் கிற்ப
துளங்கலந்த வுண்மை யொளி. கசு

1120. கள்ளக் கலக்கஞ்சேர் கற்பனைகெட் டாலன்றி
யுள்ளத் தொளிகாண் பரிது. கஎ

1121. பொய்வளர்மோ கப்பாழ்ம் புலங்கடந்த சுத்தபர
தெய்வவொளி ஞானத் திறம். கஅ

1122. திரோத மயக்கமற்றேன் சிற்பரமாப் பொங்கு
சொரூப வுணர்வொளியிற் றோய்ந்து. கசு

(கொச்சகக் கலிப்பா)

1123. சுத்த வறிவொளியே சொந்த சொரூபவொளி
புத்தியோ கத்தாற் பொருந்தினர் தம்மகத்து
முத்தியுரு வாக முயங்குமொளி தேர்வார்தஞ்
சித்தமலப் பாழைச் சிதைக்குஞ் சிவவொளியே. உ0

1124. விரிஞ்சனரி காணவொணு விஞ்சையொளி மிக்க
நிரஞ்சனமா வெங்கும் நிறைந்தவொளி துற்று
சுரஞ்சகமா மின்ப சொரூபவொளி பாரப்
பரஞ்சுடரா வுள்ளகுரு பாத வொளியே. உக

1125. ஒளிவிளக்கா வுள்ள சொரூபந்தேர் வுற்றூர்க்
கொளிவிளக்கு மற்றொன் றுபயமா வில்லை;
ஒளிவிளக்கா வுள்ள தொளிர்ந்துளத்தே தன்னுல்
வெளிவிளக்கும் முப்புடியை வேறுபோற் றூனே. உஉ

1126. கலக்கமில் லாதவருட் கைவல்ய நீதித்
துலக்கமார் சுத்த சொரூப வொளியே
இலக்கமா யாவற் றிலுங்கலந் தெங்கும்
நலக்க விளங்குவது ஞானிகள்காண் பாரே. உ௩

## 82. அருள் வெளி

(குறள்)

1127. *வெளியாத் தெளிந்த விளக்கமே ஞான
வொளியான மோன வுரன். க

* வெளி - அருள்வெளி.

1128. அருட்சிற் பரவெளியா வார்ந்த சொருபத்
திருட்சர்ப் பணேவெறும் பொய். உ

1129. உபயமின் றாக வொளிர்சொருப வுண்மை
விபவமென்பர் சுத்த வெளி. ௩

குறிப்பு:—சுத்தவெளி உண்மை விபவ மென்பர் என மாற்றிக் கொள்க.

1130. தெள்ளத் தெளிந்த சிவானுபவ மோனவருள்
வெள்ளக் கடல்காண் வெளி. ச

1131. விரிந்தவெளி யாக விளங்கிலன்றித் தன்மெய்,
பிரிந்ததன்று *மோகப் புரி. ௫

* மோகப்புரி - சிச்சடக்கிரந்தி.

1132. ஊனமற்ற மோன வுணர்வான சுத்தவருள்
வானமே தன்மெய் வடிவு. சு

1133. தானே பரமசிவ சத்துவமா மோனவருள்
வானே சொரூப வடிவு. எ

1134. ஊனமொன்று மற்ற வுதாரப் பரசொருப
வானமே சுத்தவருள் வாழ்வு. அ

1135. பரவெளிநோக் கத்தாற் பசுபாசம் பாறப்
பரவெளியா வின்னும் பதி. கூ

1136. தெரிவுதெரி யாமையறத் திர்சிற் சொரூபப்
பரவெளியே முத்திப் பதம். க0

1137. வெருவரலில் லாத விசுத்த வெளியே
பருவால்சே ராயெய்ப் பதம். கக

1138. மோன வருள்வெளியா மூண்ட மனத்தரே
ஊனமயற் பந்தமொழிந் தோர். கஉ

1139. அத்தகநிற் கின்ற ரனுபவமா தென்னிலோ
வித்தகமா மோன வெளி. கந

1140. ஒடுங்கொடுங்க வுள்ளத் தொளிர்சொருப வுண்மை
இடமகல்பே ரின்ப வெளி. கச

1141. வஞ்ச மயக்கமற்ற வாழ்வாத் துலங்குவது
விஞ்சைசேர் சுத்த வெளி. கரு

1142. மோனவெளி யென்பர் முனைப்பற் றொளிர்சொருப
ஞானவனு பூதி நலன். கசு

1143. வெளியே யுலக விசித்திரத்தோற் றத்துக்
கொளிசேர் படமா வுணர். கஎ

குறிப்பு:—வெளி - பரமார்த்த வுண்மையான பரவெளி; படம் - அசை படக்காட்சியிற் காண்பா னுளப் பட்ட கற்பனு நாமவுருச் சித்திரக் காட்சி களுக்கு அதிஷ்டானமாக வமைந்த அற்புத மான திரைச்சீலே.

(கொச்சகக்கலிப்பா)

1144. துள்ளுமகங் காரத் துடிப்பறநன் குள்ளொடுங்கி
யுள்ளுவா ருள்ளத் தொளிவளர்சாந் தக்கடலா
வுள்ள வருட்சிற் பரவெளியா முண்மையைமற்
றெள்ளத் தகாதுகாண் யாமாக வுள்ளததே. கஅ

1145. பரவெளியிற் பேதப் படிற்றுமன மில்லே;
பரவெளியைச் சுட்டறிவாற் பற்ற வொணுது;
பரவெளியைப் பற்றவகப் பாசமறல் வேண்டும்:
பரவெளியைப் பற்றல் பரவெளியா நிற்பே. கசு

1146. கள்ள வகந்தைமனக் கற்பனு பேதமறத்
தள்ளியே சுத்த சதாசிவமாத் தன்னடியே
னுள்ளும் புறமுமன்றி யூடுங் கலந்தொளிர்வ
தெள்ள வொணுத வியற்சிற் பரவெளியே. உ0

## 83. சொருபமே குரு

(குறள்)

1147. உலகமோ கக்கனு வோய வுயிர்க்குட்
குலவுசொரு பங்காண் குரு. க

1148. யான்யா னெனவே யிதயத் திருந்தொளிர்மெய்க்
கோனுன தானே குரு. உ

## 34. சொரூப வாழ்வு

( குறள் )

1149. ஊழ்க்கைச் சூன வுடலகந்தை யோய்ந்தொழுகு
வாழ்க்கையே தன்சொரூப வாழ்வு. க

1150. ஊழ்க்கை யுருமலுயிர்க் குள்ளொளிநன் றூற்றெடுக்க
வாழ்க்கை நடாத்தலே மாண்பு. உ

1151. இணையிலா வாழ்க்கை யிதயத்து வாழ்க்கை
அணையிலா மோன மது. ங

1152. பரத்திலே சித்தம் படிதலே மோன
வுரத்தொளிசால் வாழ்க்கை யுயிர்க்கு. ச

1153. வாழ்வா வதுசொருப மாட்சிதேர்ந் தற்றமற
வாழ்வதே சாவாப் பதத்து. ரு

1154. பதத்திலே வாழ்தலருட் பாலமுத முண்டு
மதர்த்தலே சிந்தையற்று மற்று. சா

1155. தக்கதொரு வாழ்க்கை சதாபத்தி யாகமனம்
நிற்குநிலை ஞேயப் பதத்து. எ

1156. சிவக்கே வலமாத் தெளிந்த சொரூப
சுவர்க்கவாழ் வேகாண் சுபம். அ

1157. அறிவா வவிர்தலுற்ற வான்ம சொரூபத்
துறைவதே யுண்மை யுயிர்ப்பு. கூ

1158. சுவச்சமாத் துன்று சொருபானு பூதி
சிவச்செம் பதவியற் சீர். க0

1159. சுத்தவருட் போத சொருபமா வாழ்தலுற்றூர்க்
கெத்திறத்தா லெய்து மிறப்பு. கக

குறிப்பு: ஜகமீ திருந்தாலும் மரணமுண் டென்பது
சதா நிஷ்டர் நினைவதில்லை. —தாயுமானவர்.

1160. சிறக்கத் துலங்கு சிவத்திலே செத்துப்
பிறக்கலென்பர் சாவாப் பிறப்பு. கஉ

குறிப்பு: பிறக்கல் சாவாப் பிறப்பென்பர் என மாற்றுக் கொள்க.

1161. சொந்தப் பதமாத் துரீயந் துலங்காதார்
எந்தப் பதமடைந்தா லென். கங

(கொச்சகக்கலிப்பா)

1162. குருபத்தி யாலகத்திற் கூர்த்தமெய்ஞ் ஞான
சொருபத் தியல்பே சுபமன்றிப் பேய்போல்
வெருவுற்று மோக விகற்பமனப் பாழிற்
சருவுற் றுழல்வாழ்வு சாவின்வே றன்றே. கச

1163. இருண்ட வவிச்சை யிருட்பாழுக் கப்பாற்
றிரண்டபர மார்த்தத் தெளிவான ஞானம்
மருண்டவகங் கார மனங்கரக்க வுள்ளத்
திரண்டற்ற வொன்று விலகுமியல் வாழ்வே. கரு

1164. கலக்கமற்ற வுண்மைக் கடவுளியல் வாழ்வு
துலக்கமாப் பொங்கு சொருபானு பூதி;
புலக்கலக்க மற்றொழியப் பொங்குவோ ருள்ளம்
உலக்கலரு முண்மையுணர் வோகை யுருவே. கசா

## 85. சொருப சாட்சாற்காரம்

(குறள்)

1165. தழைத்த சொருபசாட் சாற்கார வாழ்வே
செழித்த சிவானுபவச் சீர். க

1166. என்றென்று மொன்று மியல்சொருபத் தற்பரனைத்
ஒன்றுவது மோகமுனைப் போய்வு. உ

1167. புத்திச் சலனமறல் போதமாந் தன்சொருப
சித்தித் திறமெனத் தேர். ங

1168. உணர்வளவே யாகவுளத் தூன்றல் சொருபப்
புணர்வென் பதன்மெய்ப் பொருள். ச

1169. *எதுவுந்தா னன்று விகந்தொழித லன்றிப்
புதுவதன்று தன்மெய்ப் புணர்வு. ரு

* எதுவும் என்றது ஐந்துவகைப்பட்ட அனான்ம கோசத்தை.

1170. துங்கமெய்ஞ் ஞான சொருபானு பூதியே
பங்கமில் சாந்திப் பதம். சு

1171. சங்கைதீர் சுத்தான்ம சாட்சாற்கா ரத்தெளிவே
பங்கமில்லை வல்யப் பயன். எ

1172. வித்தகமா மோன விலாச விபூதியிலே
பொய்த்தொழியும் பூதிமற்றெல் லாம். அ

1173. மீதியா வுள்ள விழுப்பொருளில் வேட்கையுற்றோர்
பூதிகளில் வேட்கைபூ ணார். கூ

1174. உள்ளதாந் தானே உசாவியகத் தூடுருவித்
தெள்ளிதடை சித்தித் திரு. க0

1175. புத்திக்குட் போதமாப் பொங்கு சொருபமே
சித்தியாத் தேர்வரறிந் தோர். கக

1176. சோதனையா லுள்ளந் துலங்கு சொருபமே
ஊதியமா மெய்ப்பே றுயிர்க்கு. கஉ

1177. தன்சொருப வுண்மை தலைப்பட்டா லன்றிமன
வுஞ்சலசை வோயா துயிர்க்கு. கங

1178. தன்னியல்பா முண்மை தலைப்படிலே அன்னியமாத்
துன்னியபொய்த் தொந்த மறும். கச

1179. போத சொருபவருட் பூரணஞ்சார்ந் தோரகத்தில்
வாதவகப் பேய்மாய் வுறும். கரு

1180. தவாதசாட் சாற்காரஞ் சார்ந்தாலே மூர்க்க
விவாதவெறிப் பாழ்ம்பேய் விடும். கசு

(கொச்சகக் கலிப்பா)

1181. அன்றியொன் றில்லா வருட்சிற் பரவுண்மை
என்றியன்றார் யாவ ரிதயத்துந் தம்முருவா,
அன்றவர்தம் மாலே யடைவுறுவ தன்றிமற்
றென்றுமெவ ராலுமன்ற வெய்தரிது முத்தியே கஎ

1182. அயல்களை நா னென்னு மகப்பே யறிவின்
மயல்வளர்வெம் பாச மணங்கரக்கத் தன்மெய்
யியல்விளங்கி லுள்ளத் திகமே பரமா
வுயல்வளர்பே ரின்பமுத்தி யோஒ பெரிதே. கஅ

குறிப்பு: அயல்கள் - தானல்லாத சரீரத்திரயம்; கோச பஞ்சகம்; அறிவின் மயல் - அறிவாகிய மயல்.

1183. தன்னந் தனியான சற்குருவின் சுத்தவருள்
வன்னந் தெளிக்க மனத்தால் வசீகரமாத்
துன்னியவென் சொந்த சொரூபவியல் யாராலு
முன்னவொண்ணு மோன வொளிவெளியா வோர்கவே. கக

## 86. சொரூபம் அத்துவிதம்

(குறள்)

1184. எண்ணற் கிடமற் றியல்கேவ லாத்துவித
வண்ணம் பரத்தின் வடிவு. க

1185. மற்றென் றிலாத மகத்தாமவ் வத்துவிதப்
பெற்றியே தன்சொருபப் பெட்பு. உ

1186. கள்ளங் கழியக் கனுண்ம சொரூபமா
வுள்ளவுண்மை யொன்றே யுளத்து. ௩

1187. அறிவான வுண்மை யகந்தெளிந்தாற் றன்னிற்
பிறிதான பேதம் பிழை. ச

1188. பேத மயக்கம் பிரிந்தொழிதல் சுத்தசற்
போத சொரூபப் பொலிவு. ௫

1189. துவிதமா நோக்கத் துலங்காது தொக்க
சுவசொருப மாமெய்ப் பரம். ௬

1190. மோக வகந்தை முனைப்பற் றெளிர்சொருபம
பாகமற்ற வுண்மைப் பரம். ௭

1191. ஏக சொரூப வியல்விளங்கி லன்றியில்லை
மோகமுனைப் புக்கு முடிவு. ௮

குறிப்பு: ஏக சொரூபமென்ற குறிப்பால், மோகமுனைப் பென்பது அதன் காரியமான கற்பனா துவிதத் துக்கு ஆகுபெயர்.

1192. காணப் படுவதோர் காட்சியன்று தன்னுண்மை
மாண வொளிர்க்கே வலம். ௯

1193. தொல்லியல்பா வுள்ள சொரூபவுண்மை தேர்ந்திடின்மற்
றில்லை யதனி லிரண்டு. ௧௦

1194. சுத்தசிவ யோனச் சுடரொளியா லன்றியகத்
தத்துவிதஞ் சார்த லரிது. ௧௧

1195. இதமா வெதிர்ப்படுவ தெல்லாம்பொய் யென்றால்
அகமாக வுள்ளதொன்றே மெய். ௧௨

1196. எல்லாமோர் தானா வியல்சிற் சொரூபத்தை
யல்லா திலைமற் றயல். ௧௩

1197. அயற்புலமா யாதே யறிபடினும் ஆன்ம
வியற்பரமன் *றேதின்மை யால். ௧௪

* ஏதின்மை - அன்னியமின்மை

1198. அதுதானாத் தானதுவா வான்ற சொரூபப்
பொதுதான்கை வல்யப் புலம். ௧௫

1199. சிக்கெனநிற் கின்ற சிவச்சிற் கனசொருபம்
பொக்கமில்கை வல்யப் புலம். கஅ

1200. ஓங்கும் பரமாக வுள்ள சொருபமே
யாங்குமியல் சற்கே வலம். கஎ

1201. பொய்த்துவித மையலறப் போதலே தன்சொருப
வத்துவித வுண்மை யடைவு. கஅ

1202. பேத மயக்கம் பிரிதலே யத்துவித
போத முயக்கப் புலன். ககூ

1203. உள்ள வருட்சிற் பரத்தை யொழிந்துமற்
றெள்ளளவும் வேறென் றிலே. உ0

1204. போதவள வாகப் பொருந்தலா லிவ்வகிலம்
பேதபுத்தி முற்றப் பிழை. உக

1205. மருண்டமனத் தாலே மதிக்கிலன்றிச் சற்று
மிரண் டெனவொண் ணுதா னிறை. உஉ

1206. உள்ளத் தியல்பா வொளிர்சொருப வுண்மையிலின்
றெள்ளத் தனையு மிரண்டு. உங

1207. ஒன்றான வுண்மையைநன் குள்ளவா றுய்த்துணர்ந்
தின்று வொழியு மிரண்டு. [தோர்க் உச

1208. மயல்சே ரகந்தை மதிகெட்டுத் தன்மெய்
யியலுற்றார்க் கில்லை யிரண்டு. உரு

## 87. சொருபம் அதீதம்

(குறள்)

1209. உள்ளமா வுள்ளதோ ருண்மையைவேற் றுப்புலம்போல்
உள்ளுவதெவ் வாறவ் வுளம். க

1210. உள்ளமே யானதோ ருண்மையையவ் வுள்ளத்தா
லுள்ளலெவன் வேறு படுத்து. உ

1211. ஒருமைசே ருண்மையா வுள்ளத் துளானை
இருமையா லெண்ண லெவன்? ௩

1212. முப்புடிக்கும் மூலமா மோன வியற்பரத்தை
இப்படித்தென் றெண்ண லெவன்? ௪

1213. எண்ண வொணாத வியற்சிற் பரவடிவை
எண்ணுவது சும்மா விருப்பு. ௫

1214. தெரிவே யுருவாத் திகழ்சொரு பத்தைத்
தெரிவார்யார்? தேர்வ தெவன்? ௬

1215. கற்பனை பேதக் கலக்கமனச் சுட்டறிவாற்
றற்பரமார் சார்கிற் பவர்? ௭

1216. அனைத்தையுந் தேற்றுமோ ரான்ம சொருபம்
இனைத்தெனத் தேற்றுவார் யார்? ௮

1217. ஊகமதி யாஞ்சுட் டுணர்வா லறிவரிதவ்
வேக சொரூப வியல். ௯

1218. தன்னியல்பாத் தேரிலன்றித் தற்பரஞ்சற் றுந்தன்னி
னன்னியமாக் காண்ட லரிது. ௧0

1219. எண்ணரிதோர் சற்று மிரண்டுபடத் தன்னின்மற்
றுண்ணனவா வுள்ள வுரு. ௧௧

1220. எண்ணரிது தன்னி னிரண்டற்ற தன்மையால்
வண்ணமற்ற வுண்மை வடிவு. ௧௨

1221. எண்ணவொணாத் தன்மெய் யியல்பாக வுள்ளவொன்றை
எண்ணுவோர் கற்பனைப்பட் டோர். ௧௩

1222. என்னிலே யானா விருந்தொளிர்கின் றானைமற்
றுன்னிலவன் வேறா மொழிந்து. ௧௪

1223. கள்ளமனக் கற்பனையா லன்றிக் கருதவொணான்
உள்ளமா வுள்ளவுடை யான். ௧௫

1224. கற்பனையா லன்றிக் கருதவொணு வத்துவிதத்
தற்பரமா நிற்றல் சதிர். கசு

1225. காணுங்கண் ஞான கனசொருபம் சுட்டறிவாற்
காணுந் தகையதன்றே காண். கள

1226. அறிவுவடி வாகவிளங் கான்மா மனச்சுட்
டறிவறிய வொண்ணு தது. கஅ

1227. எதிராகச் சுட்டி யியற்பரமாந் தன்னைப்
பிதிரார் ஒருமைதெளிந் தோர். கக

(கொச்சகக் கலிப்பா)

1228. உள்ளத் துளமா வொளிர்சொருபச் சிற்பரத்தை
யுள்ள லதேதாமா வூன்றி யுறைப்பன்றி
உள்ளலன்று வேறுபோ லுள்ளிலோ கற்பனையாம்;
உள்ளவில்லை யந்தத்தன் ஞெட்பநுட்ப வுண்மை
[யிலே. உ0

குறிப்பு:—'உள்ளதல துள்ளவுணர்' என்ற உள்ளது நாற்பது முதல் மங்கல வெண்பா ஈண்டு நோக்கத் தக்கது.

1229. விள்ள வொணுத விசுத்த சொருபமா
நள்ளற் குரியமெய்ஞ் ஞானமோ னப்பொருளைக்
கள்ள வகந்தைமனக் கற்பனையாஞ் சுட்டறிவால்
உள்ளலுற்றூர்க் குண்மை யுறழ்ந்தன்றிக் காணுமே. உக

குறிப்பு:—உண்மை யெனினும் பொருளெனினும் ஒக்கும்.

1230. *விழுப்பத மாக விளங்குதன் னுண்மை
இழப்பது மில்லை இழந்துவெம் பாசத்
துழப்பது மில்லைமெய் யோர்ந்துபின் வீடு
திளைப்பது மில்லை எலாஞ்சித் திரமே. உஉ

* விழுப்பதம் - பிரம்மபதம், மோக்ஷபதம்

1231. இனையதெனச் சற்று மிலக்கணங்கூ றெண்ணு
வனையதுதான் ருனு வவிரிலன்றி யுள்ளத்
தனியமே தேர்மனத்தா லான்மாவா மந்தத்
தனதியல்யா ராலுமே சாதிக் கொணுதே. உ௩

1232. உள்ளப் படாததோ ருண்மை சுயவடிவாத்
தெள்ளத் தெளியத் திருவருளாற் றேற்றலுநான்,
எள்ளப் படாதபே ரின்பவியற் சிற்பரவாழ்
வுள்ளத் தனுபவமா வுற்றெளிரப் பெற்றதே. உ௪

1233. உற்றெளிரப் பெற்றவவ் வுண்மையே வேதாந்த
முற்றமுமுச் செம்பதமா மோனப் பரமபதம்;
துற்றுமனப் பான்மையறத் துன்றுமவ் வுண்மைநிலை
இன்றென் றுரைக்க வெவராலுங் கிற்பதன்றே. உ௫

1234. கிற்பதல் லாதசிவக் கேவலந்தம் முள்ளொடுங்கி
நிற்பதே யன்றி நினைக்கப் படுவதன்று;
சொற்பனமே போலச் சுழலுமனக் கற்பனைவிட்
டுற்பவமோர்ந் துள்ளொடுங்கிற் பாசவுணர் வோயுமே. உ௬

1235. முப்புடியை முற்றக் கடந்தமுழு மோனவருட்
சிற்பதத்தின் சீர்மை சிவோகமாச் சித்தமொளிர்
அப்படியாற் கண்டறியி னல்லா தனைத்தினைத்தென்
றெப்படியா லுஞ்சற் றியம்பவொணு *தார்க்குமே. உ௭

* ஆர்க்கும் — யாராலும் என வேற்றுமை மயக்கம்.

1236. யானு விதயத் தியல்சொருபப் பெம்மானைத்
தானுன மோனஞ் சதிர்த்தா ரறிதலன்றி
ஊனு மகந்தை யுணர்வாற் கலங்கலுற்ற
வேனே ரறிய வியல்வதன்றேர் சற்றுமே. உ௮

1237. ஆன்ம சொரூப வறிவொளியா லன்றிமற்
றுன்மாவை யாரே யறிகிற்பர், சுத்தவே
கான்ம சொரூப வறிவொளியிற் கற்பிதமாத்
தோன்றுலக மாயைச் சுழலிலகப் பட்டோரே. உ௯

1238. ஏகமா வுள்ள வியற்சிற் பரசொருபம்
பாகமறத் துன்றும் பரமார்த்தப் பெற்றித்தாற்
கோக வுசாவாற் குலேந்தொழியுங் கற்பனு
மோக முணேப்பான் முகந்துகொள லாவதன்றே. ௰

1239. தற்பர வுண்மையே தம்மியலாத் தங்குவது
சிற்பரமாப் பொங்குந் திருவருளாற் றேறிலன்றி
யற்புதவாழ் வானஞா னுனுபவ சாந்திநிலே
யற்பராஞ் சீவரறி வாற்றலுக்கு மிஞ்சியதே. ௧௧

## 88. சொருபம் அநிர்வசனீயம்

(குறள்)

1240. அதுவதுவென் றேயுரைப்ப தல்லா லதனே
யிதுவென் றிசைப்ப தெவன். ௧

குறிப்பு:—இது இத்தன்மைத்து

## 89. சொருபம் நித்தியாபரோட்சம்

(குறள்)

1241. கற்பனேயைப் போக்கக் கடவதன்றி யாவரே
சிற்பரத்தைத் தாமொளிர்விப் பார். ௧

1242. சாட்சாத்தாத் தானுெளிருந் தன்னேமற் றன்னியம்போற்
சாட்சாற் கரித்த லெவன். ௨

குறிப்பு:—சொருபம் நித்யாபரோட்சத் துலக்கம் என்பதாம். ஏதுக்களாலு மெடுத்தமொழியாலுமிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி—என்னும் சம்பந்தர் தேவாரமும் இக்கருத்தே பற்றி வந்தது.

1243. எதனுல் விளங்கும்மற் றெல்லாமே தானு
மதனே விளக்கமற்றுென் றேது. ௩

1244. சும்மா விருக்கத் துலங்கு சொருபமுத்திக்
கெம்மா விடருழக்கின் றூர். ௪

## 90. ஏகாத்மா

(குறள்)

1245. துன்றுமே கான்ம சொருபத் துலக்கமே
வென்றிசே ருண்மை விளக்கு. க

1246. ஒருவனு னென்பதே உண்மையா மேக
சொருபமெய்ஞ் ஞானத் துணிபு. உ

குறிப்பு:—"ஒருவனுன் எற்குரியன்" (தேவிகாலோத்தரம்) என்ற பாட்டாற் கூறப்பட்ட முடிவு; உண்மை-பரமார்த்த வுண்மை; ஏகசொருபம்-ஏகான்ம சொருபம்; ஞானம்-ஞானுனுபவம்; துணிபு-நிச்சயம்.

1247. தானே தனக்குரிமை தான்றனக்கே முற்றுரிமை
தானுந் தனித்தத் துவம். ந

1248. தான்றனக் கேயுரிமை; தானே தனக்குரிமை
ஆன்றஞா னுனு பவம். ச

குறிப்பு:—"ஒருவனு னெற்குரியன்...யான்" என்னும் தேவிகாலோத்தர ஞானசார விசாரப் படலம் 49வது செய்யுள் இக்கருத்தோடு ஒப்பிடத் தக்கது.

1249. எத்தனையோ நான்போ லியலும்பல் வேறுயிர்க்கோர்
அத்தனுந் தானே யுயிர். ரு

1250. ஆன்ம சொரூப வறிவின் விலாசமே
யான்முதலாத் தோன்று மெலாம். சு

1251. எல்லா மொருதானே எல்லாரு மோர்தானே
யல்லாம லில்லை யயல். எ

1252. அறிவுருவா வுள்ள வகத்தை யகத்திற்
பிறிதுபோற் பேணல் பிழை. அ

குறிப்பு: அகம்-ஆன்மசொருபம்

## 91. நிட்டை

(குறள்)

1253. மதித்திடவொண் ணுது மதியால், அதனைப்
பதித்திடலா லன்றிப் பரத்து. க

குறிப்பு: 'மதிக்கொளிதந்து' என்னும் உள்ளது நாற்பது 22ஆவது பாடல் இங்கு நோக்கற் பாலது.

1254. சிக்கென் றிதயத்திற் சேர்ந்தொழுகுஞ் சித்தமே
நிற்குங் கடவுள் நிலை. உ

1255. ஆட்டமற நிற்கு மகத்தே யனந்தசுக
வீட்டமா நிற்கு மிறை. ங

1256. எண்ணமற்று நிற்ற லிறைவனருட் போதவியல்
வண்ணமாத் தேர்க மனத்து. ச

1257. சேட்டையற நின்றொளிருஞ் சீர்மையே ஜீவபரக்
கூட்டுறவா முத்திக் குலா. ரு

1258. கோடா நிலைமை குறிதவறி மற்றொன்றி
லோடா *துளத்தி லுறைவு. சு

*'திதயத் துறைவு' எனவும் பாடம்.

1259. தட்டிக் கழிக்கத் தகுவதன்று தன்சொருப
நிட்டையாந் தெய்வக் கடன். எ

1260. இணக்கமா வொன்றி யிருத்தலே யுண்மை
வணக்கமா வுள்ளுவரான் றேர். அ

1261. சுற்றலற்றுச் சிந்தை சொருபத்தி லூன்றலே
கற்றுத் தெளிந்தார் கடன். கூ

1262. ஆன்ம சொரூப வறிவிலே கூடுநிஷ்டை
தான்மருவ வேண்டுஞ் சதிர். க0

1263. எண்ணரிய தன்மெய் யியல்விளங்கு மின்பநிஷ்டை
நண்ணரிய வுண்மை நலன். கக

1264. நிலைக்கலுற நிட்டையிலே நெஞ்சையுய்க்கி லன்றிக்
கலைக்கற்றை யாலென் பயன். [redacted]

1265. நிலைநிற்கி ல்ன்றிமெய்ஞ் ஞேயத்தே ஞானக்
கலைகற்ற தாலென் பயன். [redacted]

1266. நிலையிலே நெஞ்சை நிறுத்துவதே உண்மைக்
கலையினுற் காணும் பயன். [redacted]

1267. நிலைநிற்ற லுற்றூர் கலைகற்றூர்; மற்று
ரலைவுற்றூர் பாழா ணவத்து. க௫

1268. சிற்பரவாழ் வான சிவானுபவங் கூர்பதத்து
நிற்பதே ஞேய நிலை. [redacted]

1269. வெருவலுற்ற மோக விகற்பமறல் சுத்த
நிருவிகற்ப வுண்மை நிலை. [redacted]

1270. அமுத்தமா வுள்ளத் தமர்தலே மோன
விமுத்தவமா முண்மை விறல். க௮

1271. உலைவிலா தூன்று முணர்வே யுளத்து
நலிவிலா வாழ்க்கை நலன். [redacted]

1272. துன்றுபர மான துரீயமே தன்னியலா
நின்றொளிர்கை நிட்டை யுரு. ௨0

1273. ஆன்ற சொரூப வறிவான வுண்மையா
வூன்றலே நிட்டை யுரு. உக

1274. அறிவா வகத்தே யமைந்த சொருபத்
துறைவதே நிஷ்டை யுணர். உஉ

1275. அறிவான வுண்மையிலே யாழ்ந்தொடுங்க லுற்ற
செறிவே சமாதித் திறம். உ௩

1276. கட்டற்ற மோனவருட் கைவல் லியசொருப
நிட்டையே யுண்மை நிறைவு. உச

1277. நிரம்பலுற்ற மெய்ஞ்ஞான நிஷ்டானு பூதி
வரம்பில்பே ரின்பவருள் வாழ்வு. ௨௫

1278. நிட்டானு பூதி நிரம்பினு லன்றியகத்
தெட்டாது மோன வியல். ௨௬

1279. எட்ட வொணுதபே ரின்பப் பரசிவத்தோ
டொட்டுவது நிட்டை யுணர்வு. ௨௭

1280. உள்ளதே தாஞ வுணர்ந்துநிற்ற லுள்ளத்துத்
தெள்ளிதா நிட்டைத் திறன். ௨அ

1281. நயக்க நயக்க நடக்கலுற்ற நிஷ்டை
மயக்க மகற்றும் மருந்து. ௨௯

1282. நாதனருள் கூட்டுறுமெய்ஞ் ஞான சொருபநிட்டை
வாதனையை மாய்க்கும் வழி. ௩0

1283. நிட்டையே தன்னியல்பா நீடும் மயக்கவகக்
கட்டழியப் பெற்ற கருத்து. ௩௧

1284. தன்சொருப வுண்மையிலே தக்காங்கு நிற்றலருள்
விஞ்சைசே ருண்மை விறல். ௩௨

1285. காண்பதென்ன காட்சியருட்கண்ணு வொளிர்சொருப
மாண்பதத்தே வைகலன்றி மற்று. ௩௩

1286. போதவள வாகப் பொருந்திநிற்பா ரன்றிமனக்
கேதமறக் காண்பா ரிலர். ௩௪

1287. வஞ்சமொரு சற்றும் மருவா தருட்பதத்தே
நெஞ்சமொன்றி நின்ற விடத்து. ௩௫

1288. யானற்ற தன்மெய் யியலறிந்து நிற்கிலகத்
தூனக் கலக்க மறும். ௩௬

1289. நிட்டானு பூதி நிலையிலே யன்றிமற்
*றெட்டாது தன்மெய் யுரு. ௩௭

*'எட்டாது தன்மெய் யியல் எனவும் பாடம்.'

1290. நிட்டானு பூதி நிரம்பினு லன்றியகத்
தெட்டான் சொருப விறை. ௩௮

1291. பட்டியகப் பேய்சாய் பதத்திற் கிளர்தலுறு
நிட்டையே தன்மெய்ந் நிலை. ௩௯

1292. சுத்தப் பரசிவமாத் துன்றுமெய்ஞ் ஞானநிஷ்டை
மத்தவகப் பாசமரி வாள். ௪0

1293. அறிவான் சொருப வறிவுண்மை யாகச்
செறிவதே நிஷ்டைத் திறம். ௪௧

1294. உண்மையே வாழ்வா வுணர்ந்தொடுங்கி நிற்போரே
வண்மைசேர் சாந்திமடுப் பார். ௪௨

1295. ஊன்றினு லன்றி யுணர்வா முளத்திலுயிர்க்
கான்றநிஜ சாந்தி யரிது. ௪௩

1296. போத வகத்திற் பொருந்தினோர் பேத
வுருவெளியிற் பேர்ந்துகலங் கார். ௪௪

1297. தூணமா வுள்ள சொருபத்தைப் பற்றுதோர்
*ஆணவநா னல்வருந்து வார். ௪௫

* ஆணவ நான் - யானென்னுஞ் செருக்கு.

1298. உய்வளித்தாண் டான்பா லுரம்படநில் லாதோர்மற்
றைவருட்காட் பட்டலை வார். ௪௬

குறிப்பு: ஐவர் - ஐம்புலக் கள்வர்.

1299. சுத்த வுணர்வுருவாத் துன்று சொருபவாழ்
வத்தகநில் லாதார்க் கரிது. ௪௭

1300. ஊன்றப்பெற் ருலே யுணர்வுருவா வுள்ளத்து
மான்றவகப் பாச மறும். ௪அ

1301. சுத்தவறி வாகத் துலங்கு சொரூபநிஷ்டை
வித்தகருக் கல்லா லரிது. ௪௯

(கொச்சகக் கலிப்பா)

1302. உணர்வான தாமேயா முண்மையினே மற்றவ்
வுணர்வால்யா ரெவ்வா றுணர்வதென வோர்வால்
உணர்வான தாமேதா மாகவுளத் தூன்றும்
உணர்வான நிஷ்டை உணர்வதன்மெய் யாமே. ௫0

1303. உணர்வான மோன வொளியா லகமாப்
புணர்வதா லன்றிமனே புத்திகளாற் சுட்டி
யணவ வொணுஅ தயல்போல், இதயத்
துணர்வேதா னுக வொளிர்தற் பரமே. ௫க

1304. சிவத்தி லழுந்தலுற்ற சித்தத் தியல்பு
சுவத்தமா வுள்ள சொரூபானு பூதி;
விவத்தை யிலாது விபசரிக்குஞ் சிந்தை
பவத்தி லுழன்று பரிதபிப்ப தாமே. ௫உ

1305. அடிப்படையா வுள்ளசொரூ பத்தே யறிவு
திடப்படவே யூன்றல் சிவயோக நிட்டை;
மடப்படுநா னென்னுமதி மாய்ந்தங் கொழிகை
முடிப்பரமா வுள்ளசிவ முத்திச் சிறப்பே. ௫௩

1306. எட்டப் படாத விறைவனேயெட் டிப்பிடிப்பார்
நிட்டையிலே நெஞ்சமுந்தி நிற்போர்; சிவோகமாச்
சட்ட விளங்குசிவ சாட்சாற்கா ரத்தெளிவாற்
கெட்டழியும் பேதக் கிறிசே ரகந்தையே. ௫௪

1307. உறவுற்ற சிச்சடப்பா ழுனக்கட் டான
மறவிசேர் மோக மனச்செருக்கை யாராய்ந்
தறிவொளியாத் துன்றுபர மான்ம வகத்திற்
செறிவதுமெய்ஞ் ஞான சிவோகநிஷ்டைச் சார்பே. ருரு

1308. சுத்தவருட் கேவலமாத் துன்று சொரூபவுணர்
வத்தகநிற் கின்றூர்க் கனுபவமாப் பொங்குவது
மத்தவகங் கார மதோன்மத்தப் பேயரகத்
தெத்திறத்துந் தோன்று திருப்பினுங்கண் மூடியே. ருசா

## 92. ஆழ்தல் - அழுந்தல்

(குறள்)

1309. அடங்கியே யான்ம விசாரத்தால் உள்ளத்
தொடுங்குவா ருண்மைகாண் பார். க

1310. மனத்தை யயற்கண் மடாது சொரூபத்
தனித்தத் துவத்தி லழுத்து. உ

1311. ஊடாடு கின்றபா ழுத்தை யகந்தைமுனைப்
பாடா தொடுங்க லறிவு. ௩

1312. இயற்சிற் பரமா மிதயத் தொடுங்கும்
முயற்சித் திறமா முனைப்பு. ச

1313. நானற் றொடுங்கொடுங்க ஞான சொரூபவொளி
மோனத் துரஞ்சேர் வுறும். ரு

1314. ஒடுங்க வொடுங்க வுணர்வோ டுளத்தில்
விடுங்கா ணகந்தை வெறி. சா

1315. அடங்கியொடுங் குற்றவறி வாளர் திறத்து
முடங்கலுறும் மாயை முரண். எ

1316. ஒடுங்க வொடுங்கவுணர் வுள்ளத்தே யூன
மடங்கழிய மின்னும் வடிவு. அ

குறிப்பு:—உணர்வு - மனம்; மின்னல் — விளங்கல்;
வடிவு - சொரூபம்.

1317. அகத்திலே சித்த மடங்கலே சுத்த
சிவத்திலே யாமுந் திறன். ௯

1318. சிவத்திற் பதியிற் சிவமயமே யான
சுவத்தநிலே துன்றும் மனம். ௧0

1319. அமைதியா வுள்ளத் தறிவோ டடங்கில்
நமதியல்பா வுள்ளா னவன். ௧௧

1320. சிவத்திலே சித்தந் திளைத்தலே முற்செய்
தவத்தின்றற் சாரும் பயன். ௧௨

1321. உண்மை யுணர்வோ *டுளத்தி லொடுங்கலே
வண்மைசேர் சாந்தி மகிழ். ௧௩

* 'டொழிவி லொடுங்கலே' எனவும் பாடம்.

1322. ஊன்றினு லேயறிவோ டுள்ளத்து நுட்பவொட்பஞ்
சான்ற சமாதி யுறும். ௧௪

1323. இதயமா வுள்ள வீயற்செம் பதத்திற்
பதியுமேற் சித்தம் பரம். ௧௫

1324. அறிவுருவாந் தெய்வ வருட்பதத்தி லாழ்வோர்
அறிவுருவே யாவினை வார். ௧௬

1325. அறிவான சுத்தசொரு பானுபவ முண்டாம்,
அறிவகமா வாழ்ந்தமைந் தால். ௧௭

குறிப்பு:—சுத்தவறி வான சொருபானுவம் என்க.

1326. ஆழ்தலுற் றுரே யகத்திலருட் சிற்பரமா
வாழ்தலுற்றுர் சாந்தி மடுத்து. ௧அ

## 93. தரும தயா தத்துவம்

(குறள்)

1327. ஒருமை யுணர்வா லுளத்திற் கிளரும்
தருமதயா தத்துவத்தின் சால்பு. ௧

1328. தயாசொருப மான சதாசிவமெய்க் காட்சி
தயாதரும தத்துவமே தான். ௨

## 94. உண்மை

(குறள்)

1329. யாமென்னு முண்மை யிதயத் துணர்வுற்றால்
ஓமென்னு முண்மை யது. ௧

1330. * வெற்றெனவு போன்ற வெளிக்குள் வெளியாக
வுற்றொளிர்வ துண்மை யுளத்து. ௨

* வெற்றெனவு – வெறுமை, சூனியம்.

1331. சொந்த வொளியாற் றுலங்கு சொருபமே
பொந்துபடா வுண்மைப் பொருள். ௩

1332. நன்று வகத்தொளிர்மெய்ஞ் ஞான சொருபமே
பொன்றுத வுண்மைப் பொருள். ௪

1333. இதுவதுவொன் றற்ற வியல்பான சுத்த
பொதுவெளியே யுண்மைப் பொருள். ௫

1334. தன்னியல்பாற் றனொளிரத் தக்கதே யுண்மையன்றி
யன்னியத்தாற் றனொளிர்வ தன்று. ௬

1335. மோனமா வுள்ளத்து முண்டொளிர்சற் போதவருள்
வானமே யுண்மை வடிவு. ௭

1336. தப்பாத வுண்மையெனத் தக்கதுதன் னுள்ளுணர்வா
எப்போது முள்ள வியல்பு. ௮

1337. உய்த்துணரிற் சொச்சொருப வுண்மை யுளந்துலங்கப்
பொய்த்தொழியும் பேதப் புலம்பு. ௯

1338. மேதக்க வுண்மை விளங்கிலன்றிப் பொன்றுது
பேதக் கலக்கப் பிழை. ௧0

1339. அறிவான வுண்மையே யுண்மையல் லாமற்
பிறவான வுண்மை பிழை. கக

1340. தன்னை யறிந்தடைந்த தத்துவஞா னுனுபவப்
பொன்னியல்கா னுண்மைப் பொலிவு. க௨

1341. சுட்டே தொழிலாச் சுழல்ஜீவ போதத்தால்
எட்டவொணு துண்மை யியல். க௩

1342. அனுதியா வுள்ள வறிவான வுண்மை
எனுதியா னற்ற வியல். க௪

1343. மனேமயமாம் பேத மயக்கவறி வற்ற
*வினேதயமே யுண்மை யியல். க௫

* இனேதயம் - சுத்தஞான சூரியோதயம்.

1344. உள்ளதுதான் ருனு வொளிர்தலே யுள்ளத்துத்
தெள்ளமுத மாமெய்த் திறன். க௬

1345. தொந்த மிலாத சொருபசற் போதமே
நிந்தைதீ ருண்மை நிலை. க௭

1346. மறப்புநினைப் பற்ற மனேதீத வுண்மைச்
சிறப்பே சிவக்கே வலம். க௮

1347. மறப்பும் நினைப்புமே மன்னுயிரைத் தாம்பற்
றிறப்பும் பிறப்புமென் பார். க௯

1348. உள்ளதொன் று தானே யுணர்வா விளங்கிலன்றிக்
கள்ளமே யாமுள் ளது. ௨0

1349. உறுதிசே ரொட்பநுட்ப வுண்மையே மிக்க
பெறுதியாப் பேணுவரான் ரேர். ௨க

1350. கூடலுற்ற மோனக் குறியால் இதயத்து
நீடலுற்ற துண்மை நிலை. ௨௨

1351. கூர்மைசே ருண்மைக் குலாவே சொருபவியற்
சீர்மைசேர் முத்திச் சிறப்பு. உ௩

(கொச்சகக் கலிப்பா)

1352. துள்ளலறக் கூர்த்துணர்தற் சோதனையா லுள்ளத்திற்
கள்ளமனக் கற்பனை மாயங் கரந்தொழியத்
தெள்ள விளங்கத் திகழ்வதே தன்னுண்மை
தள்ளவொணா துள்ளத்துத் தற்பரமா வுள்ளதே. உ௪

1353. முசித்தலற்ற வாழ்வான முற்றமுழு மோன
விசுத்தவெளி யாக விளங்குறுதன் னுண்மை
நிசித்த விடக்குடலா நின்ற வகப்பா
மூசுத்த மனத்தா லறியவொண் ணாதே. உ௫

## 95. உண்மை யுணர்வு

(குறள்)

1354. உணவாலே வாழு முடலம்போல் உண்மை
யுணர்வாலே வாழு முயிர். க

1355. உண்மையுணர் வான வுரங்காண் உலைவுறுத்
திண்மையா லூன்றுந் திறல். உ

1356. பரவுணர்வு பற்றிலன்றிப் பாசந்தீ ருண்மைத்
திரவுறுதி காண்ட லரிது. ௩

1357. தான்றானா வுள்ள சதாசிவத்திற் றானதுவா
வூன்றுவதே யுண்மை யுணர்வு. ௪

1358. ஏகந் துலங்க விதயத் தொளிர்சொருப
யோகந் தொடர்வ துணர்வு. ௫

குறிப்பு: தொடர்வது - இடையறாத் தன்னியல்பாக நிகழ்வது; உணர்வு - மெய்யுணர்வு.

1359. உறுதிசே ருண்மை யுணர்வே சிறந்த
பெறுதியா மன்று பிற. ௬
குறிப்பு: பெறுதி - பேறு.

1360. தெருமரல்சேர் வஞ்சச் செருக்கறக்காண் கிற்ப
தொருமைசேர் தன்மெய் யுணர்வு. ௭

1361. செறிவான வுண்மையே தேறவல் லாருக்
கறிவா விளங்கு வது. ௮

1362. தன்னந் தனியாத் தழைத்தொளிர்தன் மெய்யுணர்வே
மன்னும் பரமசுப மாண்பு. ௯

1363. எவ்வறிவா லெல்லா வறிவு மிகப்பவோ
அவ்வறிவே யுண்மை யறிவு. ௧0
குறிப்பு:—நிகத்தல் - கற்பனை மாத்திரமாகக் கழிதல்.

1364. ஊனமற்ற வுண்மையைநன் கோர்த்துணரி லன்றியுளத்
தூனமென்றும் போகா துயிர்க்கு. ௧௧

1365. உள்ளத்தே யுண்மை யுணரிலன்றி யாருயிரை
வெள்ளத் திடும்பை விடாது. ௧௨

1366. உள்ளத் தியல்சொருப வுண்மை யுணரிலன்றிக்
கள்ளக் கலக்க மறாது. ௧௩

1367. மெய்யுணர்வாற் றன்மெய் விளங்கிலன்றிப் பேராது
பொய்யுலக மாயப் புலம். ௧௪

1368. உள்ளமெழ வுண்மை யுணர்வுதித்தா லேயொழியும்
கள்ள மனக்கற் பனை. ௧௫

1369. உள்ளதனை யுள்ளத் துணராதார் வாழ்வுமுற்றக்
கள்ளமனக் கற்பனையே காண். ௧௬

1370. உய்த்துணர்ந்தா லுள்ளத் தொளிவிடுந்தன் னுண்
பொய்த்தொழியும் பேதப் புலன். [மையின்முற் ௧௭

1371. உண்மை யொளிரிலன்றி யுள்ளத் தொழியாது
விண்மை யுலக வெறி. கஅ

1372. ஒன்ருன வுண்மை யுணர்வின் மலர்ச்சியே
நன்ருன வாழ்க்கை நலன் கசு

1373. உண்மை யுணர்வா வுளங்கிளரப் பொங்குசுப
வண்மையே யுண்மை வளம். உ0

1374. உண்மையொளி யுற்ற வுளமே உபசாந்த
வண்மைசேர் சுத்தவருள் வைப்பு. உக

1375. வித்தையா லுண்மை விளங்கிடு லுள்ளத்து
நித்தமா முத்தி நிலே. உஉ

1376. உலப்பிலா வுண்மை யுணரார் உலக
வலேப்பட்டு மாழ்குறு வார். உங

1377. வெற்றறிவே யாக விளங்கத்தம் முண்மையகத்
துற்றறிந்தார் கற்றறிந் தார். உச

1378. உள்ளத் தொடுங்கி யுறைத்த வுணர்வோரே
கள்ளமறக் காண்கிற் பவர். உரு

## 96. உண்மை விழிப்பு

(குறள்)

1379. சிவத்திலே மோனந் தெளிந்த வுணர்வே
விவத்தைசே ருண்மை விழிப்பு. க

1380. சூனியமா மூன்றுமற்ற சுத்தத் துரியமெய்ஞ்
ஞானமே யுண்மை நனு. உ

1381. விழிக்கிலல் லாது விசுத்தப் பரத்திற்
பழுக்கரிது சாந்திப் பதம். ங

1382. கழியாத சாந்தக் கடவுட் பதத்தில்
விழியாநின் ருர்விடுபட் டார். ச

1383. சுத்த மனத்தே சொருபந் துலங்கலுற்ற
வித்தகரே மெய்விழிப்புற் றோர். ௱

## 97. துரீய வாழ்வு

(கொச்சகக் கலிப்பா)

1384. மறக்க நினைக்க வொண்ணுதசிவ மாட்சி
உறக்கவிழிப் புக்களுக் குட்படா வுண்மை
இறக்கல் பிறக்கலங் கில்லை இதயப்
பிறக்கமா வுள்ளவியற் பெற்றிசேர் வாழ்வே. க

## 98. மோன முத்திரை அல்லது சிற்குறி

(குறள்)

1385. மோனக் குறியாலே முற்றவேண் டும்பரத்துக்
கேனைக் குறியென் செயும். க

1386. குருரமணன் கூர்சிற் குறியே எனக்கு
வருமரணம் மாற்றும் மருந்து. உ

குறிப்பு:—மரணம் பிரமாதமே யாதலால் ஆண்டவன் சிற்குறி அதனை மாற்றும் மருந்தாயிற்று.

## 99. மோனம்

(குறள்)

1387. சிற்கனமாத் துன்று சிவசொருப மோனமே
கற்றொழுக வேண்டுங் கலை. க

1388. சிற்பரமா மோனவருட் செம்பதமே முத்தியருள்
கற்பகமா வோர்க கருத்து. உ

1389. அடிப்படையா வுள்ளசுத் தான்ம சொருபக்
கடைப்பிடியே மோனக் கலை. ௩

1390. பந்தப் படாத்தன் பரசொருப மோனவுணர்
வெந்தப் படிப்பில் வரும். ௪

1391. முத்திப் பெருநலமா மோன வுணர்வுறவே
வித்தைப் பயில்வின் விளைவு. ரு

குறிப்பு :—வித்தைப் பயில்வின் விளைவு - ஞான சாதனை யின் பயன்.

1392. வித்தையாற் கைகூட வேண்டுவது தன்சொருப
சித்தியா மோனச் சிறப்பு. சு

1393. சிற்பரமாத் துன்று சிவத்தையன்றி மற்றொன்றுங்
கற்பதன்று மோனக் கருத்து. எ

1394. பேதமற்ற மோனவருட் பெட்பு விளங்கலுற்றால்
வேத மவேதமாப் போம். அ

1395. வேதாந்த சித்தாந்த வேற்றுமையாங் கற்பனைதீர்
போதாந்த மோனம் பொருள். கூ

1396. மோனமே முற்றமுழு மூதறிவா முண்மையன்றி
ஏனையறி வெல்லாம் பிழை. க0

1397. ஆனந்த மோன வருளறிவே ஆணவப்பே
யீனந் தவிர்ந்த வியல். கக

1398. எங்குமே தானு வியல்சொருப மோனவுணர்
வங்கமகம் புத்தி யழிவு. கஉ

1399. அற்றொழிந்த மோக வகந்தையே, தன்னுருவா
முற்றமுழு மோனப் பொருள். கஙு

1400. மோனானு பூதியா முற்றலுற்ற, சுத்தவருள்
வானான தன்மை வரைப்பு. கச

குறிப்பு :—அருள்வான் - அருள் வெளி ; வரைப்பு - எல்லை, முடிவு; தன்மையே எல்லாவற்றுக்கும் முடி வென்பதாம்.

1401. நானற் றுயிர்க்கு நடையளித்த தம்பிரான்
மோனத் தியல்பே முடிவு. கரு

1402. ஒப்பமா மோன வுணர்வே யனுபூதித்
திட்பமா வுள்ளசச் சித்து. கஎ

1403. உரமான மோன வொளிசே ருணர்வே
பரமான வுண்மைப் பதம். கஅ

1404. உள்ளலறு மோனமே யுள்ளமா வுள்ளதனை
எள்ளலற வுள்ளு மியல். கஅ

1405. யானெனும்பொய்ம் மாய வெழுச்சியிலா மோனவுணர்
வூனமற்ற வுண்மை யுரு. கக

1406. அறிவான மோனமே யான்ற சொருப
நிறைவான வுண்மை நிலை. உ0

1407. அறிவா மலர்ந்தமெய் யன்புசே ருண்மை
நிறைவென்பர் மோன நிலை. உக

1408. அறிவில் விளைந்த வமுதான மோன
நிறைவுபே ரின்ப நிலை. உஉ

1409. அறிவே சொருபமா வான்றமைந்த மோன
நிறைவேகாண் உண்மை நிலை. உங

1410. அறிவறிந்தா ருள்ளத் தவிர்வதே உண்மை
நிறைவான மோன நிலை. உச

1411. முனைக்கலற்ற வுள்ளத்து மோன வுணர்வே
நினைக்கவொணுத் தன்மெய்ந் நிலை. உரு

1412. இணையிலா மோன வியற்பரமே சார்பா
வணையிலன்றி யில்லை நிலை. உசா

1413. ஒருபடித்தா வுள்ளத் தொளிர்சொருப வுண்மை
நிருவிகற்ப மோன நிலை. உஎ

1414. அறிவுக் கறிவா வவிர்சொருப வுண்மை
நிறைவுணர்வே மோன நிலை. உஅ

1415. கலக்கமோர் சற்றுங் கலவாத வுண்மைத்
துலக்கமே மோனந் துணி. ௨௯

1416. மோனத்தா லன்றி முகப்பரிய தன்சொருப
ஞானமம் மோனமே யாம். ௩0

1417. தன்னியல்பா மோனந் தழைத்தலே தன்சொருபம்
மன்னியமெய்ஞ் ஞான வடிவு. ௩௧

1418. அழிவிலா மோனமே தன்சொருப மாகக்
கழிவிலா ஞானக் கரு. ௩௨

1419. தெய்வப் பரமாத் திகழ்சொருப மோனமே
ஐயப் படாமெய் யறிவு. ௩௩

1420. மோன வுணர்வு முயங்கலே யுள்ளத்து
ஞானவனு பூதி நலன். ௩௪

1421. மோனத்தா லன்றி முயங்கலின்று தன்சொருப
ஞானத் தியல்சேர் நலன். ௩௫

1422. உண்மையே வாழ்வா வொளிருமோ னனுபவத்
திண்மையே ஞானத் திறம். ௩௬

1423. மோனந் துலங்கிலன்றி முத்திப் பரசொருப
ஞானங் கிளர்ந்ததன் றும். ௩௭

1424. ஞானனு சந்தான நாட்டப் பயிற்சிக்கு
மோனனு பூதி வரம்பு. ௩௮

1425. ஞானவரம் பாவகத்து நண்ணுமம்மோ னப்பதத்தை
வானவருந் தேறகில் லார். ௩௯

1426. ஏனையறி வொன்று மெதிருன்ற வல்லதன்று
மோன வறிவின் முகத்து. ௪0

1427. ஊனமற்ற மோன வுணர்வே உளங்கிளர்மெய்ஞ்
ஞானவெற்றி யான நலன். ௪௧

1428. மோதமாப் பொங்குசுப முத்தி சொருபசற்
போதமா மோனப் புலன். ௪௨

1429. முத்தித் துலக்கமா மோனம் பரமார்த்த
சித்தியென்பர் உண்மைதெளிந் தோர். ௪௩

1430. முத்திப் பரவுணர்வா மோனமே மெய்ஞ்ஞான
சித்தியா வோங்குந் திரு. ௪௪

1431. மோன வுணர்வே, முயங்கலரு சுத்தவருள்
வானமா முத்தி வடிவு. ௪௫

1432. ஊன வகப்பே யுருக்கெட் டொளிர்சொருப
மோனமே முத்தி முடிபு. ௪௬

1433. ஊனமற்ற வுண்மையா வுள்ளத் தொளிர்சொருப
மோனமே முத்தி முடிபு. ௪௭

1434. போதவருட் பூரணத்திற் பொங்கித் ததும்புசிவ
மோதமே மோன முகம். ௪௮

1435. மோன வுணர்வே முடிவில்பே ரின்பவுணர்
வேனையுணர் வெல்லாம் பிழை. ௪௯

1436. ஆதரஞ்சே ரன்பா வகந்துலங்கு மோனவுணர்
வார்தலின்பாம் அல்ல பிற. ௫௦

1437. யானற்ற மோன வியல்விளக்கம் பாரவருள்
வானப் பரசொருப மாண்பு. ௫௧

1438. உண்மை யளவா வொளிர்சொருப மோனமே
வண்மைசேர் சொந்தவியல் வாழ்வு. ௫௨

1439. உண்மையிலே யூன்றி யுறைத்தலுற்ற மோனவருள்
வண்மைசேர் வாழ்வே வளம். ௫௩

1440. மோனானு பூதி முகப்பதே சுத்தவருள்
வானா வளங்கிளர்மெய் வாழ்வு. ௫௪

1441. மோனனு பூதியே முத்திப்பே ரின்பவருள்
வானு வியல்சொருப வாழ்வு. ஞரு

1442. மோனனு பூதியே முட்டற்ற சுத்தவருள்
வானு வொளிர்சொருப வாழ்வு. ருசு

1443. தெளிவா விளங்குமியற் சிற்பரவாழ் வுள்ளத்
தொளியார்ந்த மோன வுணர்வு. ருஎ

1444. மோனமே ஞான முடிபான சுத்தவருள்
வானமா வைகுமியல் வாழ்வு. ருஅ

குறிப்பு:—முடிபான வாழ்வு, வைகும் வாழ்வு, இயல் வாழ்வு எனத் தனித்தனியே கூட்டுக.

1445. மோனவருட் பார்வை முகக்கிலன்றித் துன்றுது
வானவியற் கைவல்ய வாழ்வு. ருகூ

1446. யானற்ற மோன வியற்பெருமை சுத்தவருள்
வானப் பரமசுப[illegible]மாண்பு. சு0

1447. உண்மையிலே யூன்றி யொடுங்கலுற்ற மோனமே
வண்மைசேர் கைவல்ய வைப்பு. சுக

1448. திண்மைசேர் சுத்த சிவாத்துவித மோனவுணர்
வுண்மைவாழ் வென்பருணர்ந் தோர். சுஉ

1449. உரமான மோன வுணர்வே சொருபப்
பரமா வொளிர்மெய்ப் பதம். சுஙூ

குறிப்பு:—சொரூபப் பரம்-பரசொரூபம் என்பது முன் பின்னுகத் தொக்கது.

1450. உயக்கமற்ற சாந்த வுணர்வான மோனம்
மயக்கமற்ற சுத்தவருள் வாழ்வு. சுச

1451. தொன்றுதொட்ட சொந்த சொருபவியல் வாழ்வளிப்ப
தொன்றுபட்ட மோன வுணர்வு. சுரு

1452. தளங்களுக்கெல் லாந்தளமாத் தங்குசிவ மோனம்
வளங்களுக்கெல் லாமெய் வளம். சுசு

1453. முனைப்பறியா தான்றமைந்த மோனப் பதமே
தனிப்பரமா முண்மைத் தலம். சுஎ

1454. இருப்பள வாக விருந்து விளங்கல்
குருப்பத மோனக் குலா. சுஅ

1455. இருப்புணர்வே யுண்மை யுணர்வா இதயத்
தொருப்படுமோ னங்கா ணுரன். சுகூ

1456. உலகங் கடந்ததோ ருண்மைப் பரமாக்
குலவுமோ னங்காண் குணம். எ0

1457. சுத்த வறிவுத் துலக்கமே மிக்கபர
தத்துவமா மோனச் சுதிர். எக

1458. சுத்தோக மாகத் துலங்கு சொருபவருட்
புத்தோகம் மோனப் புலம். எஉ

1459. எங்குங் கலந்தாங் கியற்சிற் பரசொருபம்
பொங்குவதே மோனப் புலம். எ௩

1460. ஒன்றிய மோன வுணர்விலே சுத்தவருள்
வென்றி விளங்கும் விசைத்து. எ௪

1461. அடிப்படையா வுள்ள வறிவாந்தன் னுண்மை
திடப்படலே மோனத் திறன். எ௫

1462. தற்குறியா வோங்கு சதாசிவமாந் தன்சொருபச்
சிற்குறியே மோனத் திறன். எசு

1463. அறியப் படாமெய் யறிவான தன்னிற்
செறிதலே மோனத் திறன். எஎ

1464. அன்புசிவ மாக வடைந்தனுா னுபவ
மொய்ம்பென்பர் மோனத் திறன். எஅ

1465. கட்டுப் படாத கடவுட் பெருந்திறல்காண்
முட்டுப் படாமவுன மொய்ம்பு. எசு.

1466. சீரிய வுண்மைத் திறல்சான்ற மோனமே
கூரியமெய்ஞ் ஞானக் குறி. அ0.

1467. அறைபோ யழியாதெவ் வாற்றலுந் தன்மெய்
யறிவான மோன வரண். அக.

1468. ஓரியல்பிற் றுக வுளந்தெளிந்த மோனவுணர்
வாரியனுக் காற்றுமெய் யன்பு. அஉ.

1469. தொக்க சொருபமாந் துன்றுமோ னனுபவம்
மிக்கபர பத்திப் பயன். அஙு.

1470. மோனத்தா லன்றி முழுமுதலை யுள்ளபடி
யூனமற வெண்ண வொணுது. அச.

1471. மறையின் முடிவா மவுன வுணர்வே
இறைவ னடிச்சீ ரியல். அரு.

1472. ஒப்பமா வுள்ளத் தொளிர்சொருப மோனவருட்
செப்பமே சுத்தசிவச் சீர். அசு.

1473. தெளிந்தசிவா னந்தத் திருவருள்வாழ் வுள்ளத்
தளைந்ததுமோ னனு பவம். அஎ.

1474. தெளிவான கைவல்யச் சிற்பரவாழ் வுள்ளத்
தொளியார்ந்த மோன வுணர்வு. அஅ.

1475. உள்ளொளியென் றேதுவது தெள்ளியோ ருள்ளந்தே
ரொட்பநுட்ப மோன வுணர்வு. அகூ.

1476. உள்ளமே யாக வுளானையவ் வுள்ளத்தா
லுள்ளுவது மோன வுணர்வு. கூ0.

1477. கருதரிய வுண்மைக் கடவுளை முற்றக்
கருதுவது மோனக் கருத்து. கூக.

1478. தற்பரமா நின்ற சுதாசார மோனமே
கற்பனைதீ ருண்மைக் கருத்து. கூஉ

1479. சிந்திப் பரிய சிவத்துவமா மோனவியல்
சந்திப்ப தான்றதவச் சால்பு. கூ௩

1480. நீக்கமற்ற வுண்மையா நெஞ்சத் தொளிர்சொருப
நோக்கமே மிக்கபெரு நோன்பு. கூ௪

குறிப்பு :—நோன்பு - தவம்

1481. நினைவற்ற மோன நிகழ்வினன்றி யாருந்
தனையறியொண் ணுன்றறு பரன். கூ௫

1482. ஊனவகப் பாசமொழிந் துள்ளுணர்வு தெள்ளிதா
மோனமுறிற் பற்றும் பரம். கூ௬

1483. அறிவாக வுள்ள வனந்த சிவத்திற்
செறிவதே மோனச் சிறப்பு. கூ௭

1484. கருமவே கங்கூர் கலக்கமற்ற மோனம்
பரமசிவ வண்மைப் பதம். கூ௮

1485. சிந்தையற்ற மோனச் சிவபதமே மிக்கவருட்
சிந்தனையாற் சேரும் பயன். கூ௯

1486. அறிவுக் கனலே யருட்புனலா மோனத்
* திறவுற்ற வாழ்வே சிவம். க00

* திறவு - அனுபவம்.

1487. முனைத்தலற்ற தன்சொருப மோன வுணர்வே
மனத்தைக் கடந்தசிவ மாண்பு. க0க

1488. முப்புடிபே தங்கடந்த மோனமே சுத்தவருட்
சிற்பரவாழ் வான சிவம். க0உ

1489. ஒன்றுபர மோன வுணர்விலன்றித் தெள்ளிதாத்
துன்றரிது சுத்த சிவம். க0௩

1490. அடங்கி யொடுங்கியகத் தாழ்ந்தடைந்த மோனத்
திடங்காண் பரம சிவம். ௧0௪

1491. தெய்வப் பரசொருபத் தேற்றஞ்சேர் மோனவருட்
சைவப் பதஞ்சௌ பகம். ௧0௫

1492. ஈடுயர்வில் லாத வியற்செம் பதமோனப்
பீடுயர்வாழ் வேபிரம்மப் பேறு. ௧0௬
குறிப்பு:—பிரம்மப் பேறு - பிரம்மசித்தி.

1493. மோனவருள் வானமே முத்தி சொருபமாத்
தானவிர்தல் சிற்பரமெய்ச் சால்பு. ௧0௭

1494. முனைப்பற் றுளிர்சொருப மோனமே முத்தி
நினைப்புமறப் பற்ற நிலை. ௧0௮

1495. சரதவாழ் வான சதாமுத்தி யென்பர்
நிரதிசய மோன நிலை. ௧0௯

1496. அலயரல்கெட் டான்ற வறிவான மோன
நிலயமே முத்தி நிலை. ௧௧0

1497. தானே சதாசிவமாந் தத்துவஞா னுனுபவ
மோனமே முத்தி வளம். ௧௧௧

1498. மோன வுணர்வுருவா முத்தி யொளிர்தலே
ஊனமற்ற வுண்மை நலன். ௧௧௨

1499. முத்திப் பரமான மோன முழுமுதலே
புத்திக்குட் போதப் பொருள். ௧௧௩

1500. மறப்புநினைப் பற்ற மவுன வுணர்வு
பிறப்பிறப்பைப் பொய்ப்பிப் பது. ௧௧௪

1501. விந்தைசேர் தன்சொருப வீட்டின்பம் மோகமனச்
சிந்தையற்ற மோனத் திறம். ௧௧௫

1502. முட்டுப் படாதமுழு மோனத் திருப்பதமே
கட்டறக்காண் கிற்குங் கதி. கககூ

1503. உணர்வு தெளிந்தாங் குரம்படு மோனம்
புணர்தல் புலவோர்தஞ் சால்பு. ககஎ

1504. மோன வுணர்வு முயங்கலுற்றூர்க் கூனஞ்சே
ரேனையுணர் வென்னே பயன். ககஅ

1505. கூரியதோர் மோனக் குறியே குறிக்கோளாச்
சீரியர்வாழ் கிற்பர் சிறந்து. சுககூ

1506. சுத்த வறிவாத் துலங்குசுப மோனமே
வித்தகர்தம் மெய்வித் தகம். கஉ0

1507. இருந்துவிளங் குண்மை யியல்பான மோனம்
பொருந்தலுற்றேர் தாமே புதர். கஉக

(கொச்சகக் கலிப்பா)

1508. காரணவும் மோகமனக் கற்பனைதீர் சுத்தசிவ
பூரணமா மோனப் பொலிவின் பெருமையைமற்
றூரணமே தானு மறியாது மாட்சிசேர்
நாரணனே நான்முகனே தாமறியார் நாணுவதே. கஉஉ

1509. பரமார்த்த மோனவருட் பார்வையா லுள்ளத்
துரமாத்தங் குற்றூர் உரஞ்சான்ற மேலோர்;
அரைமாத் திரையி லடங்குமுண்மை மோன
குருமூர்த்தி யாலன்றிக் கூட வொணுதே. கஉங

1510. பரவெளியே யாகப் பரந்த சொரூப
வுரவொளியா(ம்) மோனவுணர் வொட்பமிக நுட்பம்
கரவொளிசேர் மோகமனக் காட்சிபோல் அஃது
விரகறியார் தேற விளங்குவதோ அன்றே. கஉச

1511. பெற்றசொரு பானுபவப் பெற்றிசிந் திக்கரிதேல்,
அற்றமா மோக வகப்பேய் முனைப்பறலால்
மற்றென் றறியா மவுனவியற் செம்பதவாழ்
விற்றென் றிசைக்க வெவர்க்கு மியலாதே. கஉரு

1512. கண்டாங் கமைந்தவருட் காட்சி அகிலமுந்தா
னுண்டாங் கமைந்தொளிர்சுத் தாத்துவித மோனநிலை
கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்மெய்
என்றுங் கதனியல்யா ரெவ்வா றிசைப்பதே. கஉசு

1513. வெற்றுணர்வா வுள்ள விசுத்தமோ னந்தானே
கற்றிடமற் றென்றுமில்லாக் கைவல்ய வுண்மையென்பர்
சுற்றுமுற்று நோக்கிச் சுழல்விகற்பச் சுட்டுணர்வோ
அற்றமுற்ற மோக வகந்தைமனக் கற்பனையே. கஉஎ

1514. தன்னையிறைக் கூனுகத் தானளித்த மோனமே
தன்னியனுத் தன்னைமுற்றச் செய்யுஞ் சிவதருமம்
அன்னியதன் மத்தா லடைவரிது கைவல்ய
நன்னயமார் தன்சொருப ஞானனு பூதியே. கஉஅ

1515. அறிவை யறிவா லறிதலால் அந்த
வறிவுதூய் தாக வமைந்து தெளிந்த
அறிவான மோனத் தயலொன்று மில்லை
அறிவே சொருபமாந் தன்னை யலாதே. கஉகூ

1516. அறிவிற் கலக்க மகன்ற வகத்திற்
பிறிவற் றொளிர்சற் பிரம்ம சொருப
நிறைவான மோன நிகழ்ச்சியே ஜீவன்
முறையா லுறவேண்டும் முத்திச் சிறப்பே. கங0

1517. அத்த னருளால் அகந்தைமுனைப் பானமயற்
கர்த்தத் துவமதியின் காழ்ப்பறலாற் கன்மமறச்
சித்தந் தெளியத் திகழ்ந்தமோ னனுபவப்
புத்தமுத வாழ்க்கைப் பொலிவுசிவ போகமே. கஙக

1518. வானமா வுள்ளம் மலர்ந்துவிளங் கற்புதமா(ம்)
மோனமே யான்றமுமு மூதுணர்வின் சித்தாந்தம்
யானென் றிதுவென் றிரண்டுபடத் தேர்வுறும்பா
மூனமனக் கற்பனையோ டொட்டாது சிற்பரமே. கஉ

1519. அறிவிற் பொருந்தியசுத் தான்மானு பூதிச்
செறிவிற் பிறங்கியது சிற்பரமா மோனம்;
பிறிவுற் றொழியவகப் பேயாட்சி மோன
வறிவிற் செயல்படுநல் லாட்சிசிவந் தானே. கங

1520. கதியெலா வற்றுக்கு மாகக் கடவ
திதயமா மோன வியற்சிற் பரமே;
அதியமா வுள்ள வருட்கே வலவாழ்
வுதயமாத் துய்ப்ப துணர்வொளியா மாங்கே. கச

1521. மோனவியற் செம்பதமே முத்திநிலை, சுத்தவருள்
வானவடி வானபெரு வாழ்வுநிலை, பொய்ம்மயக்க
நானற் றொளிர்சொருப ஞானநிலை, குத்திரப்பா
மூனமனக் கற்பனைதீ ருண்மைநிலை யென்பரே. கரு

## 100. அறிவறிதல்

(குறள்)

1522. உணர்வாக வுள்ளத் துறைதலே தானவ்
வுணர்வை யுணர்வதென் றேர். க

1523. அறிவான தானவ் வறிவாலே யன்றிப்
பிறிதா லறியப் பெறான். உ

1524. அறிவறிந்தா ருண்மை யறிந்தார்; அறிவந்த
வுண்மையினும் வேறன் றுணர். ங

1525. அறிவறிந்தா ரெல்லா மறிந்தார்; அறிவை
யலாதில்லை யாது மறி. ச

1526. அறிவறிந்தா ருண்மை யறிந்தார்மற் றல்லா
ரறியார்மற் றென்னறிந்துந் தாம். ரு

1527. அறிவை யறியார்மற் றென்னறிந்தா லென்னவ்
வறிவறி யாமையே யாம். சு

## 101. அறிவு அல்லது ஞானம்

(குறள்)

1528. அறிவிற் பெரும்பதமொன் றில்லை யுலையா
வுறுதிபெற்று வாழ வுயிர்க்கு. க

1529. அருளா லடையு மனுபூதி ஞானப்
பொருளே விலையில் பொருள். உ

1530. அறிவுறுத் தன்மெய் யறிவன்றி யில்லை
பிழைபடாச் செல்வம் பிறிது. ௩

1531. சித்தமா மெய்ப்பொருளைத் தேரிலன்றி யில்லைவெறும்
புத்தகஞா னத்தாற் பொருள். ௪

1532. நூலறிவாற் றீராது நோதகவு சுத்தவருள்
வாலறிவு சேரா வழி. ௫

குறிப்பு:—நோதகவு - துன்பம்; பிறவித் துன்பம்.

1533. சுத்த சிவமே சொரூபமாந் துப்பறிவே
வித்தையென்பர் மித்தை பிற. சு

1534. நூலறிவு நொய்ம்மை; நுனித்த சொருபவருள்
வாலறிவே ஞான வளம். எ

1535. நயன்சேர்ந்த ஞானவொளி நண்ணலுற்ற ஞான்றே
பயன்சேர்ந்த தாகும் பிறப்பு. அ

1536. அறிவான தன்னை யறியப் பெறாது
பிறவே யறிதல் பிழை. ௯

1537. அறிவாக வுள்ள சிவத்தை அறிவிற்
பிறிதாக வுள்ளல் பிழை. ௧0

1538. அறிதலோ வன்றி மறத்தலோ வில்லா
வறிவே சொருப வறிவு. ௧௧

1539. மாசுறுவெம் பாச மயக்கமுனைப் பற்றொளிர்கை
தேசுறுமெய்ஞ் ஞானத் திறம். ௧௨

1540. மோனம் பரத்து முயங்கலே நானெனும்பா
மூனமற்ற வுண்மை யுணர்வு. ௧௩

1541. தன்னை யறியாத் தவற்றோ டியைந்தபிற
பின்னவறி வெல்லாம் பிழை. ௧௪

குறிப்பு:—தன்னை யறிதலின்றிப் பின்னை யெதறிகிலென்.
(ஆன்மவித்தைக் கீர்த்தனம்)

1542. நல்லறிவு தெள்ளிதா நண்ணிலன்றி யுள்ளத்திற்
புல்லறிவு போமா றிலை. ௧௫

குறிப்பு: - நல்லறிவு - உள்ளபொருளான ஆன்மவுணர்வு;
புல்லறிவு - நில்லாதனவான உடலுலகங்களை
நிலையின வென்றுணரும் மயக்க வறிவு.

1543. அறிவுதூய் தாக வலர்ச்சியுற்று லன்றி
மறிவதெங்ஙன் மாய மயக்கு. ௧௬

1544. அறியவொன் றில்லா வறிவேகாண், மோன
நிறைவான வுண்மை நிலை. ௧௭

1545. மாயமனக் கற்பனையை மாற்றினல் உள்ளுணர்வே
ஞேயமா நின்றொளிரும் காண். ௧௮

1546, வெற்றுணர்வா முண்மை விளங்கலுறின் மாய்ந்தொழியும்
மற்றுணர்வா மாய மனம். ௧௯

1547. முப்புடி ஞானம் முமுக்கற் பணையாகத்
தப்பவொளிர் வேதத் துவம். ௨0

1548. வெற்றறிவா முண்மை விளங்கலே மெய்ஞ்ஞானப்
பெற்றிமற் றல்ல பிற. உக

குறிப்பு :—வெற்றறிவா வுண்மை எனவும் பாடம்.

1549. வித்தகமெய்ஞ் ஞானம் விளங்கலுற்றுற் பேருமறப்
பொய்த்தொழியும் பாசப் புலம். உஉ

1550. கோபமில் சாந்த குணம்பெருகும் மெய்ஞ்ஞான
தீபவொளி சேர்ந்த மனத்து. உ௩

1551. தேறிய ஞானந் திளைத்த லகந்தைமுனைப்
பாறிய சிந்தை யகத்து. உச

1552. சுத்த சிவத்தே துவித மயக்கமறப்
பொய்த்தொழிகை ஞானப் புலன். உரு

1553. பிறவற்று மோகம் பிரம்மமாந் தன்மெய்
யறிவுத் தெளிவா லறும். உசு

1554. அறிவிற் படர்ந்த வலமரலாம் பேத
வுறவைத் துறத்தல் உணர்வு. உஎ

1555. மறப்புநினைப் பாக மயங்குமனப் பாசம்
அறப்புணர்வ தேமெய் யறிவு. உஅ

1556. இருட் பிழம்பை யெற்றி யிதயத் தெழுமவ்
வருட்பிழம்பே யுண்மை யறிவு. உகூ

குறிப்பு :—இருள் - அகிலத்தைக் கற்பிக்கும் அவித்யை; அருள் - அதனை யகற்றும் வித்யை. சகலமும் விழுங்குங் கதிரொளியின (ஸ்ரீ அருணாசல அக்ஷரமண மாலை); விரிகதிரால் யாவும் விழுங் கும் அருணகிரி பரமான்மா (ஸ்ரீ அருணாசல பஞ்சரத்னம்-1).

1557. சுத்த வுணர்வே சொரூபவாழ் வாகவொளிர்
மெய்த்தகவு; மித்தை பிற. ௩0

1558. மோனங் கிளர்சொருப முத்திப் பதவுணர்வே
ஞானமன்றி யல்ல பிற. ௧௧

1559. பேத மயக்கப் பிழைதீர் சொருபவருட்
போதமே மோனப் புலம். ௧௨

1560. சுத்த வறிவே துலங்கு சொருபவருட்
புத்தமுத வுண்மைப் புலம். ௧௩

1561. திரண்டொளிர் சுத்தத் தெரிவே பரமா
விரண்டற்ற வுண்மை யியல்பு. ௧௪

1562. சுத்தவறி வான சொருபமன்றி மற்றையறி
வத்தனையும் மித்தை யறி. ௧௫

1563. காணப் படுவ கழன்றொழியக் கண்டானு
மாணப் பிறங்குவது மாண்பு. ௧௬

குறிப்பு:—கண்டானு (கண்தானு) கண்மாத்திரமே தன் சொருபமாக.

1564. சுத்த வருள்வெளியாச் சூழ வொளிர்சொருப
சித்தியே ஞானத் திறன். ௧௭

1565. வெளியாக வுள்ளம் விளங்கலே உண்மை
யொளியான மோன வுணர்வு. ௧௮

1566. வானு வளங்குலவு வாழ்வே சொருபமெய்ஞ்
ஞானனு பூதி நலன். ௧௯

1567. நானற்ற மோனமெய்ஞ் ஞானமே சுத்தவருள்
வானமாப் பொங்கு வளம். ௨0

1568. கண்கலக்க மானமயற் காட்சியறத் தன்சொருப
விண்கலத்தல் வாலறிவின் மெய். ௨௧

1569. மாய மயக்கமனக் கற்பனைதீர் வாலறிவே
ஞேயமாந் தன்மெய்ந் நிலை. ௨௨

1570. அறிவான வுண்மையா வான்றமைந்த வாழ்வே
நிறைவாக வுள்ள நிலை. ௪௩

1571. அறிவா விளங்கு மமைதியே யான்ற
நிறைவான வுண்மை நிலை. ௪௪

1572. சித்தந் தெளியிற் சிறக்க விளங்குசிவ
தத்துவவாழ் வுண்மைச் சதிர். ௪௫

1573. மோனமாத் தங்கு முழுமுதற்சி ரொட்பநுட்ப
ஞானமே யுண்மை நலன். ௪௬

1574. ஆனந்த மோன வருள்வடிவாப் பொங்குசிவ
ஞானந்தா னுண்மை நலன். ௪௭

1575. மாலறவே மாய மனத்திலொளிர் சுத்தவருள்
வாலறிவே யுண்மை வளம். ௪௮
குறிப்பு—அறவே மாய - பொன்றக் கெட.

1576. ஊனமற்ற வானமா வோங்கும் பரசொருப
ஞானமே வெற்றி விறல். ௪௯

1577. சுத்த வறிவுத் துலக்கமா மோனமே
வித்தக வெற்றி விறல். ௫0

1578. தனுவாதி நோக்கமறத் தன்சொருப மோங்கல்
அனுபூதி மாட்சி யறிவு. ௫௧

1579. பதைப்பற்ற மோனப் பரவொளியே தானு
மதைப்பற்று முண்மை யறிவு. ௫௨

1580. அறிவறை போனற் பறிபோமான் மாவே;
அறிவறைபோ காமை யறிவு. ௫௩

1581. அறிவிலே தோற்றும்பல் லாரோப பேதம்
அறவகற்ற லுண்மை யறிவு. ௫௪

1582. செயலுக் கெழுவாயாஞ் சீவபோ தப்பொய்ம்
மயலற் றெழித் லறிவு. ருரு

1583. பரந்த மனக்கற் பனைசொப் பனப்பாழ்
கரந்தொழியக் காண்ட லறிவு. ருசு

குறிப்பு:—ஜாக்கிரமும் நீண்ட சொப்பனமே யாகலின் ஈண்டு சொப்பன மென்றது பொதுப்பட நினைப்பு வடிவான சகலாவஸ்தையை என்க.

1584. நட்டநடு வான நமச்சிவா யத்தைநமக்
குட்டெளிவா வோர்த லுணர்வு. ருஎ

1585. பிறிவறநிற் கின்ற பிரானெடுசேர் உண்மை
யுறவு மறவா வுணர்வு. ருஅ

1586. ஒன்றியமெய்ஞ் ஞான வுறவே பரபத்தி
யென்றசிவ யோக வியைபு. ருகூ

1587. நடப்பன வான *நடலைகளுக் கெல்லாம்
அடிப்படையா வுள்ள தறிவு. சு0

*நடலைகள் - உண்மை போலப் பாமரரை மயக்கும் மாயா விலாசங்கள்.

1588. இமைத்தலில் லாத வியல்வா லறிவே
சமத்தமுமாத் தோன்றுமொரு சத்து. சுக

1589. அறிவறியப் பெற்றூர்க் கறிபடுமெல் லாமவ்
வறிவன்றி யில்லை யறி. சுஉ

1590. அதுவேதா னாக வறிந்தோர்க் கறிவா
மதுதானே மற்றனைத்து மாம். சுஙு

1591. அயலொன் றிலாதசுத் தான்ம சொருப
வியல்வா லறிவே யெலாம். சுச

1592. அறிவான வுண்மையின்மற் றன்னியமொன் றில்லை
அறிவே யகிலமு மாம், சுரு

1593. எல்லா மவனுருமற் றெல்லா மவன்செயலென்
றல்லாப் பகல்வ தறிவு. ௬௯

1594. எல்லாம்பே ரின்ப விறைவடிவாக் காண்டலுற்ற
நல்லோ ரறிவே யறிவு. ௬௮

1595. தோற்று மெலாஞ்சிற் சொரூப மயமாகத்
தேற்றுமதே ஞானத் திறன். ௬௮

1596. சுத்த வறிவாத் துலங்குவோர் காண்குறுமவ்
வத்தனையு மோர்தன் மயம். ௬௯

1597. சுத்த வுணர்வே சொரூபமோ ரனுபவம்
முத்தி முகப்பு மது. ௭0

1598. தக்காங்கு ஞானந் தலைப்பட்டா லன்றியில்லை
மிக்கோங் குயர்சிறப்பாம் வீடு. ௭௧

1599. தன்னுளே தன்மெய் சதிர்த்தோரே தற்பரமா
மன்னுமியல் வாழ்வுமடுப் பார். ௭௨

1600. மோன விளக்கமே முத்தியாத் துன்றுசுப
ஞானமே யுண்மை நலன். ௭௩

1601. ஆன்ம சொரூப வறிவொளிதே ருமயல்வாழ்
வூனமே மன்ற வுயிர்க்கு. ௭௪

1602. சுத்தவறி வாகத் துலங்கல் பரமார்த்த
முத்தியென்பர் மூதுணர் வோர். ௭௫

1603. காலதே சாதி கரக்கவொளிர் வாலறிவின்
பாலதே முத்திப் பயன். ௭௬

1604. சுத்தத் துரிய சொரூபவருள் வாலறிவே
புத்தமுத போகப் புலம். ௭௭

1605. உள்ளத்து நீங்கா வுணர்வே உபசாந்த
வெள்ளப்பே ரின்ப விளைவு. எஅ

குறிப்பு: உள்ளத்தை எனவும் பாடம்.

1606. உண்மையுணர் வுள்ளத் துறுமளவுஞ் சேர்வரிதால்
உண்மையுப சாந்தி யுயிர்க்கு. எகூ

1607. நானென போத நமுவலே தன்சொருப
ஞானனு பூதி நடை. அ0

1608. மானபி மான மயக்கமறல் சுத்தசிவ
ஞானனு பூதி நலன். அக

1609. அறிவான வுண்மையே ஆன்றோராற் சற்றும்
மறவா வனுபூதி மாண்பு. அஉ

1610. சத்துவத்தைச் சித்துவத்தாற் சார்ந்து தரித்தலே
தத்துவஞா னத்தின் சதிர். அங

1611. சதோதயமா யாது தழைப்பதோ வுள்ளத்
ததேயகமாத் தேர்வ தறிவு. அச

1612. அறிவா விளங்குசுத் தான்ம சொருபக்
குறியேகாண் ஞானக் குறி. அரு

1613. அறிவே யலாமல் அதனிற் பிறிதா
வறிவதற்கு மற்றென் றிலே. அசு

1614. அறிவான தன்னே யலாதுமற் றொன்றை
யறியாது சுத்த வறிவு. அஎ

1615. அறிவது நானற் றமைதலாய்ச் சித்தஞ்
செறிவதுகாண் மோனத் திறத்து. அஅ

1616. அறிவுருவா வுண்மை யவிர்தலே சுத்த
வறிவுநிலே யான நிறைவு. அகூ

1617. அறிவு தெளிந்தா லருட்பரம்வே றில்லை;
நிறைவுறுமெய்ஞ் ஞேய நிலை. ௯0

1618. அறிவே பரமா வவிர்சொருப வுண்மை
நிறைவே முடிந்த நிலை. ௯௧

1619. மோனமே முற்ற முடிந்தநிலை யாவொளிர்மெய்ஞ்
ஞானமே சான்றோர் நலன். ௯௨

1620. அறிவான வுண்மையே யான்றோர்தம் பூஜைக்
குறியான மோனக் குலா. ௯௩

1621. வெற்றறி வாக விளங்குசிவ யோகமே
நற்றவமா வோர்வர்நல் லோர். ௯௪

1622. வாலறிவே யாக வழங்குருவர் பொய்ம்மறதிக்
கால பயங்கடந் தார். ௯௫

1623. உணர்வுதெளிந் தான்றமைந்த வொள்ளியர்பா லாய்ந்
தணவலுற வேண்டு *மறிவு. [தாய்ந் ௯௬

* அறிவு - உண்மையுணர்வு; தத்துவஞானம்.

1624. தன்னை யிழந்து தரித்தலே தன்மூலத்
தன்னியமில் லாமெய் யறிவு. ௯௭

1625. மற்றனைத்தும் மாய மனக்கற் பனைகளா
வற்றொழியக் காண்ட லறிவு. ௯௮

1626. மத்தவகங் கார மதிகுலைந்த சுத்தவறி
வத்துவித வுண்மை யறிவு. ௯௯

1627. ஒளிர்வன வெல்லா முடையான் சொருப
வொளிமயமாக் காண்ட லுணர்வு. ௧00

1628. போக்குவர வற்றபரி பூரணமே தன்னுருவாத்
தேக்குவது ஞானத் திறன். ௧0௧

(கொச்சகக் கலிப்பா)

1629. சித்தக் கலக்கச் செருக்கறவே தீர்வதனுற்
சுத்தப் பரமே சொருபமாத் தோய்ஞான
சித்திப் பரவசச்சீர் சிந்தனைமட் டேயான
பத்திப் பரவசம்போற் பற்றி யகல்வதன்றே. கூ0உ

1630. கொள்ளக் கடவதோ தள்ளக் கடவதோ
உள்ளந் தெளிந்த வுரஞானிக் கொன்றுமில்லை;
கள்ளவகங் காரக் கருத்துத் திருத்தமுறத்
தெள்ளத் தெளியீர் சிவோகமெய்ஞ் ஞானமே. கூ0உ

## 102. போதம்

(குறள்)

1631. போதம் பொருளாகப் போற்றிலுயிர்ப் பொச்சாப்பாங்
கேதமறு முள்ளங் கிளர்ந்து. க

1632. போதம் பொருளாகப் பொங்கலுற்ற வாழ்க்கையே
பாதசொரு பானு பவம். உ

1633. போதமே யன்றிப் புகலில்லை; சுத்தவருட்
போதமே யுண்மைப் பொருள். ௩

1634. போதமே யன்றிப் புகலில்லை போதமே
பாதமா வோதும் பரம். ௪

1635. பொலிவுற்ற சுத்தவருட் போதமே மோகக்
கலிசெற்ற வாண்டான் கழல். ரு

1636. பொங்குசிவ போதப் பொலிவின்முற் புற்கென்று
மங்கலுறுஞ் சீவ மதி. சு

1637. ஆன்றவருட் போதமே யான்ம சொருபநிஷ்டை
யூன்றவேர் பாய்ச்சு முளத்து. எ

1638. பொல்லாங் கிலாதவருட் போதம்போற் றக்கடவ
நல்லாங்கா முண்மை நலன். அ

1639. புத்திக்கு மூலமாப் பொங்குசற் போதமன்றி
மித்தையே சித்திமற்றெல் லாம். ௯

1640. புத்திக்கப் பாலாப் பொருந்துசற் போதமே
சித்திக்கை வல்யந் தெரி. ௧0

1641. காரணவு கற்பனைதீர் கைவல் லியவுணர்வே
சீரணவு தெய்வத் திறம். ௧௧

1642. சித்துவமே தத்துவமாத் தேர்ந்துவிளங் கொட்பமே
புத்தத் துவத்தின் புலன். ௧௨

1643. இதுவதுவென் றேது மெதுவுமற்ற மோனப்
பொதுவிளங்கல் போதப் புலம். ௧௩

1644. சுத்தவருட் போதந் துலங்கலுற் றோர் மத்தமனக்
கற்பனையிற் றுங்கலங் கார். ௧௪

## 103. இதயம்

(குறள்)

1645. எங்குமிருந் தாலும் இதயத் தறிகிலன்றி
எங்குமறி யொண்ணு னிறை. ௧

1646. உணர்வுருவா முண்மை யுளமும் பரமா
வணவு சொருபமுமொன் றும். ௨

1647. ஒளிவெளி யுள்ளமே ஒர்த்துணர்வார் தம்முட்
டெளிவா விளங்கு சிவம். ௩

1648. உண்மையொளி சேர்ந்த வுளமே பரசொருப
வண்மைசே ரின்பவியல் வாழ்வு. ௪

1649. செம்பரமே தன்னுருவாத் தேறவிளங் குள்ளமே
உம்பரார் காணு வுலகு. ௫

1650. இருப்பறிவா வோங்கவ் விதயமே யுண்மைக்
கருப்பறிய லூர்மெய்க் கதி. ௬

1651. இதயத் திதயமா வேய்ந்த விறையவ்
விதயத்தி லன்றியிலங் கான். ௭

1652. இயல்பாக வுள்ளா னிறையோன் அகந்தை
மயல்போ னவரறி வார். ௮

1653. * அணவலரி தூன வவிச்சைமற் றுண்மை
யுணர்வொளியே யான வுளத்து. ௯

* அணவலரிது – என்றுமே பொருந்த லில்லை.

1654. இலக்கமுற்று லன்றி யிதயத்தே மோகக்
கலக்கமறு தென் றுங் கருத்து. ௧0

1655. எங்குமிருந் தாலு மிதயத்தே யன்றிமற்
றெங்கிலுந்தான் காணப் படான். ௧௧

குறிப்பு:—தான் - ஏகான்ம சொருபமான இறைவன்; காணப்படுதல் - சாட்சாத்கரிக்கப்படுதல், அபரோட்சானுபவமாக அறியப்படுதல்.

1656. உள்ளதின்வே றன்று வொளிரவ் வுணர்வேமெய்
யுள்ளமென்பர் உண்மையுணர்ந் தோர். ௧௨

1657. ஒன்றுமுள் ளாத வுணர்வான வுள்ளமே
யன்றியில்லை மற்றோ ரரண். ௧௩

1658. உணர்வுரு வாக வுளதே யுளமாப்
புணர்வர் அருட்புல வோர். ௧௪

1659. உண்மை தெளிந்த வுணர்வான வுள்ளமே
வண்மைசே ரின்பவியல் வைப்பு. ௧௫

1660. யானென்னும் மோகமுனைப் பிற்றெழியப் பொங்கு
தானென்னு முள்ளத் தலம். [ணர்வே ௧௬

1661. உள்ளம் பரமா வொளிர்தலுறும், யானெனும்பொய்க்
கள்ளங் கழிந்தொழிந் தால். கள

1662. உலப்பிலா வுண்மை யுணர்வான வுள்ளம்
கலப்பில்பே ரின்பக் கடல். கஅ
குறிப்பு:—கலப்பில் - துன்பக் கலப்பில்லாத.

1663. யாங்குமோ ரீங்கா வியல்சொருபச் சிற்பரத்தில்
யாங்குமே யாங்கொன் றிலே. கசு
குறிப்பு:—ஆங்கொன்று - 'அங்கு' என்பதொன்று.

1664. எங்குமுக மான விறைவன் சொருபவருள்
பொங்குவது புந்திப் புலத்து. உ0

(கொச்சகக் கலிப்பா)

1665. ஓர்மைசே ருள்ளுணர்வா லுய்த்துணர்கிற் பாருக்கு
நீர்மைசேர் சாந்தி நிலயமாத் துன்றுவது
சீர்மைசே ருண்மைச் சிறப்பான சுத்தவருட்
கூர்மைசேர் மோனக் குலாவா மிதயமே. உக

1666. இப்போ திருக்குமிடம் யாதெனவுட் டேர்வுறிலோ
தப்பாத மிக்கபரந் தாமவியற் சார்பதுவே;
சற்போத மானசிவச் சால்பா மிதயமே
எப்போது முள்ள விருக்கை யெலார்க்குமே. உஉ

## 104. தவம்

(குறள்)

1667. தத்துவமெய்ஞ் ஞானந் தலைப்படச்செய் சாதனையே
மெய்த்தவமா மல்ல பிற. க

1668. தனுதறிவா முண்மை தலைப்பட்டு நிற்கிற்
றனுதியல்பு தானே தவம். உ
குறிப்பு:— "யானற் றியல்வது...." என்னும் உபதேச வுந்தியார் 30-வது செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

1669. பேதமனப் பான்மையறப் பேர்ந்தொழுகும் வாழ்க்கையே
சாதனமாச் சான்ற தவம். ௩

1670. நிலையாக நெஞ்சத்தே நின்றொளிரும் மோனம்
தலையாகச் சான்ற தவம். ௪

1671. ஜீவத் துவச்-சிச் செடக்கிரந்தி பேதிக்கத்
தேர்வித் தகஞ்செய் தவம். ௫

1672. *மூலத் தொடுங்கி முனைப்பழியக் காண்டலே
சாலச் சிறந்த தவம். ௬

*மூலம் - யானென்னு மகந்தை எழும்புமிடம்.

1673. தவத்திறல்யா தென்னின்மெய்த் தத்துவஞா னத்தால்
விவர்த்தமோ கத்தின் *விடல். ௭

*விடல் - விடுபடல்.

1674. காக்கக் கடவதகங் காரமுனைப் பற்றெதிலுந்
தாக்கற் றியலுந் தவம். ௮

1675. பின்னியமா மோகப் பிணைப்பாங் கிரந்தியறத்
தன்னியல்சோ திக்கை தவம். ௯

குறிப்பு: ஆன்மவிசாரமே பரமார்த்தமான தவம் என்பதாம்.

1676. எண்ணுமகப் பேய்நா னிறந்தவுழித் தன்னியல்பா
நண்ணுவதே ஞானத் தவம். ௧0

1677. பொங்குசிவ பூரணத்திற் புக்கொடுங்கித் தானதுவாத்
தங்குவதே ஞானத் தவம். ௧௧

1678. யானற்ற தன்மெய் யியல்விளக்கச் சீர்மையே
ஞானத் தவமெய்ந் நலன். ௧௨

1679. யானிதுவென் றெண்ண மெழாதிதயத் தோர்ந்
தானதுவா நிற்கை தவம். [தொடுங்கித் ௧௩

1680. சாட்சியே யாட்சிசெய்யுந் தன்மையாற் காண்கிற்பார்
சாட்சித் துவமே தவம். ௧௪

1681. நெஞ்சமே கோயிலா நீடும் பரனடியிற்
றஞ்சமுற லுண்மைத் தவம். ௧௫

1682. இருப்பளவே தன்மெய் யியல்பா வறிந்து
தரிப்பதே யுண்மைத் தவம். ௧௬

1683. முனைப்பற் றொழிய முயன்றுசா திக்கை
தனைப்பற்று முண்மைத் தவம். ௧௭

1684. நமோநமவென் றுள்ளத்து நானொடுங்க லுற்ற
சமாதியே யுண்மைத் தவம். ௧௮

1685. சிவமேவாழ் வாகத் தெளிதலுற்ற ஞானத்
தவமேகா ணுண்மைத் தவம். ௧௯

1686. பொய்த்தொழிய வாணவப்பாழ்ம் பூட்டைத் தகர்த்
வித்தகமே காண்மெய்த் தவம். [தெறியும் ௨0

1687. சிவத்திலே வாழ்வு செழித்தசுப மோனத்
தவத்தியலே யுண்மைச் சதிர். ௨௧

1688. சிவமாச் செழித்தவருட் சித்தே சொரூபத்
தவமாத் தழைத்த சதிர். ௨௨

1689. சித்தக் கலக்கமறத் தேறத் தெளிந்தவருட்
சத்தித் திறமே தவம். ௨௩

1690. சிவத்திலே சிந்தை செலுத்தலே உண்மைத்
தவத்தியலா வோரத் தகும். ௨௪

1691. சிவத்திலே தன்னுண்மை தேர்ந்தொடுங்கி நிற்கை
தவத்தியலின் மேலாந் தரம். ௨௫

1692. சிவத்திலே வாழ்வு திளைத்தலே யுண்மைத்
தவத்தினாற் சாரும் பயன். ௨௬

1693. சிவத்திலே வாழ்வு தெளிந்தோரே யுண்மைத்
தவத்தியல்சார் வுற்று ருளத்து. உஎ

( கொச்சகக் கலிப்பா )

1694. ஊனமனச் சேட்டை யொழிந்தாலே யன்றிமெய்ஞ்
ஞானவியற் காட்டை யொளிருமோ நன்னயஞ்சேர்
மோனமே கைவல்ய முத்திப்பே ரின்பவருள்
வானமா நோக்கிமன மாசறல்காண் மெய்த்தவமே. உஅ

1695. மெய்த்தவமா வென்னுள் விளங்குவது சுத்தவருள்
வித்தகமா முண்மை விறல்சான்ற மோனமே;
பொய்த்தொழிவா லூனமனப் பொல்லாங்கா(ம்) மோக
தத்துவமா முண்மைநிலே தான்றுணுத் தங்கியதே. [மறத்
உ௯

## 105. நோக்கு அல்லது திருஷ்டி

( குறள் )

1696. திட்டியிலே குற்றமன்றிச் சிட்டியிலே குற்றமின்றென்
றெட்டுவா ருண்மையுணர்ந் தோர். க

1697. அருட்கே வலமா யவிர்சொருப நோக்கில்
இருட்கே வலமே யிலே. உ

1698. அருட்பார்வை யன்றி யயற்பார்வை யெல்லாம்
மருட்பார்வை யாகும் மனத்து. ங

1699. ஊனவகப் பார்வை யொழிதலே சுத்தசிவ
ஞானவருட் பார்வை நலன். ச

குறிப்பு:—ஊன அகப்பார்வை - ஜீவதிருஷ்டி, ஜீவபோதம்

1700. மோனவருட் பார்வை முகந்தா லகந்துலங்கும்
வானவியற் கைவல்ய வாழ்வு. ரு

1701. பரமான தன்சொருபப் பார்வையே உண்மை
யுரமான மோன வுணர்வு. ௬

1702. பரமான மோனவருட் பார்வையே உண்மை
யுரமாக வூன்ற லுணர்வு. எ

1703. பாழைக் கடந்தவருட் பார்வையா லன்றியுயிர்
ஊழைக் கடத்த லரிது. அ

1704. பேதப் புலன்கள் பிரம்மமய மாவொளிர்சற்
போதவருட் பார்வை பொருள். கூ

1705. சுட்டற்ற சுத்த சொரூபவருட் பார்வையே
மட்டற்ற முற்றமுழு மாண்பு. க0

1706. பரமான மோனவருட் பார்வையே யுள்ளத்
துரமாக வூன்றற் குரித்து. கக

1707. சிவத்தன்மை கண்டு திளைக்கலுற்றார் நோக்கத்
தவத்தின்மை காண்ட லரிது. கஉ
குறிப்பு:—தின்மை - தீமை.

1708. கூர்ந்தசம நோக்கக் குறிப்பால் விளங்கும்அகந்
தேர்ந்தசான் றோர்மெய்த் திறம். கங

1709. நுணுக்கமா வுள்ளத்து நோக்கு புணர்வே
அணுக்கத்தொண் டாகு மரற்கு. கச

1710. உண்மை யொளியா வொளிர்சொருபக் கண்ணுக்கவ்
வுண்மையே யோரும் புலம். கரு

1711. நூனமற்ற வவ்வுண்மை நோக்கமே திட்பநுட்ப
மோனவனு பூதி முயக்கு. கசா

## 106. யோகம்

(குறள்)

1712. பிரிவென்ற தப்பெண்ணம் பேர்தலே யுண்மைத்
தெரிவொன்று சேர்க்கைத் திறம். க

1713. இறையைக் கெழுமு விழிவுடல்யா னென்னுங்
கறையைக் கழுவலே காண். உ

1714. உணர்வு சொருபந்தோ டொன்ற விதயத்
தணவலே யோக வடைவு. ௧

1715. ஊமைரத் துன்றுசிவ போகவுணர் வுள்ளத்திற்
றூனதுயாத் துன்றுஞ் சதிர், ௨

1716. என்றென்று முள்ள வியற்பரமாஞ் சிற்பதத்தா
டொன்றிலன்றி யுய்வின் றுயிர்க்கு. ௩

1717. உய்வுக் குறுதியா வுள்ளசிவ யோகவுணர்
வெய்வைக் கெடுப்பதோ ரெஃகு. ௪

குறிப்பு:—எய்வு - எட்ப்பு; எஃகு - படை.

## 107. கிரந்தி பேதம்

(குறள்)

1718 கிரந்திபே தத்தாற் கிளர்ந்தமனச் சீர்மை
நிரந்தரமா முத்தி நிலை. ௧

1719. உள்ளத்தை யூடறுத்தால் ஓமென் றெளிர்சொருப
வெள்ளட்பே ரின்ப வெளி. ௨

1720. சிறக்கத்தன் னெஞ்சந் திறத்தலே சுத்தத்
துறக்கந் திறப்பதோர் தாள். ௩

1721. இதய முடிச்சை யிறுத்தா ரடைவார்
நிதிய சொருப நிறைவு. ௪

1722. யானென்னுஞ் சிக்கட்டு டிற்றொழிந்தா லன்றிமற்
றூனந் தவிரா துயிர்க்கு ௫

1723. உறக்கவிழிப் பற்ற வுணர்வாக வுள்ளந்
திறக்கவெனபர் வீட்டுத் திறம். ௬

1724. மறப்புநினைப் பற்ற மனமே யுறக்க
விராப்பக லற்ற விடம். ௭

(கொச்சகக் கலிப்பா)

1725. அறிவொளியா வுள்ளசிற் றம்பலமே எங்கும்
பிறிவறநிற் கின்ற பிரம்ம சொரூபம்
கிறிவளர்பொய்ம் மாயக் கிரந்தியற்று லன்றி
நிறைவெளியா மவ்வுண்மை நேரவொண் ணாதே. அ

1726. மிறையான சிச்சடம்வெவ் வேறு வொழிவால்
அறிவான சுத்த வகல்வெளியே தானு
நிறைவே சொரூப நிலக்காணி யாட்சி.
பிறிவே யிலாத பிரம்மப் பதமே. சு

1727. உள்ளம் பரமா வொளிரிலன்றிச் சிச்சடப்பொய்க்
கள்ள வகந்தைமனக் கட்டற் றொழிதலில்லை
உள்ளு முசாத்திறத்தா லூடுருவிச் சிச்சடத்தை
விள்ளவிரு கூறாக வெட்டிலகஞ் சிற்பரமே. க0

1728. தன்னுருவு தற்பரமாச் சாரிலன்றித் தன்னியல்பாத்
துன்னியதா காது சொரூபமா மோனவுண்மை;
பின்னமுற வேண்டும் பிறிதாக மாயமாப்
பின்னியமா மோகவசப் பேய்முனைப்பாஞ் சிச்சடமே. கக

## 108. தன்மயம்

(குறள்)

1729. காண்பவைகள் காண்பானை யன்றி யிலாமையால்
மாண்புறவே யோர்தன் மயம். க

1730. யானுதி யாகமற் றெல்லாமே சுத்தவருள்
வானுன வோர்தன் ம்யம். உ

1731. மனந்தன் மயமா மடுத்தமெய்ஞ் ஞானத்
தனந்த சிவம்பொங் குறும். ந

## 109. கிருத கிருத்தியம்

(கொச்சகக் கலிப்பா)

1732. தன்னையலால் யாதுமிலாத் தற்பரமாஞ் சிற்பரமே
தன்னியல்பாக் கண்டு தரித்த சகச நிட்டர்க்
கென்னையுள தாற்ற! இயற்றுவதெல் லாமந்தத்
தன்னியல்பின் மாட்சி தலைப்படவல் லாலெதற்கே. க

குறிப்பு:—'மனவுரு மாய' எனவரும் உப்தேசவுந்தியா 15 ஆவது பாடல் ஈண்டு கருதற்பாலது.

## 110. பரமார்த்தம்

(குறள்)

1733. அரைமாத் திரையி லடங்குமென்பர் சுத்தப்
பரமார்த்த வுண்மைப் பதம். க

1734. ஒன்றே பரமார்த்த வுண்மை சொருபமாத்
துன்றுமது சுத்த வெளி. உ

1735. ஒன்றும் பரமார்த்த வுண்மை சொருபமா
நன்றேர்ந் தியல்வே நலன். ங

1736. யானே யெனதே யெனுமயக்கந் தீர்ந்தொழியிற்
றானே பரமார்த்த மாம். ச

1737. பரமார்த்த மானவருட் பார்வையே ஞான
குருமார்க்க மாமெய்க் குலா. ரு

1738. வண்மைசேர் சிற்கே வலமே பரமார்த்த
வுண்மை யியலென் றுணர். கூ

1739. மத்தக் களியர் மனத்தில் விளங்காது
சுத்தப் பரதத் துவம். எ

## 111. கைவல்யம்

(குறள்)

1740. தற்பரவாழ் வாகத் தழைத்தொளிர்மோ னனுபவம்
பொற்புறுகை வல்யப் புலம். க

1741. வெற்றறிவாத் துன்று வெறுங்கே வலவுண்மை
இற்றென் றுரைத்த லெவன். உ

1742. மற்றென் றிலாக்கே வலத்தை மடுத்தலுயிர்
மற்றவற்றை யெல்லா மறப்பு. ங

1743. கட்டற்ற சுத்தவருட் கைவல்பக் காட்சியே
மட்டற்ற வுண்மை மகிழ். ச

1744. தானான தன்மை தழைத்தலென்பர் சுத்தவருள்
வானான கைவல்ய வாழ்வு. ரு

1745. தன்னிலே தானாத் தழைத்தொளிர்தன் மாத்திரமா
மன்னலே கைவல்ய மாண்பு. சு

1746. கரும மயக்கங் கடந்தொளிர்கை வல்யம்
பரம சிவச்செம் பதம். எ

1747. கூடிக் கலந்தல் குலவுசற் போதசிவத்
தூடுயிர்க்க வொன்ற லுணர்வு. அ

1748. கலக்கமற்ற சுத்தவருட் கைவல்ய வுண்மைத்
துலக்கமே முத்தித் துணிபு. கூ

1749. விளங்கு சொரூப வெளியிற் சரிப்பர்
களங்கமில் கைவல் லியர். க0

குறிப்பு:—சரிப்போர் என்றும் பாடம்.

(கொச்சகக் கலிப்பா)

1750. கைவந்த வுண்மை கழலுமோ; கைவல்யங்
கைவந்த தாமோ கழன்றுலவ் வுண்மைநிலே;
கைவந்த தென்னல்எக் காலுமுள்ள தன்னியல்பாக்
கைவல்ய மோனங் கழன்றொழியா மாட்சியன்றே. கக

1751. தெய்வந் தெளிந்தவருட் சித்தத்தில் யானென்னும்
போய்வந்த மோகப் புணர்ப்பா மகந்தையற
மெய்வந்த ஞான விபூதியாந் தன்சொருபக்
கைவல்ய மோனங் கலந்து விளங்குமே. கஉ

1752. கடிந்துமுக் குற்றங் களையுங் கழன்றோர்
தொடர்ந்து சொருபமாத் தோய்கின்ற வுண்மை
மடந்கருபொய்ம் மாறுபி மான மனத்தைக்
கடந்து விளங்குமியற் கைவல்ய மாண்பே. கங

1753. காணப் படுவதன்று காணப் படாததன்று
காணப் படுமெனிலக் காட்சிமனக் கற்பனையாம்
காணப் படாசேற் கதிசுத்த சூனியமாம்
மாணப் பெரும்பதமா மன்னுசிவக் கேவலமே. கச

## 112. முத்தி

(குறள்)

1754. அறிவான வாண்டா னருட்பதத்திற் சற்றும்
பிறியாமை பேரின்ப வீடு. க

1755. ஓரியலா வுள்ள வுடையான் சொருபவருட்
சீரியலே முத்திச் சிறப்பு. உ

1756. தருமார்த்த காமமறத் தற்பரன்பால் வீடல்
பரமார்த்த மோட்சப் பயன். ங

1757. தெளிந்தமெய்ஞ் ஞானத் திறத்தா லுளத்தில்
விளைந்தவுப சாந்தியே வீடு. ச

1758. மோனவருள் வாழ்வான முத்திப்பே ரின்பநிலை
யானெனது மாண்ட வியல். ரு

1759. அகந்தையுரு மாய்ந்த வகவறிவே யான்றோர்
முகந்தபர முத்தி யுரு. சு

குறிப்பு:—அகவறிவு – அகமாமறிவு, அகமுருவமான அறிவு.

1760. அகந்தையற்ற சுத்த வறிவே பரமா-
வகந்தெளியின் முத்தி யது. ௭

1761. அகந்தை மனக்கட் டறலே சொரூப
முகந்துலங்கு முத்தி முகப்பு. ௮

1762. வஞ்சவே தாள வறும்பா ழகந்தைமனந்
துஞ்சலே முத்தித் துணிபு. ௯

1763. நானற்று நிற்றலே ஞான வருட்பரமா
மோனத் துருமுத்தி யாம். ௧0

1764. மோனத்தா லன்றி முகப்பரிய முத்திநிலை
யானெனதற் றுள்ள வியல்பு. ௧௧

1765. சித்துவமெய்த் தத்துவமாச் செத்தொழிந்த சித்தமே
முத்தியென்பர் மூதுணர்ந் தோர். ௧௨

1766. செத்த மனமே சிவலோக வுண்மையெனிற்
செத்தமனம் முத்தித் திறம். ௧௩

1767. யார்துந்தோன் ஞத் வியற்சிற் பரவெளியின்
போதமே முத்திப் புலம். ௧௪

1768. கற்பனு பந்தமறக் காண்டலே சுத்தவருட்
சிற்பரமா முத்தித் திறம். ௧௫

1769. வீடுபே றுணவங்கூர் வேகத்தால் விட்சேபத்
தூடுபே ராமெய் யுணர்வு. ௧௬

1770. பிறப்பற்ற முத்தி பிரமாத மோக
மறப்பெற்ற வுண்மை யறிவு. ௧௭

1771. ஆககமே போல வகத்திலெழும் பற்றிரண்டின்
நீக்கமே முக்தி நெறி ௧௮

1772. அறிவான வுண்மையா வான்ற சொருப
நிறைவுணர்வே முத்தி நிலை. ௧௯

1773. அறிவொளியா வுள்ளத் தவிர்சொருப வுண்மை
நிறையுணர்வே முத்தி நிலை. உ0

1774. அறிவே சொருபமா வாழ்ந்தறிந்து மோனஞ்
செறிவதே முத்திச் சிறப்பு. உக

1775. உளத்தே தெளிவா வொளிர்சொருப மோனந்
திளைத்தலே முத்திச் சிறப்பு. உஉ

1776. அறிவூ டுருவியகத் தாழ்தலாய்த் தன்னுட்
செறிவதே முத்தித் திறம். உ௩

1777. சிற்பரவாழ் வாகத் தெளிந்தமோ னனுபவத்
துப்புரவே முத்திச் சுகம். உ௪

1778. சுபமாத் துலங்குசொரு பானுபவ மோன
விபவமே மிக்கபர வீடு. உ௫

1779. நினைப்புமறப் புக்கோர் நிலயமாத் துன்று
முனைப்பிறப்பு முத்தி முடிவு. உ௬

1780. ஆக்கக்கே டற்ற வருட்சிற் பரவெளியே
மோக்கமென்ப தான்றோர் முடிவு. உஎ

1781. சுத்த வருள்வெளியாத் துன்றுதன் னுண்மையே
நித்தமுத்தி யான நிலை. உஅ

1782. சுத்தவறி வான சொருபானு பூதிநடை
நித்தமுத்தி யான நிலை. உ௯

குறிப்பு:— நடை – நிரந்தர நிகழ்ச்சி.

1783. சுத்தவித்தை யான சொருபவருட் போதமே
முத்திவித்தை; அல்ல பிற. ௩0

1784. உடனின்று வேறு வுயிர்க்கு முணர்வே
திடமுறுஜீ வன்முத்திச் சீர். ௩௧

1785. வெளியா விளங்கு விசுத்த சொருப
வொளியேகாண் முத்தி யுலகு. ௩௨

1786. கண்ணு விளங்குசுபக் கைவல் யியசொருப
விண்ணுடு மெய்ஞ்ஞான வீடு. ௩௩

(கொச்சகக் கலிப்பா)

1787. இதுவதுவென் றிச்சிக்க யாதுமங் கில்லாப்
பொதுவான சுத்தவருட் பூரணன்பாற் பொங்கும்
மதுவா முபசாந்த வாழ்வே மனத்தாற்
கதுவ வொண்ணுவிற் கைவல்ய வீடே. ௩௪

## 113. சாந்தி

(குறள்)

1788. அகமே பொருளா வறிந்தமெய்ஞ் ஞானச்
சுகமே பரம சுகம். ௧

1789. பொக்க வகந்தையறப் பொங்கு சொருபத்திற்
சொக்கலுற் றுலே சுகம். ௨

1790. உதாரமா மோனவுணர் வூற்றுன சுத்த
சுதாரசமே சாந்தி சுகம். ௩

1791. அறிவில் விளங்கு மமைதித் தெளிவே
குறைவில்பே ரின்பக் குலா. ௪

1792. உணர்வா வொளிர்சொருப வுண்மைப் பிராணைப்
புணர்வேபே ரின்பப் பொலிவு. ௫

1793. அறிவிற் பிறந்த வமைதியே உண்மை
நிறைவாம்பே ரின்ப நிலை. ௬

1794. உறைந்திடலே யுள்ளத் தொளியளர்மோ னத்தால்
நிறைந்திடுபே ரின்ப நிலை.

1795. அறிவொளியா வுள்ளத் தவிர்சொருப மாண்பே
நிறைவுறுபே ரின்ப நிதி. ௮

1796. உண்மை யுணர்வா லொளிர்சொருப சாந்தியே
வண்மைசே ரின்பவியல் வைப்பு. ௯

1797. தெரிவளவா வுள்ளத்துத் தேறவிளங் குண்மைப்
பரவெளியே ரின்பப் பதம். ௧0

1798. வெளியாக வுண்மை விளங்கலே யுள்ளத்
தொளிசே ருபசாந்தி போர். ௧௧

1799. சொந்த சொரூபத் துலக்கமே மன்னுயிருக்
கந்தமில்பே ரின்ப வடைவு. ௧௨

1800. போத சொரூபம் புணர்வதா லன்றிமனக்
கேதமகல் சாந்தி யரிது. ௧௩

1801. தொந்தமில் சொந்த சொரூபவுணர் வாலன்றி
அந்தமில்பே ரின்ப மரிது. ௧௪

1802. என்றுமோன் றான விறைவனருள் வாலறிவா
மன்றவொளிர் வாழ்வே மகிழ். ௧௫

1803. மோதந் துலங்கிலன்றி மோனத்தே மோகமனக்
கேதங் கெடுமா றிலே. ௧௬

1804. போகம் பலவாப் புலப்படினும் சாந்தியவற்
றேகரச மாகு மியைந்து. ௧௭

1805. சலந்தவிர்சாந் தானுபவந் தானே யுயிர்க்கு
நலந்தருமெய்ஞ் ஞானத் திரு. ௧௮

1806. வேகந் தணிந்து விளைந்தசாந் தானுபவ
போகமே போதப் பயன். ௧௯

1807. மெய்கண்டார் வாழ்வில் விளங்குசொரு பானந்தம்
பொய்கண்டார் காணாப் பொருள். ௨0

குறிப்பு:—சொருபானந்தம் – விசுத்தமாக விளங்கும் உபசாந்த வுணர்வு ; பொய்கண்டார் – புலத்தோற்றமானவுலகை உண்மைப் பொருள் போல மயங்கும் உலோகாயத வுணர்வோர்.

1808. உண்மை யுணர்ந்தோ ருளத்தே ரமித்தலன்றி
* விண்மையை வேறும்பி ரார். உக

* விண்மை – ஆகாய நீலம்; அதுபோலச் சிற்பரத்திற் கற்பிதமான உலகத் தோற்றத்துக் குவம வாகு பெயர்.

1809. அறிவான வுண்மையா வான்ற சொருப
நிறைவுணர்வே சாந்தி நிலை. உஉ

1810. ஆதரஞ்சேர் சுத்தஞா னான்மசொரு பானுபவ
மேதகவே சாந்தி விளைவு. உங

1811. ஆன்ம சொருபஞா னனுபவ சாந்தியே
தான்மருவ வேண்டுந் தகைத்து. உச

1812. சிவத்திலே சித்தந் திளைத்தலே துன்று
சுவத்தமார் சாந்தி சுகம். உரு

1813. சிவத்திலே சித்தந் திளைப்பான சாந்தி
தவத்தினாற் சாரும் பயன். உசு

1814. உளந்ததும்பு மோன வுணர்வான சாந்தி
தெளிந்தவனு பூதித் திறம். உஎ

1815. அழுத்தமா வான்றசொரு பானுபவ சாந்தி
பழுத்தமெய்ஞ் ஞானப் பயன். உஅ

1816. சாதனைதீர் சாந்தியே சற்குருகூர் மோனவருட்
போதனைதேர் போதப் பொருள். உகூ

1817. மோனமே முற்றுணர்வா மூண்டவருட் கைவல்யத்
தானமே சாந்தித் தலம். ௩0

1818. முனைத்தலற்ற மோனமே, * முத்திமுடி வாகத்
தனித்தலுற்ற சாந்திப் பதம். ௩க

* முத்திமுடிவு – முடிவான முத்தி.

1819. பாரவருட் கைவல்யப் பண்பான சாந்திநிலை
சாரல்வாழ் வின்குறிக்கோட் சால்பு. ௩உ

1820. உணக்கலில் லாத வுபசாந்த நீர்மை
தணக்கலரு தன்மெய் யியல். ௩௩

1821. உள்ளந் தெளிந்தவுணர் வொட்பமார் சாந்தியால்
உள்ளம் பரலோக மாம். ௩௪

1822. தொந்தமற்ற வுண்மைத் துலக்கமார் சாந்தியே
பந்தமற்ற வுண்மைப் பரம். ௩௫

1823. உண்மைவீ டாக வுளங்கிளர்தல் சிற்பரமெய்த்
திண்மைசேர் சாந்தித் திறம், ௩௬

1824. விளிந்த மனத்தியல்பா விஞ்சவொளிர் சாந்தி
தெளிந்தவியல் வாழ்க்கைச் சிறப்பு. ௩௭

1825. அறிவுதெளிந் தான்றமைந்தார்க் கவ்வறிவின் மோனச்
செறிவுதரு * சாந்தி சிவம். ௩௮

* சால்பே சிவம் எனவும் பாடம்.

(கொச்சகக் கலிப்பா)

1826. சுத்தப் பரசிவமாத் துன்று சொருபவியல்
வித்தைத் தெளிவா விளங்கு முபசாந்தி
சித்தக் கலக்கச் செருக்கறச்செத் தாரன்றி
மற்றைப் பிறர்திளைக்க மாட்டாத மாட்சித்தே. ௩௯

1827. இரம்மிய மாக விதயத் தியல்பாப்
பிரம்ம சொரூபம் பிறங்கலுற் றுருக்
கரம்மிய மென்றென் றகிலத்து மில்லை;
பிரம்ம சொரூபசுகம் பேத மிலதே. ௪0

குறிப்பு:—பிரம்மசுகம் அத்துவிதமான அந்தப் பிரம்மத்தின் சொரூபமேயாதலால், வியாவகாரிகமான விஷய சுகம் போன்று, ஸஜாதி விஜாதியென்னும் இருவகைப் பேதமும் எட்டுணையும் இலது என்பதாம்.

1828. மூலப் பரமான முற்ற முழுத் தன்மையுணர்
வேலப் பொருந்தினே ரின்பமே யின்பமன்றிச்
சாலப் பரந்தகன்ற சாப்ராச் சியம்படைத்தோ
ரேலநுகர் வின்பம்போற் றேன்றினுந் துன்பமே. ௪௪

குறிப்பு :—தோன்றல் புறநோக்கல்

## 114. அருள் வாழ்வு

( குறள் )

1829. ஒன்றுபட்ட வுள்ளத் தொளிர்சொருப வாழ்வுயிர்க்குத்
தோன்றுதொட் டுள்ள வியல்பு. ௧

1830. எண்ணமற்ற மோன விதய வுணர்வொளியா
நண்ணலுற்ற வாழ்வே நலன். ௨

1831. மோனவெளி யாக முயங்கு சொருபசுப
ஞானவியல் வாழ்வே நலன். ௩

1832. எங்குங் கலந்த வியற்சிற் பரசொருபத்
தங்கவருள் வாழ்வே சுபம். ௪

1833. தொக்கபர மார்த்தத் துரீயவருட் கேவலத்திற்
சொக்கலுற்ற வாழ்வே சுபம். ௫

1834. நோக்கமற நோக்கு நுனிப்பான மோனவியற்
சூக்கமார் வாழ்வே சுகம். ௬

1835. மோனத்தா லன்றி முகக்க வொணுதவருள்
வானத்தே யுள்ளதுண்மை வாழ்வு. ௭

1836. உண்மையிய லிதென் றுளத்துணர்மோ னனுபவ
வண்மையே சுத்தவருள் வாழ்வு. ௮

1837. மாலா மகந்தையற்ற வாலறிவா முண்மையே
வாலாய மாவொளிர்மெய் வாழ்வு. ௯

183. [illegible]ளவருட் சைதன் னியசொருப
தற்பரமெய் வாழ்வு. க0

1839. தன்னந் தனிப்பரமெய்த் தத்துவமாத் தன்சொருப
வன்னந் துலங்கலருள் வாழ்வு. கக

1840. உயிர்க்குயிரா வுள்ளத் தொளிர்தன் சொருபத்
துயிர்த்தலே மெய்வாழ் வுயிர்க்கு. கஉ

1841. காணற் கரியவருட் கைவல் லியவுணர்வே
மாணத் தெளிந்தமைந்த வாழ்வு. கங

1842. தானே பரமார்த்தத் தத்துவமாத் தானொளிர்வே
வானன கைவல்ய வாழ்வு. கச

1843. சுத்தவருட் கேவலமாத் தொக்கமனச் சீர்மையே
புத்தமுத வாழ்க்கைப் பொலிவு. கரு

1844. உண்மைதா னுன வுணர்வே பரமார்த்த
வண்மைசேர் வாழ்வின் வடிவு. கசு

1845. உண்மை குறிக்கொண் டொழுகுமனத் திண்மைசேர்
வண்மையால் வாழ்வது வாழ்வு. கஎ

1846. உண்மைநிலை யுள்ளத்தே போர்த்துறைக்கிற் கைவல்ய
வண்மையே யாவியலும் வாழ்வு. கஅ

1847. அந்த மிலாத வருட்சிற் பரவாழ்வு
சொந்தசொரூ பானு டவம். ககூ

1848. மோனவருள் வாழ்க்கையே முத்தி யனுபவமாய்
ஞானவுரன் மாட்சி பெறும். உ0

1849. பசையற்ற வாழ்வே பரமபத மாக
வசைவற்ற சாந்திப் பதம். உக

1850. தூயபர வாழ்க்கைத் துலக்கமகத் துண்டாயின்
மாயவகப் பேய்மாய் வுறும். உஉ

1851. மாணப் படைத்தவருள் வாலறிவால் யானெனும்பா
சாணவப்பா முற்றெழிந் தேன். உஉ

1852. ஆணவப்பே யற்றெழிவா லார்ந்தமோ னனுபவம்
மாணவுயர் கைவல்ய வாழ்வு. உ௩

## 115. பெரியார் சிறியார்

(குறள்)

1853. ஒடுங்குவா ருள்ளத் துரவோர்; ஒடுங்குந்
திறமிலார் கொந்தளிப் பார். க

1854. அன்னியங்கண் டஞ்சுவா ராணவத்தார்; அத்துவிதத்
தன்னியல்பார்ப் பார்தற் பரர். உ

1855. பல்லோ ருளரெனினும் பாமரர்,மெய்ப் பண்டிதரோ
சில்லோ ரினுந்தாஞ் சிலர். ௩

குறிப்பு:—மெய்ப்பண்டிதர் - உண்மை யுணர்ந்த ஞானிகள்.

1856. அறிவறிந்தா ருண்மை யறிந்தா ரதனிற்
பிறவறிந்தார் பேதுபட் டார். ௪

1857. உணர்ந்தோர்தம் முண்மை யுணர்ந்தோர்; மயக்கம்
புணர்ந்தோர் புலங்காண் பவர். ௫

1758. சிவத்திலே வாழ்வார் செறிந்தார்மற் றல்லா
ரவத்திலே யாழ்ந்தழுங்கு வார். ௬

1859. அருளடைவுற் றேரே யருளருமை தேர்வர்;
மருளரெவ் வாறுதேர் வார். ௭

(கொச்சகக் கலிப்பா)

1860. வித்தகரா வுள்ளபர மெய்யராற் கூர்த்தபரி
சுத்தவருட் பார்வைத் துலக்கமுறக் காணிலன்றிப்
புத்தகஞா னத்தாற் புலம்பும் புலவராற்
றுய்த்திடவொண் ணாது சொரூபானு பூதியே. ௮

குறிப்பு:—மெய்யர் என்பது அன்னார் அருளுக்கும்; புலவர் என்பது அன்னார் போதனைக்கும் ஆகுபெயர்.

1861. வெளியாக வுள்ள விசுத்த சொருப
வொளியா விளங்குவோ ருண்மை யுணர்ந்தோர்
தெளிவாம் பரமார்த்த சித்தரா மன்னோர்க்
கெளியராம் பாமரர்மற் றெத்திறத் தாரே. ௯

1862. வெற்றறிவா வுண்மை விளங்கு சொருபவியல்
கற்றவரே கைவல்யங் கண்டறிந்தார் பேதங்காண்
மற்றவரோ மாயா விலாசமாங் கற்பனையைப்
பற்றிவிடா வாற்றாற் பசுக்களின்வே றல்லரே. ௰

1863. ஒன்றான வுண்மையே தம்முருவா வுள்ளத்து
நன்று வறிந்தமெய்ஞ் ஞானா பூதியோர்
வென்றே யகிலமுந்தம் மெய்ஞ்ஞான வெற்றியால்
அன்றே யடைந்தா ரருட்பரசாம் ராச்சியமே. ௧௧

1864. தன்னை யறிந்துளத்துத் தான்றானா நிற்கலுற்றோர்
பின்னியபொய்ம் மாயப் பிணக்கறக்காண் கிற்பரல்லாற்
[illegible]ன்னியபொய்ம் மாயமனக் குதான சொப்பனத்தூ
டென்னதுநா னென்றே யிறக்கலுற்றார் மற்றோரே. ௧௨

1865. இருப்புணர்வு மாத்திரமா வேய்ந்த சொருபப்
புரிப்புணர்வால் வாழும் புலவோரே வாழ்வோர்
மரிப்புயிர்ப்பாத் துன்று மறப்புநினைப் பாலே
கருப்படர்வாழ் வூடு கலங்குநர்செத் தோரே. ௧௩

1866. அயல்கற் றுலகி லலமரார் தாந்தம்
மியல்கற் றிதயத் தினிதிருப்பர் நல்லோர்;
மயல்சே ரகந்தை மனத்தால் அடியே
னுயல்சற்று மெண்ணா துலகிலுழன் றேனே. ௧௪

1867. அருட்சிற் பரத்தை யகங்கொண்டோர் சற்று
மிருட்சற் பனையி லிடர்ப்படார்; மற்றோர்
மருட்சிப் படர்சேர் மனக்கற் பனையில்
வெருட்சியுற் றுழந்து விதனஞ்சேர் வாரே. ௧௫

1868. பொன்று மிறைவன்சற் போதவருட் பொன்னடிக்கீ
ழொன்றலுற்றோ ருண்மை யுறுதிபெற்றோர்; மற்றோரோ
வன்றுநின் றைப்புலத்திற் கானற் புனல்பருகிச்
சென்றலுத்தே பாழ்ஞ்சுரத்திற் சிந்தைதவிக் கின்றோரே. கள

1869. எல்லாமா வுள்ளதோ ரின்பவருட் செம்பொருளை
நல்லா ரறிந்துபெய்ஞ் ஞானு பூதியுறப்
பொல்லா ருடலுலகப் புன்புலப்பா ழாசையால்
அல்லாப் புறுவரவர் கன்மானு சாரமே. கஎ

1870. ஜீவபோ தத்தாற் செருக்கிநா னென்னதென்போர்
ஆவவழி கின்று ரவலக் கடலகழ்தே;
தேவதே வானசிவச் செப்பிரான் போதவருட்
பாவவாழ் வுற்றோர் டரிவர்பற் றற்றோரே. கஅ

1871. உடையா னுளத்தோ டொருப்பட் டொழுகும்
நடையிலே நல்லவர் நன்மகிழ் கூரக்
கடையோர் கடைவரை தங்கள் கருத்தே
நடைபெற வேண்டி நலிவுறு வாரே. கக

1872. வெளிப்புலன்க ளுக்கே வியாமோக முற்றோர்
ஒளிப்புலற வுள்ளத் தொளிர்சொருபந் தேறார்;
களிப்புறுவெம் பாசமனக் கூற்றனையை மாற்றி
யுளப்பிலத்து நாடி யுணர்வரொள்ளி யோரே. உ0

1873. களியார்ந்த மோகக் கசட்டுச் செருக்கர்
இளியார்ந்த பாழினின் றென்றென்று முய்யார்;
அளியார்ந்த வாண்டா னருளொளசேர் பாதத்
தெளிவார்ந்த சிந்தையோர் சேரார் செருக்கே. உக

1874. வெள்ளமா மின்ப விசுத்தசிவத் தன்மையைவிட்
டெள்ளியோர் யானெனதென் றேங்கி யிரங்குவோர்;
தெள்ளிதாத் தம்முட் சிவபோக சாந்தியுற்றோர்
ஒள்ளிதாத் தன்னையுளத் தோர்த்தறிந்த தெள்ளியரே. உஉ

1875. அறிவை யறிந்தோர் அருட்செம் பதத்திற்
செறிவான மோனந் திளைப்பர் முனைப்பாற்
பொறிவாய் நழுவிப் புலமே யறியும்
வெறியோர் மலத்தில் விளியலுற் றூரே. உ௩

## 116. ஞானிகள்

(குறள்)

1876. அருட்பரந்தா னாக வவிர்சொருப வாழ்வில்
விருப்புறுவோர் மிக்க சிலர். க

1877. உள்ளக் கருவா வொளிர்சொருப தேவதையைத்
தெள்ளத் தெளிந்தோர் சிலர். உ

1878. போதமா நிற்குமனப் பொற்புற்ற புண்ணியர்தம்
மேதகவே மிக்க தகவு. ௩

1879. உண்மை சொரூபமா வோர்த்துணர்ந்தோர் கைவல்ய
வண்மையே ஜீவியமா வார். ௪

1880. உண்மை நலனாக வுள்ளத் தொளிர்சொருப
வண்மையுற்றார் வாழ்வுபடைத் தார். ரு

1881. வாழ்வுதாழ் வற்றவருள் வாழ்வாந்தற் பூரணத்திற்
றாழ்வறியார் உண்மைசதிர்த் தார். சா

1882. அமுதவாழ் வார்வர் அறிவுதெளிந் தான்ற
வமைதிசே ருள்ளத் தவர். எ

1883. உலகைக் கடந்ததோ ருண்மை தெளிவார்க்
கலகில்சச் சிற்கே வலம். அ

குறிப்பு :—உண்மை சிற்கேவலமாம் என்பது கருத்து.

1884. உள்ளத்தே தன்னையுணர்ந் தொன்றினோர் பேரின்ப
வெள்ளத்தார் வீடுபெற் றார். கூ

1885. இன்பதுன்ப மற்ற வியல்பான சுத்தவுணர்
வின்பமாத் துய்ப்பருணர்ந் தோர். க0

1886. கற்பனு மோகக் கலக்கமற்ற வுள்ளத்தோர்
சிற்பரா னந்தர் தெரி. கக

1887. ஞானந் தெளிந்த நடையோர் அகங்கார
வூனந் தவிர்ந்தொழுகு வோர். கஉ

1888. அறிவிற் பிழைபட் டழுங்கார் உடல்பொய்
யுறவா வகன்றுநின் றோர். கங

1889. தொல்லகண்ட மான சொருபவருட் சிந்தையோர்
அல்லகண்டஞ் சேரா ரகத்து. கச

1890. வாழ்விற் கலந்தவருள் வண்மைசே ருண்மையோர்
* பாழ்வலேயிற் சற்றும் படார். கரு
* பாழ்வலே — மயக்க வடிவான சமுசாரம்.

1891. * கண்மாயங் கண்டு கலங்கார் பரமார்த்த
வுண்மையில்வாழ் மெய்யுணர் வோர். கசு
* கண்மாயம் என்றது மாயா விலாசமான உலகத் தோற்றத்தை.

1892. ஒய்ந்தொடுங்கி யுள்ளத் துணர்வோ டுறங்குவோர்
பாய்ந்தெழுவே கந்தீர்ந் தவர். கஎ

1893. கற்பனையைக் கண்டு கலக்கமுறுர் கைவல்யச்
சிற்பரமா முண்மைதெளிந் தோர். கஅ

1894. மருட்கற் பனையின் மகிழார் சொருப
வருட்சிற் பரந்தேர்ந் தவர். ககூ

1895. அறியவொன் றில்லா வருட்கே வலமெய்ந்
நிறைவேமெய்ஞ் ஞானி நிலே. உ0

1896. அறிவாகச் சும்மா வமைந்தோர் மனமே
நிறைவான வுண்மை நிலே. உக

1897. அறிவு தெளிந்தமைந்தா ரார்வர் சொருப
நிறைவெளியா முண்மை நிலை. ௨௨

1898. கற்றுத் தெளிந்தவருட் காட்சியோர் அன்னியத்தைப்
பற்றிப் பதற்ற முறுர். ௨௩

1899. கற்பனையூ டேகண் கலங்கார் சிவசொருபச்
சிற்பரமே தேர்கிற் பவர். ௨௪

1900. இயற்சிற் பரமா விதயந் தெளிந்தோர்
மயற்கற் பனையின் மடார். ௨௫

1901. கற்பனையி னின்று கழன்றோங்கு கைவல்யத்
தற்பரர்தஞ் சால்பு தலை. ௨௬

1902. கடுப்பிலா வந்தண் கருத்தர் கலங்கி
யிடர்ப்படார் ஏமுறு வார். ௨௭

1903. ஓர்துக்கங் காணு ருளத்தேசற் சாதுக்க
ளாகச் சரிக்கலுற் றூர். ௨௮

1904. ஒருமை யுணர்வா லுளந்தெளிந்தோர் பேதத்
தெருமரலின் மாழ்க லிலர். ௨௯

1905. உள்ளந் தெளிந்த வுணர்வோரே சுத்தவருள்
வெள்ளந் திளைக்கிற் பவர். ௩0

1906. கற்பனு மாயமனக் காட்சிகளைத் தற்றேர்ந்த
விற்பனர்மெய் யாமயங் கார். ௩௧

1907. கற்பனையைக் கண்டு கலங்கார் சொருபவருள்
விற்பனமெய்க் கண்ணுடை யோர். ௩௨

1908. காணுங்கண் ணேதம்மாற் காணக் கடவதாக்
காணுவார் கற்றறிந் தோர். ௩௩

1909. இடம்படயா தோன்றுமனத் தெண்ணூர் உடம்பின்
பிறப்பறுக்க லுற்றபெரி யோர். ௩௪

1910. உள்ளமா வுள்ள துணர்ந்தார்க் கனுபூதி
வெள்ளமாம் போத வெளி. ௧௫

1911. பார்ப்பான் சொரூபம் பரசொருப மாகத்தன்
ஞேர்ப்பா லுணர்வோன் புதன். ௧௬

1912. அகிலங் களையுமே கான்மாவாந் தானு
விகலமறத் தேர்வோன் புதன். ௧௭

1913. சிற்பர மானசிவச் செம்பொன் மயமாகப்
பொற்பவுல கோர்வான் புதன். ௧௮

1914. கற்பனையிற் சிந்தை கலங்கான்கை வல்லியத்திற்
பொற்பவியல் கின்ற புதன். ௧௯

1915. சுத்தவுணர் வாகத் துலங்கு சொரூபவருட்
புத்தமுத முண்போர் புதர். ௨0

1916. செழிக்கலுற்ற சுத்த சிவக்கே வலத்தில்
விழிக்கலுற்ரேர் தாம்வித் தகர். ௨௧

1917. வேண்டல் வெறுத்தல் விலகிய சித்தரே
ஆண்டவன் மெய்யடி யார். ௨௨

1918. இருள்சேர் பகைதீர்ந் தெலாவுயிர்க்கு மன்பே
யருள்வாழ்வு பெற்ருேர்க் கழகு. ௨௩

1919. பராற்பரமெய்ஞ் ஞான பகவருரை உய்திக்
கொராற்பதமா வுள்ளுவரான் ருேர். ௨௪

1920. பகவனடி நாளும் பரவித் தொழுநற்
றகவுகாண் சான்ருேர் தகவு. ௨௫

1921. கேள்வியே தம்மகத்திற் கேழ்கிளர்மெய்ஞ் ஞானவருள்
வேள்வியா வாற்றுவர்மே லோர். ௨௬

1922. பசாச வகந்தைப் பழிபடா வாழ்வே
விசாரதர் தந்தெய் விகம். ௨௭

1923. அற்ற வகந்தையோ ரான்றோர் அலாதார்மற்
றற்றாக வான்றோ ரலர். சஅ

1924. துட்டவகப் பேயைத் தொலைத்தொழித்த புண்ணியர்க்கு
நிட்டையுரு வாக்கிளரு நெஞ்சு. சகூ

1925. வாதியா நின்ற மனக்கலக்கந் துன்றாசு
நீதி நிறைந்தொழுகு நெஞ்சு. ருo

1926. அகந்தை மயக்க மறத்தெளிந்த சித்தர்
முகந்துகொள்வர் மோனப் பரம். ருக

1927. முற்றமுழுச் செம்பொருளை மோனவுணர் வாலசுத்திற்
பற்றுவார் நிஷ்டா பரர். ருஉ

1928. தக்கதொரு மோனந் தலைப்பட்ட வுள்ளத்தார்க்
கெக்கரண மென்னியற்றி லென். ருந

1929. மோனமாந் தன்சொருபம் முற்றியமெய்ஞ் ஞானிக்கு
வானமா வைகும் மனம். ருச

1930. நான்கெட்டுத் தானான ஞானிக்கே யன்றிமற்றோர்க்
கேன்கிட்டுஞ் சாவா வியல். ருரு

1931. அத்தக நிற்பா ரறிவே சுயசொருப
சித்தமா முத்தித் திறன். ருகூ

1932. காணவத்தை யாவுமனக் கற்பனையாக் காண்பர்கா
ராணவத்தை மாய்த்த வவர். ருஎ

1933. வளைந்தெங்கு மாக வளைந்தவருள் வெள்ளம்
துளைந்திடுவர் யானெனதற் றோர். ருஅ

1934. யானெனதற் றோரகம்பே ரின்பவளம் பொங்குசுப
மோனவெளி முற்ற முழுது. ருகூ

1935. தன்னந் தனிக்கத் தழைத்தொளிர்கை வல்லியமே
என்னதியா னற்றோ ரியல். கூo

1936. சுத்தவறி வாவகத்திற் சும்மா வமர்ந்திருப்போன்
முத்தவுப சாந்த முனி. ௬௧

1937. தனிப்பரமா நின்று தழைப்பா னகந்தை
முனைப்பற் றொழிந்த முனி. ௬௨

1938. வினைப்பற் றறிதலால் வீடுபே றுற்றான்
முனைப்பற் றொழிந்த முனி. ௬௩

1939. அதிர்ந்திடா மோன வழுத்தமிக் கூர
முதிர்ந்தஞா னத்தோன் முனி. ௬௪

1940. ஊனச் செருக்கற் றொழிவா லுயக்கந்தீர்
மோனத் துறைத்தோன் முனி. ௬௫

1941. அயர்ச்சி யிலாமெய் யறிவே தவமாய்
முயற்சி யகன்றோன் முனி. ௬௬

1942. அருட்கே வலத்தி லழுந்தலுற் றாரை
யிருட்கே வலமென் செயும்? ௬௭

1943. ஞான வளம்பெருக்கும் நாட்டத்தோர் புன்மலப்பா
மூனவுடல் வாட்டமோ ரார். ௬௮

1944. பொறுமைகூர் நெஞ்சப் புலவோ ரடர்க்கும்
வறுமையான் மாழ்க விலர். ௬௯

1945. உடம்பா லுறும்பயனென் றின்றாமா லுண்மை
திடம்படுமெய்ஞ் ஞானி தனக்கு. ௭௰

1946. போதமா மோனவருட் பொங்கலுண்டு வாழுமவர்க்
கேதமுறு வேட்கை யிலை. ௭௧

1947. அவலமற்ற ஞானியே யல்லா துலகிற்
கவலையற்றார் காணவரி யார். ௭௨

1948. இதயத் தகஞ்செத் தியங்கு முணர்வோர்
அதியுத் தமரென் பவர். ௭௩

1949. அணவியவான் மானுபவத் தார்ந்தமெய்ஞ் ஞானிக்
குணர்வேகா னுண்மை யுயிர்ப்பு. எச

1950. தத்துவஞா னுனுபவ வாழ்வுதலைப் பட்டோரே
வித்தகரா வீற்றிருப் போர். எரு

1951. உண்மை தெளிந்த வுளத்தோர் உதாரவருள்
வண்மைசேர் வாழ்வுமடுப் பார். எசு

1952. கேவலசச் சித்தாக் கிளர்சொருபக் காட்சியோர்
வாழ்வலரச் சேர்வருயர் வைப்பு. எஎ
குறிப்பு :—வாழ்வு - பேரின்பப் பெருவாழ்வு ;
உயர்வைப்பு - வரனென்னும் வைப்பு.

1953. வீடா விளங்கு விசுத்தவருட் பார்வையில்
வாடாது சித்தன் மனம். எஅ

1954. அகப்பாமுக் கப்பா லருட்சிற் பரங்கண்
டுகப்பா ருணர்வுடை யார். எகூ

1955. ஒள்ளியமெய்த் தெள்ளியோ ருள்ளம் பசாசவகத்
துள்ளலற்ற சுத்த வெளி. அ0

1956. வள்ளியோ ராக வளம்படுவோர் மெய்ஞ்ஞானத்
தெள்ளியோர் சிற்பரவாழ் வோர். அக

1957. சிந்தையற்ற மோனவருட் சிற்பரஞ்சேர் வுற்றுருக்
* கந்திசந்தி நேம மிலை. அஉ
* அந்தி சந்தி நேமம்—அந்தி சந்தி முதலான அவ்வக்
காலத்துக் குரிய ஆசரணை.

1958. தன்னிழப்பா லான்றபெருந் தக்கார் சகலவித
நன்னலத்தா லுஞ்சிறக்கிற் பார். அங

1959. உள்ள தொரேநிலைமற் றந்நிலையை யோர்த்துணர்ந்தார்
கள்ளங் கழன்றெழிந் தார். அச
குறிப்பு :—கள்ளம் - மாயை.

1960. பரவெளியில் வாழ்வு படைத்தமெய்ஞ் ஞானி
கரவுசேர் சிந்தைகழன் றான். அரு

1961. அருட்சிற் பதத்தி லரண்கண் டடைந்தோர்
இருட்சற் பனைக்கஞ் சிடார். அசு

1962. அருட்சிற் பரத்தி லழிந்த மனத்தோர்
வெருட்சிப் படர்சேர் வுறார். அஎ

1963. அதுவாகத் தன்னை யறிந்தமெய்ஞ் ஞானி
எதிர்காணுன் மோக விருள். அஅ

1964. உலைவுறு ஞான வுரன்சே ருளத்தர்
குலைவுறார் தங்குறிக் கோள். அகூ

1965. அறிவா லுலகை யடிப்படுத்த ஞானி
விறலா லெதிர்வே றிலான். கூ0

1966. கலக மனத்தைக் கடந்தோ ரகில
வுலகமுமே தாங்கடந் தோர். கூக

1967. சிற்பரத்து நோக்கங்கூர் பார்ப்பார்க்குத் தேர்வுறுமெவ்
வற்புதத்தும் மோகமின் றாம். கூஉ

1968. சிற்பரமாத் துன்று சிவானுபவம் புத்தமுதத்
துப்புரவாத் தேர்வரான் றோர். கூ௩

1969. தேறத் தெளிந்தசிவச் செம்பதவாழ் வுள்ளத்தில்
வீறப் படைத்தவர்மே லோர். கூச

1970. சித்தந் தெளிந்தார் சிவத்துவமார் சுத்தவருட்
புத்தமுத வாழ்வுபுசிப் பார். கூரு

1971. அன்னியத்தே மோக மகன்றொழிந்தா ருள்ளுணர்விற்
றன்னியல்பாத் தானொளிருந் தான். கூசு

1972. அத்துவித மாக வதுவேதா மாவியல்வ
துய்த்துணர்வோ ருண்மையுணர்ந் தோர். கூஎ

1973. அறிவுண்மை கண்டோ னறிவாந்தன் மெய்யிற்
பிறிதொன் றறியப் பெறுன். ௯அ

1974. தன்சொருப வுண்மை தலைப்பட்ட வொள்ளியர்தந்
நெஞ்சமே முத்தி நிலை. ௯௯

1975. உளதே யுணர்வவ் வுணர்வே சிவமா
வுளதென் றுணர்வருணர்ந் தோர். ௧00

1976. நள்ளக் கடவசிவ ஞானத் தபோதனரை
உள்ளினும்வெம் பாவ மறும். ௧0௧

1977. சுத்த சிவமாத் துலங்குவோர் சந்நிதியிற்
பொய்த்தொழியும் பாசப் புலம். ௧0௨

1978. சிவத்திலே தம்முண்மை தேறலுற் றுருக்
கவத்தைமோ கப்பா றுறும். ௧0௩

1979. ஆந்தரசற் பத்தியா லாண்டவற்குத் தொண்டுபட்ட
மாந்தர் * அளப்பரியர் மாண்பு. ௧0௪

.* அளப்பரியர் மாண்பு - அளப்பரிய மாண்பினர்.

1980. நீத்தார் பெருமை நிகழ்த்தலகத் தூய்மைக்குத்
தீர்த்தமா நீர்மை யுடைத்து. ௧0௫

1981. இறைவன் பதத்தி லிரண்டற வொன்றும்
அறிவரிய லாய்தற் கரிது. ௧0௬

1982. இம்மையிலே யம்மைவாழ் வீண்டினே ரின்பவருட்
செம்மையிலே சீர்மையுற் றோர். ௧0௭

1983. சிவமாகச் சித்தந் தெளிந்தோ ருயிர்ப்பே
தவமா வறியத் தகும். ௧0௮

1984. காம வெகுளி மயக்கங் களைந்தோர்மெய்ச்
சேமவியல் சார்வர் சிவத்து. ௧0௯

1985. துரியவியல் பாகத் துலங்குமனு பூதிப்
பெரியர் பெறற்கரி யார். கக0

1986. ஆணவப் பாழி னகன்றெளிர்மெய் வாலறிவர்
காணப் பெரிதரி யார். ககக

1987. ஓர்ப்பா லுளத்தே யுணர்வாற் பரசொருபம்
பார்ப்பாரே பார்ப்பனரென் பார். ககஉ

1988. *பார்த்தோரைப் பார்த்தலே பாக்கியமேற் *பார்த்தோர் தம்
பாக்கியமாண் பென்னென் பது. ககங

*பார்த்தோர் - உண்மையுணர்ந்த ஞானிகள்.

1989. அகந்தெளியப் பெற்றோ ரருட்பார்வை ஞான
முகந்துலங்கக் காட்டும்வேட் டோர்க்கு. ககச

1990. தீர்த்தமா வுள்ளந் தெளிந்தமைந்த காட்சியோர்
வார்த்தையுயிர்க் கேமாப் புடைத்து. ககரு

1991. மான்றோர் மயக்க மகற்றவே சுத்தவருட்
சான்றோ ருலகி லுளர். ககசு

1992. தெள்ளியோ ராகத் திகழ்சொருப ஞானவருள்
வள்ளியோர் வாழவைப் போர். ககஎ

(கொச்சகக் கலிப்பா)

1993. சற்பனைசேர் மாயச் சதியா முலகத்திற்
கற்பனையா முற்றுங் கழன்றொழியக் கைவல்யச்
சிற்பரமாத் தம்முண்மை தேறத் தெளிந்தோரே
யற்புதரெல் லாரினுமிக் கான்றபே ரற்புதரே. ககஅ

1994. எண்காகப் பற்று தெதிர்பவற்றுக் கெல்லாமோர்
கண்காணி யாகக் கருத்தைப் பயிற்றுவோர்
மண்காணி யின்றி வறக்கினுமே, சுத்தவருள்
விண்காணி யாட்சியா விஞ்ச விளங்குவரே. ககசு

குறிப்பு:—எண்கு - கரடி; கண்காணியாக - சாட்சி மாத்திரமாக.

1995. சொற்பனமே யாகவெதிர் தோற்றும் மயக்கமனக்
கற்பனு பேதக் கலக்கமாஞ் சுட்டறிவைச்
சிற்பரமாந் தெய்வத் திருவருளா லேயகற்றித்
தற்பரஞா னுனுபவஞ் சார்ந்தோர் தத்யரே. ௯௨0

1996. சிற்பரா சத்தித் திறந்தெளிந்த தெள்ளியோர்
சொற்பனு ஜாலச் சுழல்வடிவாத் துன்றுமனக்
கற்பனு சத்தி கழன்றெழியக் கைவல்யத்
தற்பரமா வுள்ள சதாமுத்தி காண்பரே. ௯௨௧

1997. தன்னுருவா வுள்ளசிவ தற்பரத்தைத் தன்னிழப்பால்
அன்னியச்சுட் டாட்சி யகன்றெழிய வெற்றறிவாத்
துன்னுமுப சாந்த சொரூபானு பூதியாற்
றன்னியல்பாக் கண்டு தரித்தவன்காண் ஞானியே. ௯௨௨

1998. தெளிந்தவெளி யாகத் திகழ்தலாற் சித்தத்
தளைந்தபர மார்த்தஞா னுனுபவத் தோருக்
குளைந்துபட யாதோ ருலகமுமங் கில்லை
கிளர்ந்து விளங்குவது கேவலமாந் தானே. ௯௨௩

1999. ஆரியக்கூத் தாடினுமெய் யன்பர் தமதுசொந்தக்
காரியத்திற் கண்ணுக் கருத்துமுற்றச் சேர்க்கலன்றிக்
காரியத்திற் சோர்வுபடக் காசினியோ ரென்சொலினும்
வீரியமீக் கூறி வியந்து தருக்காரே. ௯௨௪

குறிப்பு :—தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் என்றபடி, ஸ்வதர்மமான தவம் தமது சொந்தக் காரியம் எனப்பட்டது.

2000. தொன்ருன சொந்த சொரூபத்தோ டன்றிமற்
றென்றேடுந் தம்மை யுடன்படுத்திக் கொண்டொழுகார்
நன்ருன வுண்மை நயப்பாற் பரமார்த்த
மன்ருன வற்றே டளையா வறிவினரே. ௯௨௫

2001. சிவத்திலே சிந்தையறச் செத்தோர் செகப்பா
ழவத்திலே நானென் றழுங்கார் ; விசாரத்
தவத்திலே சார்ந்தோர் ; சநாதனமெய் வாழ்வு
சிவத்திலே யாகத் தெரிந்துகொள் வாரே. கஉகரு

2002. வெற்றென் றுரைத்து வெடுக்கெனுமம் மாற்றத்தா
லெற்றென் றிரங்குவதற் கேதுவாம் மோகவக்
கற்றந் தவிர்ந்த குணுளர் கொடும்பாடு
சற்றுந்தாங் காணர் ; சதானந்த மோனிகளே. கஉஎ

2003. தீன வெளிமையாற் சிந்தா குலஞ்செயும்பா
மூன வகந்தை யுணர்வற் றெழிந்தமையால்;
ஈன விளிவரல்சே ரெந்நினேவும் பற்றுது
ஞான வொளிபடைத்த நாகரிகர் சித்தத்தே. கஉஅ

2004. தெளிந்தசிவ யோகத் தியானனு பூதி
யளைந்த வகத்தோ ரமுதமுந்தாம் வேண்டார்
தளைந்தபசு பாசத் தடுமாற்றச் சிந்தை
விளிந்துவெளி யாக விளங்குமனத் தாலே. கஉகூ

2005. தன்மெய் யுணர்வு தலைப்பட்டார்க் கியாவுமொரு
தன்மயமே யாகத் தழைக்கு மனுபவத்தால்
வன்மமகிழ் வாதி வருவதுபோற் றேன்றுமவை
துன்னுமனோ தீத சொரூபத்திற் பற்றுவே. கௗ0

2006. சுத்தசச் சித்தாஞ் சுயசொருப நோக்கத்திற்
சித்திரமாஞ் சீவச் சிதாபாச னுட்படமற்
றத்தனையுங் கற்பனையே யாகக் கழிதலால்
வித்தகர்பாற் றேன்று விவகாரம் மித்தையே. கௗக

2007. பற்றுக் குறைமனப் பான்மை சொருபவுண்மை
கற்று ருணர்விற் கலவாது ; பெற்றதுமற்
றெற்று யினுந்தங்கைக் கெய்தியதே மிக்கபெருந்
துற்று வுளம்பொலியத் துய்ப்பர் குறைவிலரே. கௗஉ

2008. ஒன்றியுணர் வுள்ளத் தொடுங்கியே சிற்பரமா
வென்றுமுள தாந்தன் னியல்வடிவை நுட்பமா
மன்ற மடுத்தோர் மனப்பா ழகந்தையறப்
பொன்றலாற் பொங்குமனு பூதியாற் பூரணரே. கஙங

2009. பொய்வந்த மாயப் புலங்கடிந்து சிற்பரமெய்த்
தெய்வந் தெளிந்தவருட் சித்தத்தோர் தன்னிழப்பா
லுய்வந் தொளிர்வதன்றி யொண்பதத்தே, சொப்பனமா
மைவந்த கற்பனையில் மாழாந் துழலாரே. கஙச

2010. நிண்ணயமெய்ஞ் ஞானம் நிலைப்படலால் யானென்னு
மெண்ணமெழா மோன வியல்பா வொளிர்சொருப
வண்ணம் படைத்த மனத்தோர் மகனீயர்;
தண்ணென் றமுதவொளி சாரப் பரப்புவரே. கஙரு

2011. கள்ளமற வுள்ளங் கலந்த சொரூபவருள்
வெள்ளவியல் வாழ்வே விபவமாத் துய்த்தலுற்றோர்
* உள்ளலொரு சற்று மொழிந்திடாப் பேயுலகக்
கள்ளமலி வாழ்வைக் கருதார் கனவிலுமே. கஙசு

* உள்ளல்—மனக்கவலை.

2012. சிவத்திலே தம்முண்மை தேர்ந்தோர் செருக்கா
லவத்திலே மாழ்கா ரலமரல்சேர் சுட்டால்;
அவத்தைகளுக் கெல்லா மதீதமாய் மிக்க
சுவத்தமா வாழ்வர் சொருபப் பதத்தே. கஙஎ

குறிப்பு :—செருக்கால் அலமரல் சேர் சுட்டால் மாழ்கார் எனவியையும். தேர்ந்தோர் மாயா விலாசக் கற்பனைகளை மெய்யாகக் கருதிக் கலங்கா ரென்பதாம்.

2013. சிவத்தே பிறந்து சிவத்தே வளர்ந்து
சிவத்தே யடங்கு சிவஞான யோகி
அவத்தைகளென் னென்ன வடுப்பினுந் தானவ்
வவத்தைகளால் யாதோர் விகாரமும்பற் றுனே. கஙஅ

2014. எல்லாமொன் ருக வியல்சொருப வுண்மையுணர்
வல்லாற் பெறலரும்பே ராக்கம் பிறிதில்லே;
நல்லார் சொருபமெய்ஞ் ஞானனு பூதியன்றிப்
புல்லார் பிறயோகம் புன்புலமாக் கள்போலே. கக௯

2015. தவத்திலே சிந்தை தழைத்தோர் விசுத்த
சிவத்திலே வாழ்வு திளைப்பார்; புலப்பா
ழவத்திலே யாசை யகற்றி அருட்சீர்
விவத்தையில்வே ருன்றி விளங்குவர்மே லோரே. கச0

2016. அருட்பரமாத் தன்னை யறிந்த வொருத்தன்
இருட்படுபா ழாமுன் னெதிருலகைக் கண்டு
வெருட்கலக்கங் கொள்ளான், வெருண்டுழன்ற மாய
மருட்கலக்க மானமனம் மாய்ந்தவாற் ருலே. கசக

2017. ஆதாளி சற்று மறுவுலக மாயத்தில்
யாதானு மாக வெதிலு மனங்கலங்கார்
ஆதார மாகவிளங் கான்ம சொருபத்திற்
போதானு பூதிப் புலங்கண் டியல்வோரே. கசஉ

குறிப்பு:—மாயவுலகம் என்பது உலகமாயம் என முன் பின்னுகத் தொக்கது.

2018. அகந்தை முனைப்பற் றவிர்சொருப மோன
சுகந்திளைக்க லுற்ற துரீயர் மனத்தால்
உகந்தடைய யாது முபயமில்லே; வேருப்
பகிர்ந்த வெலாங்கற் பனுமாய மன்றே. கசங

2019. உள்ளொளியில் யாதோ ருபயந்தோன் றப்பெருத்
தெள்ளியோ ரான சிவக்கேவ லாத்துவிதர்க்
குள்ளமே யாக வொளிர்சொருபச் செம்பதத்திற்
கள்ளமன மாயைக் கலக்கமெக் காலுமின்றே. கசச

2020. தவமாக வுள்ளாழ்ந்து தற்றே ருசாவாற்
சிவமே சொருபமாத் தேறத் தெளிந்தோர்
அவமான மோக வகப்பே யகன்ருேர்
கவர்மால் விகற்பக் கலக்க முருரே. கசரு

2021. தன்னியல் கண்டு தரித்தமெய்ஞ் ஞானிதனக்
கன்னியமொன் றில்லா வருட்பரமே நோக்குவான் ;
பொன்னியல் போன்றசிவ பூரணமாப் பொங்குமவன்
றன்னியலின் மற்றனைத்துந் நன்மயமாக் காணுமே. கசசு

2022. அயர்ப்பே வடிவா மகந்தை யழிந்தோர்
உயிர்ப்பா வுணர்வே யுளத்தி லுயிர்ப்பார்.
நயப்பாக வுள்ளமெய்ஞ் ஞானனு பூதிப்
பயப்பாற் பரமசிவப் பான்மைமுற் றூர்ந்தே. கசஎ

2023. தனித்தத் துவமாத் தழைத்த சொருப
கனத்துப் புரவு கலந்தியல் சித்தர்
மனத்தை யிதயத்து மாணவே யூன்றி
முனைத்த வகந்தையை மோசிப்பித் தோரே. கசஅ

2024. ஐயுணர்வின் மோகித் தழுந்துமகங் காரமன
மையலறக் கண்டவருள் வாலறிவின் மாட்சியாற்
கைவல் லியசொருபங் காணலுற்று ருள்ளத்திற்
பொய்வல்ல மாயைப் புணர்ப்பழியுங் காணிரே. கசகூ

2025. மண்டுமகங் கார மனக்கற் பனுபேதத்
துண்டுபடு முப்புடியின் சூதற் றெளிர்வதாற்
கண்டறிய யாதுமில்லை கற்பனைதீர் சொச்சொருபங்
கண்டமைந்த சுத்தவருட் கைவல் லியருக்கே. கரு0

2026. கள்ளமா மோகவகங் காரமுனைப் பற்றொழிய
நள்ளிதயத் தூடுமெய்ந் நாட்டத்தா லாராய்ந்து
தெள்ளிதா வுள்ளொளிர்சச் சித்தே தமதியல்பா
நள்ளலுற்று வாழ்வர்மெய்ஞ் ஞான ரசிகரே. கருக

2027. எல்லோ ரிதயத்தும் யான்யா னெனவியல்பாத்
தொல்லோ னொருவனே தொக்கொளிர்மெய்த் தன்மை
நல்லோ ரறிந்தமெய்ஞ் ஞானனு பூதியாற் [நன்று
புல்லா தொழிந்தனர்பொய்ப் பொக்கமனப் பாசமே.
கருஉ

குறிப்பு:—தொல்லோன் - அநாதியான பழையோன் ;
பொக்கமனப் பாசம் - யானென தென்னுஞ் செருக்கு.

2028. வெற்றறிவா வுண்மை விளங்கலுற்றோர் உள்ளத்திற்
பற்றலுற்றார் சுத்தப் பரமோப சாந்தநிலே ;
உற்றறிய மற்றோ ருபயமில்லா முற்றமுழுப்
பெற்றிமைசேர் கைவல்யம் பேரின்ப மாவதே. கஎ

2029. அறிவாகத் தம்மை யறிந்தோர் அதனிற்
பிறிதா மகந்தையறப் பெற்றோரே ; உண்மைச்
செறிவான சுத்த சிவத்தினின்று சற்றும்
மறியார் மனஞ்சிவமா மாய்ந்தொழிந்த தாலே. கஎ

2030. அருளால் விளைந்த வமுதானு பூதிப்
பொருளாலே பொங்கிப் பொலிவோர் புலவோர்
இருள்சே ரிருவினையோ டின்பதுன்ப மான
வெருளில்சச் சிற்பரமா மேவலுற் றோரே. கஎ

2031. துள்ளுமகங் காரத் துடிப்பான வாணவப்பாழ்ங்
கள்ளமறக் கண்டார் கருத்திலே சுத்தவருள்
வெள்ளவெளி யாக விளங்கு சொருபமன்றித்
தெள்ளத் தெளியத் திளைக்கவே றொன்றுமின்றே. கஎ

குறிப்பு:—கருத்திலே திளைக்க வேறொன்று மின்றே என வியையும்.

2032. நோக்கற் குரியவொர்தன் னுட்பவொட்ப வுண்மையை [யுள்
ளோர்க்கலுற்று ரோர்த்துணர்ந்தாங் கூன்றலுற்றார் ; [கற்பனைசேர்
மூர்க்கவகம் மோன வொளிவெளியா முற்றலாற்
றாக்கலுறார் தத்துவப்பொய்ச் சாயைகளா லன்னோரே. கஎ

2033. யாரேதா மென்றிதயத் தேற்ப வுசாவியுணர்ந்
தாரே லவர்பா ழகந்தையுணர் வற்றொழிவாற்
சீரே மலிந்தவருட் சிற்பரத்தின் வேறலராய்ச்
சேராநின் றாரைச் சிவகதிசேர்ப் பிப்பாரே. கஎஅ

குறிப்பு:—சேராநின்றாரை - தம்மைச் சேர்ந்தவர்களை.

2034. சித்தஞ் சிவமாகச் செத்துயிர்க் கின்றவருள்
வித்தகமெய்ச் சான்றோர் வெளியொளியாப் பொங்கவகம்,
புத்தியோ கத்தாற் பொருந்து சிவானுபவ
சித்தியளிக் கின்றார் தற் சேர்ந்தமெய் யன்பர்க்கே. கருக

குறிப்பு: — அகம்பொங்க ......... சித்தியளிக்கின்றார்
எனவியையும்.

2035. கருமசம் பந்தக் கறைதீர் சொருபப்
பரமசிவ ஞானப் பதிவாழ் வடைந்தோர்
தெருமரலுற் றோரைத் திருவருட்கண் ணோக்காற்
றரும சொருபிகளாத் தாங்குகின் றாரே. கசுய0

2036. தெளிந்தமைந்த சுத்தவருட் சித்தத் தியல்பா
அளைந்தவிர்மோ னத்தா னுபூதி யார்ந்தோர்
உளைந்துலகப் பாழி லுழன்றிடுநல் லோரை
வளந்ததும்பு முத்தியுற வாழ்விக்கின் றாரே. கசுக

2037. ஒள்ளியோர் உள்ளத் துதாசீன மாவுலகைத்
தள்ளியே சாந்த சதாசிவமாத் தாஞ்சரிப்போர்
நள்ளியோ ருக்குமெய்ஞ் ஞானனு பூதியருள்
வள்ளியோர் வாழ்வாலே வாழுமிவ் வையகமே. கசுஉ

2038. சூனியம்போற் றோன்று சொருபசிவக் கேவலமெய்ஞ்
ஞானியின்பார் வைக்கிலக்கா நண்ணினோர் நானெ
[னும்பொய்
யூனவகப் பாழிருளை யோட்டியருட் பார்வையால்
வானவியற் கைவல்ய வாழ்வு மடுப்பரே. கசுஙு

2039. உலைவிலா வுண்மை யுணர்வால் அகத்தே
அலைவிலா வாழ்வா மனுபூதி யார்ந்தோர்
நலிவிலா விட்டுணர்வு நல்குவார் பாச
வலையறுக்க வெண்ணித்தம் மாணடிசேர்ந் தார்க்கே.
கசுச

2040. ஊனமனக் கற்பனைசெற் றுள்ளத் தொடுங்கியமெய்ஞ்
ஞானிகளைக் கண்டடைந்து நற்பரமா வற்புறுவோர்
தீன மயக்கச் செருக்கினின்று தாமகன்று
மோன வருள்வெளியா முத்திபதங் காண்பாரே. கசுரு

2041. உள்ளத்தே தன்மெய் யுரம்படநன் கோர்த்துணர்ந்து
தெள்ளத் தெளிந்தியல்சச் சிற்பரமாச் சிந்தையற்றோர்
கள்ளத்தே மாழ்குங் கலக்கமறத் தம்மைநம்பி
நள்ளலுற் றோரை நலிவகற்றிக் காப்பரே. ௧௯

## 117. ஞானி பரமே

(குறள்)

2042. நீங்காத மோன நிறைவாக வுள்ளவருட்
பாங்காலே ஞானி பரம். ௧

2043 எங்கனுமே மோனுருக வியல்சொருப ஞானியுரு
பங்கமிலா வுண்மைப் பரம். ௨

2044. தீரத் தெளிந்தார் தினைத்தலுற்றோர் சுத்தவருட்
பார சொரூபப் பரம். ௩

2045. வாழ்வுசிவ யஞ்ஞமா வாழவல் லாரதயம்
பாழ்கடந்த சுத்தப் பரம். ௪

2046. தெற்றத் தெளிந்த சிவானுபவச் சீரியோர்
பற்றற் றொழிந்த பரர். ௫

2047. காண்பானைக் கண்டமைந்த காட்சிசே ரத்துவித
மாண்போர் பரதெய் வதம். ௬

2048. உண்மை யுணர்வா லுயிர்க்கலுற்ற வொள்ளியோ
ரண்மையில்வாழ் வோர்வா னவர். ௭

2049. மோனவருள் வாழ்வு முயங்கலுற்ற மானவரேல்
வானவரின் மாணமிக் கார். ௮

2050. அருளிலே மாய மருள்கரக்கக் கண்ட
தெருளாளர் தேவரின்மிக் கார். ௯

2051. அருட்புலமா வுள்ளத் தவிர்சொருப வுண்மைத்
தெருட்புலவர் தேவரின்மிக் கார். ௧0

2052. உள்ளமார்ந் தன்னு ணுணர்வா வொடுங்கிநின்ற
தெள்ளியோர் தேவரின்மிக் கோர். கக

2053. தெளிந்து விளங்குசுபச் சித்தோப சாந்தி
விளைந்தவர் தேவரின்மிக் கோர். கஉ

2054. மோனவுணர் வூடமுந்தி முத்தித் துலக்கமுற்றோர்
வானவருந் தாழவாழ் வார். கங

2055. உரைக்க வுரைக்கவுயிர்க் குள்ளொளிசேர் தெய்வத்
திருக்குலா மிக்கதவர் சீர். கச

2056. ஆண்டவனு மோதி யகங்கிளர்தற் கேதுவா
வீண்டுவதவ் வான்றோ ரியல்பு. கரு

2057. களங்க மிலாதார் கடவுள் வடிவா
விளங்கலுற்ற மெய்வித் தகர். கசு

2058. கடவுளியல் வாழ்வு கலந்தமைச் சான்றோர்
கடவுளரே; மக்க ளலர். கஎ

2059. வான வளாகமே வாழ்வா மடுத்தமெய்ஞ்
ஞானி அலனோர் நரன். கஅ

2060. பரமான வுண்மையகம் பற்றினோர் சுத்தப்
பரமே நரர்தா மலர். ககூ

2061. சிவத்திலே சித்தந் தெளிந்தமைந்தோ ரன்றிச்
சுவத்தர்வே ருரு மிலர். உ0

2062. ஒட்டுப்பற் றற்றமெய் யொள்ளியோ ருள்ளமே
மட்டுப் படாதசிவ மாண்பு. உக

2063. தெள்ளியமோ னத்தாற் சிவமேதம் முண்மையா
ஒள்ளியோ ருய்த்துணர்கிற் பார். உஉ

2064. சிவமேதா மாகத் தினைப்பார் தவமாகத்
தம்முண்மை தேர்கிற் பவர். உங

2065. சிவத்திற் கரைந்தொழிந்த சித்தத்தோர் சுத்த
சிவத்தினும்வே றல்லர் தெரி. உச

2066. அறிவாக வுள்ளத் தடங்கலுற்றோர் முற்றச்
செறிவான சுத்த சிவம். உரு

2067. அறிவான வுண்மையா வான்ற பதத்திற்
செறிவாக நின்றார் சிவம். உசு

2068. ஊனவகப் பாழிருளை யூடறுத்த கூர்மையோர்
தீனமறப் பொங்கு சிவம். உஎ

2069. அறிவி லறிவா வனைத்து மடங்கச்
செறியலுற்றோன் சுத்த சிவன். உஅ

2070. தானேதா னாகச் சரிக்குமெய்ஞ் ஞானநிட்டன்
றானே சதாசிவனுத் தேர். உகூ

2071. பொய்யகத்தை விட்டவருட் போதர் பரசிவமே
மெய்யகமாத் தாம்விளங்கு வார். ௩0

2072. செத்த மனத்தர் சிவசொருப மாகவொளிர்
முத்தர் முயற்சியற் றார். ௩௧

2073. சிவத்திலே தன்சொருபச் சீர்மைகண்டு வாழ்வோன்
அவித்தைசேர் பந்தமகன் றான். ௩௨

(கொச்சகக் கலிப்பா)

2074. அறிவுதூய் தாகவகத்தில் விளங்கல்
செறிவுதரு சுத்த சிவானுபவச் சீர்மை;
பிறிவு படாதசிவப் பெட்பி லமுந்த
வுறையு முணர்வோ *ருலகோ ரலரே. ௩௩
* உலகோர் - பிராகிருதர்,

2075. நானென்னதே முக்கியமா நண்ணுநவ நாகரிகப்
பேனவொளி சான்றபெரும் பேதைமைசேர் வையகத்தில்
ஞானவொளி யானமெய்ந் நாகரிகப் பண்பினுயர்
மானவரா நீத்தவரவ் வானவரின் மிக்காரே. ௩௪

2076. ஒளிகளுக் கெல்லா மொளியான சுத்தச்
வெளியிற் றெளிவா விழித்தலாற் சுற்று
மிளிவரல்சே ராத வியற்பரமாத் தம்மைத்
தெளியலுற்றார் கண்கண்ட தெய்வமா வாரே. ௰௫

2077. மைத்தவகங் கார மயக்கக் கலக்கமாஞ்
சித்த வியாபார ஜீவபோ தச்சேஷ்டை
செத்தொழியப் பெற்ற சிவாநுபூ திப்பெரியோர்
சுத்தசிவ மேயாகச் சூழ்ந்தொழுகத் தக்காரே. ௰௬

2078. பரசிவமா மோனப் பதங்கண்டார், பார்வை
பரசிவமே யாகப் படர்தலாற் காணுந்
திரிசியங்கள் யாவுஞ் சிவமயமே சுத்தப்
பரசிவமே யானமனப் பான்மையோர் தாமே. ௰௭

2079. அற்றமற்ற வுண்மையா வான்ற சொரூபத்தில்
மற்றனைத்தும் மோக மனோமயப்பாழ்ங் கற்பனையா
அற்றொழிய வுள்ளத் தவிர்வுறுஞா னுனுபவம்
பெற்றவர்தம் பெற்றி பிரமத்தின் வேறன்றே. ௰௮

2080. குற்றமற்ற வுண்மைக் குலாவால் விளங்குவார்
வெற்றறிவா நிற்கும் விசுத்தர் முனைப்பிலார் ;
கற்றறியச் சற்றுமனக் கற்பனை பேதமற்ற
பெற்றியார் சுத்தப் பிரமத்தின் வேறன்றே. ௰௯

௯

## 118. பெரியோர் வழிபாடு

(கொச்சகக் கலிப்பா)

2081. ஒன்று நிலைத்த வுரன்சே ருணர்வுடையோர்
தொன்றும் பிரம்ம சொரூபமே யாதலாற்
கன்று மனத்தாற் கசிந்துருகிக் காதலொடு
மன்ற வியற்று வழிபாடு மாதவமே. ௧

2082. தெள்ளியோ ரானசிவச் செல்வர் உதாரவருள்
வள்ளியோ ராக வழங்குவர்மெஞ் ஞானவொளி;
கள்ளமாம் பாசக் கலக்கமற வேண்டிலவ்
வொள்ளியோர் பாற்சென் றெழுகுமின்மெய் யன்பு
[பட்டே. ௨

2083. சுவத்த சிவத்தே துளைந்துதுளைந் தூன
வவத்தைமேற் கப்பா முகந்தை யறலாற்
சுவத்தரா வுள்ள சொரூபரைச் சார்ந்து
தவத்தைமேற் கொள்வர் தவந்தவிர்ந் தோரே. ௩

குறிப்பு :— சுவத்தசிவம் - சுபசொரூபமான சிவம்; தவந்தவிர்ந்தோர் - ஒரு பிறப்பிற் செய்தலுற்றதவம் அப்பிறப்பிலே முற்றுப் பெறுதொழிந்தோர்: யோகப் பிரஷ்டர்; மேற்கொள்ளல் பிற்பிறப்பில்.

2084. நேரிய வுண்மை நிலையிற்பே ராதொழுகுஞ்
சீரிய ஞானத் திறலோரைச் சேர்ந்தொழுகிற்
பூரிய ரேனுந்தாம் புண்ணியராப் பற்றொழிந்து
கூரிய ஞானக் குறிவழிச்சேர் கிற்பரே. ௪

2085. செம்பொன் மயமாத் திகழ்சிற் பரசொருப
நம்பன்மெய் யன்பர் நமையாள் பரமரென
நன்பரிவு கூர நலங்கெழுமெய்த் தொண்டுசெய்வார்
பம்புலக மோகவெம் பாசமறக் காண்பாரே. ௫

## 119. எங்கு எவ்வா றுள்ளீர் என்றூர்க் கியம்பியது

(குறள்)

2086. பரமார்த்த மோனவருட் பார்வையாற் றன்மெய்
யுருமாத் திரமா வுளேன். ௧

2087. இளிவரல்சே ராத வியல்பால் இதயத்
தொளிவெளியா நான்வீற் றுளேன். ௨

2088. கற்பனையி னீங்கிக் கழன்றொழிந்தேன் கைவல்யச்
சிற்பரமா வுள்ளேன் சிவத்து. ௩

(கொச்சகக் கலிப்பா)

2089. உற்றவனு பூதி யுரைக்கெனநீர் கேட்கின்றீர்
மற்றயலே தேரும் மாட்கமனக் கற்பனைநீர்
முற்றறிவா வுள்ளத்து மூண்டொளிர்மோ றனுபவப்
பெற்றிசேர் கைவல்யம் பேச வியல்வதன்றே. ௪

2090. அத்தனெனக் கன்பா லளித்தபெரு நன்மைப்பே
றெத்தகைய தென்ன விசைக்கிலோ பொய்ம்மயக்கச்
சித்தமல மான செருக்கற் றெழியவொளிர்
சுத்தவருட் போத சொரூபானு பூதியே. ௫

2091. மைப்புறுபாழ் மோக மனத்தேற்கு மெய்த்தவவாழ்
வெப்படிவந் தெய்திற் றெனநீர் வினவுதிரேற்
றப்பருமெய்ஞ் ஞானத் தவமா விளைந்ததகத்
தொப்புயர்வில் லாவென் னுடையான்கண் ணோக்கமே. ௬

2092. ஆதமிலி நாயினே னந்தமில்பே ரின்பவருட்
பாத வொளிவெளியிற் பாச விருள்கரக்கக்
காதலா லுள்ளங் கசிந்துருகி வாழ்கின்றேன்
பேதமில்சற் போதப் பிரான்கடைக்கண் ணோக்காலே. ௭

2093. ஈன வுடலைநா னென்று வெறித்துழல்பா
மூன மனத்தை யுடற்றியென் னுள்ளத்து
மோன வருள்வெளியா முற்றலுற்ற வாண்டவனே
யானென் றறிந்தியல்பா யானறவாழ் கின்றேனே. ௮

2094. என்றுதை யான விறைவன்செம் பொன்னடியே
பொன்றுக வுண்மைப் பொருளாக வுள்ளத்து
நன்று வொளிர்சொருப ஞானனு பூதியால்
ஒன்றுன சுத்த வொளிவெளியா வுள்ளேனே. ௯

2095. பொதுவான சுத்தவருட் பூரணமே யன்றி
யிதுவோ வதுவோ வெதுவுமல்லா வாற்றூற்
கதுவ வொணுதவருட் கைவல்ய வுண்மைச்
சதுரா வியல்கின்றேன் சாந்திப் பதத்தே. ௧0

2096. புலங்களில் வீழ்ந்து புரண்டு களித்துக்
கலங்கு மகப்பேய்க் கலக்கங் கரக்கத்
துலங்குமெய்ஞ் ஞானத் துரீய சொரூப
நலங்கிளர வுள்ளத்து நானியல்கின் றேனே. கக

## 120. என்னவை

(குறள்)

2097. ஒரானொரு தெய்வமெனக் குண்டே ரமணப்
பிரானுருப் பேர்பெற் றது: க

2098. உன்பா லுணர்வோ டொடுங்கி யுறைதலே
யன்பார்ந்த வென்வே ணவா. உ

2099. இருக்கின்றே னென்னு மியலறிவா முண்மை
யருக்கன்காண் என்னுண் டவன். ௩

2100. வெறுவெளியா வென்னை விடுவித்த பெம்மா
னறிவொளியே யாமென் னகம். ௪

குறிப்பு:— பெம்மா னறிவொளி – பெம்மாள் சொருபமான் அறிவொளி.

2101. உள்ளா னொருவ னுடையா னடியேனுக்
குள்ளமே யாக வொளிர்த்து. ௫

2102. எண்ணமற்ற மோன வியற்சிற் பரசொருப
வண்ணமே யென்றன் மனம். ௬

2103. சாட்சியா வுள்ளசிவச் சைதன் னியசொருப
மாட்சியே யாமென் மனம். ௭

2104. பொலிவா விளங்குசிவ பூரணமா மோன
மலிவே யென்னது மனம். ௮

2105. சுகோதயமா மோனந் துலங்கலுற்ற வாற்றல்
மகோதயமா மென்றன் மனம். ௯

2106. காண் வொணுதவருட் கைலல்ய பூமியா
மாணவிளங் கிற்றென் மனம். ௧0

2107. அறிவே சொரூபமா வாண்டவன்சீ பாத
நிறைவுணர்வே யாயிற்றென் னெஞ்சு. ௧௧

2108. ஆசைப் பசாசுக் க்வகாச மற்றசிவ
நேசப் பதங்காணென் னெஞ்சு. ௧௨

2109. ஊடுருவ் வொண்ணு வுரன்சேர்ந்த வல்லரூ
நீடும் பரவெளியென் னெஞ்சு. ௧௩

2110. நெஞ்சங் கரியா நிகழ்சிற் பரசொருப
விஞ்சையே யென்மெய் யொளி. ௧௪

2111. அகத்தேநான் கண்ட வருட்சிற் பரவெளிவாழ்
விகத்தலரு மென்மெய் யியல். ௧௫

2112. மோனமே முற்றமுமு மூதறிவாத் துன்றித்ய
வானமே யாய்த்தென் வடிவு. ௧௬

2113. ஊன்மற்ற மோன வுணர்வொளியாப் பொங்குசுப
வானமே யென்மெய் வடிவு. ௧௭

2114. அருட்பெருவாழ் வானவென் னம்மான் சொரூபப்
பொருட்பொலிவே யான்காண் புலம். ௧௮

2115. தன்மயமா வென்னைத் தழைத்தொளிரக் கண்டவருட்
பொன்மயமே யான்காண் புலம். ௧௯

2116. தன்மயமா வுற்ற சதாசிவசாட் சாற்காரப்
பொன்மயமே காணும் புலம். ௨0

2117. காழ்த்த வருட்சிற் கவித்துவத்தால் ஆண்டவனை
வாழ்த்தலே யாமென் மகிழ். ௨௧

2118. ஊனக் கலக்கமற்ற வொள்ளியோன் சுத்தவருள்
வானப் பதமேயென் வாழ்வு. ௨௨

2119. உண்மைநிலை யாகவென் னுள்ளத் தொளிர்சொருப
வண்மைசேர் சிற்பதமென் வாழ்வு. உ௩

2120. உண்மைத் தவமா வுளத்தில் விளைதலுற்ற
வண்மைசேர் வாலறிவென் வாழ்வு. உ௪

2121. ஊனமற்ற வுண்மையே உள்ளுணர்வா மோனவருள்
வானமா வுள்ளவென் வாழ்வு. உ௫

2122. உண்மை யுணர்வா வுளங்கிளரப் பொங்குறுமவ்
வண்மையிலே வைகிற்றென் வாழ்வு. உ௬

2123. என்னியலே யாக விதயத் தொளிர்சிவச்செம்
பொன்மயமென் வாழ்க்கைப் பொலிவு. உ௭

2124. அருள்வெளியா வாண்டவென் னம்மான் சொருபப்
பொருள்வளமென் வாழ்க்கைப் பொலிவு. உ௮

2125. அருள்வெளியா வுள்ளத் தவிர்ந்த சொருபப்
பொருள்வளமென் வாழ்க்கைப் பொலிவு. உ௯

2126. மோனமே வாழ்வா முடிந்தவருட் கைவல்யத்
தானமே நான்வாழ் தலம். ௩0

2127. அறிவே சொருபமா வாண்டபிரான் மோனக்
குறியே யெனதுகுறிக் கோள். ௩௧

2128. பரவெளியா வென்னுட் படர்ந்த சொருப
வுருவெளியே நான்கா ணுலகு. ௩௨

2129. களிசேர் மயக்கமறக் கண்டான் சொருப
வொளியேநான் வாழு முலகு. ௩௩

2130. எவ்வருளென் னுருயிருக் கேமநிலை கூட்டியதோ
அவ்வருளே யாமென் னரண். ௩௪

2131. ஆன்ம சொருப வருட்சிற் பரவெளியே
யான்மடுத்த முத்தி யியல். ௩௫

2132. அறிவா வகத்தொளிர்நல் லாண்டவன்சீ பாத
வுறவே யெனக்குத் துறவு. கசு

2133. கற்பனையை மாற்றினன்* கண்ணுர் கழல்வடிவச்
சிற்பரமென் னுண்மைத் திரு. கஎ
* மாற்றினன் - மாற்றியவனது.

2134. அளைந்தகுரு நாத் னருளா லகத்துத்
தெளிந்தவென் னுண்மை சிவம். கஅ

2135. பேரின்ப வெள்ளப் பெருக்கான் வாண்டவன்பாற்
கூரன் படியேன் குணம். கசு

2136. நிறைவுணர்வா மோனமே நெஞ்சத் தெனக்குக்
குறைதீ ருதார குணம். உ0

( கோச்சகக் கலிப்பா )

2137. ஆன்ம சொரூப வருளாலே யானெனும்பா
மூனமயல் பேர வொளிவெளியா வுள்ளத்துத்
தானெளிர்த ஓற்ற சதாமுத்தி யானநிலே
நானடைந்த சுத்தமெய்ஞ் ஞானனு பூதியே. உக

2138. போக்குவர வற்றவருட் பூரணமா வென்னகத்து
நீக்கமறப் பொங்கு நிராமயமாந் தன்னேயெனக்
காக்கமாக் காட்டி யருளியசற் போதகுரு*
நோக்கமே மிக்கபெரு நோன்பாந் தவமெனக்கே. உஉ

## 121. அடியவரை யழைத்தல்

( கோச்சகக் கலிப்பா )

2139. அருளவாக் கொண்டமெய் யன்பர்காள் ஆண்டா
னருட்கடலா வுள்ளான் ; அவன்பாலே செல்வீர்க்
கருள்பற்றக் கொள்ள வகன்றமன மூண்டேல்
அருளேநீர் வேணமட்டு மள்ளியுண்ண வாமே. க

## 122. வாழ்த்து

( கொச்சகக் கலிப்பா )

2140. பாழி லமிழ்ந்து பதையாது தன்னடிச்சா
ரேழையா மென்னை யினிதினுவந் தேற்றருளி
வாழியெனத் தன்சொருப வண்பகத்தில் வாசமா
வாழவைத்த வாண்டவன்சீர் வாழ்த்தி மகிழ்வேனே. க

2141. தளைந்தபசு பாசத் தடுமாற்றந் தீர
அளைந்தசிவ புண்ணியத்தா லார்ந்தவிசா ரத்தால்
உளைந்ததும்பப் பொங்கு முதாரவியல் வாழ்வா
விளைந்த சொருபவருள் வித்தகத்தான் வாழி. உ

2142. எங்குங் கலந்தொளிர்பே ரின்பவருட் போதவுருத்
தங்கவுரை காணிற் சதகோடி மாற்றினுமிக்
குங்கதிகங் காணென் றுவந்தருளிச் செய்தபொன்
னங்கப்ப னனவென் னண்டவன்றாள் வாழியே. ௩

குறிப்பு :—உங்கு - ஊங்கு என்பதன் குறுக்கம் ;
பொன்னங்கப்பன் - பொன்னார் மேனியப்பன்
(அங்கம் - மேனி, சொருபம்.)

2143. புந்திசெய்வா ருள்ளம் பொலியக் கிளர்சொருப
விந்தைசேர் ஞான விசார வொளிபரப்பி
எந்தையருட் கோயில் இரவிமதி யுள்ளவரை
எந்தமதத் தோர்க்கு மிதயமா வாழியே. ௪

## 123. முடிவுரை

( குறள் )

2144. ஆண்டவனை நான்சேர்ந் தனுபவித்த மோனவருள்
ஈண்டவனை வர்க்கு மினிது. க

2145. நெஞ்சி லகண்டமா நின்றொளிரும் போதவருள்
விஞ்சையொளி வெல்க நிலத்து. உ

**ஸ்ரீ ரமணார்ப்பண மஸ்து**